# சாவித்ரியில் ஒரு பயணம்

(ஸ்ரீ அரவிந்தரின் மகாகாவியமான சாவித்ரியைப் பற்றிய கட்டுரைகள்)

பிரேமா நந்தகுமார்





Savitri
BHAVAN



டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்கள், ஸ்ரீஅரவிந்தரின் வாழ்க்கை சரித்திரத்தை எழுதியவரும், 1954இல் "சாவித்ரி"யின் முதல் தொகுதி பல்கலைகழக பதிப்பாக வெளிவந்தபோது, முதன்முதலில் சாவித்ரி பற்றிய சொற்பொழிவுகளை வழங்கியவருமான பேராசிரியர் திரு.ஸ்ரீனிவாச அய்யங்காரின் புதல்வி ஆவார். நாங்கள் அனைவரும் அவரை பிரேமாஜி என்றே அழைப்பது வழக்கம். பிரேமாஜிக்கு சாவித்ரியை குழந்தை பருவத்திலேயே அறிமுகம் செய்துவைத்தார் அவருடைய தந்தையார். ஸ்ரீஅரவிந்தரின் தலைசிறந்த காவியமான சாவித்ரியையே தனது தத்துவஆராய்ச்சி பட்டத்திற்கு தேர்ந்தெடுத்தார். இந்த ஆய்விற்காக 1961ல் summa cum laude எனும் மிக உயர்ந்த பாராட்டினையும் பெற்றார். ஸ்ரீஅன்னையின் விருப்பத்தின்படி இவருடைய ஆய்வு 1962ல் ஸ்ரீஅரவிந்த ஆசிரமத்தினால் புத்தகமாக வெளியிடப்பட்டது. ஆங்கிலம், தமிழ், தெலுங்கு, சம்ஸ்கிருதம் என பல மொழிகளில் புலமை பெற்றவர். பலராலும் விரும்பப்படும் பேச்சாளராக எழுத்தாளராக திகழ்பவர். தனது பரந்த இலக்கியப்புலமை, அதே சமயம் எளிமையாக அணுகுதல் என தனக்கே உரிய பாணியில் சாவித்ரியை எடுத்துரைப்பதில் வல்லவர்.

# உள்ளடக்கம்

# பதிப்புரை

ஸ்ரீ அரவிந்தரின் மந்திர காவியமான சாவித்ரியை நன்கு புரிந்துகொள்ளத் தேவையான நூல்கள், சாவித்ரி பற்றிய சொற்பொழிவு மற்றும் பல சாதகர்கள் வாசித்த சாவித்ரி ஒலிக்குறுந்தகடுகள், வீடியோக்கள், ஓவியங்கள் என அனைத்தையும் சேகரித்து அதனைப்பலரும் பயன்படுத்தும் விதத்தில் வைக்கப்பட்டுள்ள இடமே சாவித்ரி பவன். சாவித்ரி பவன் ஆரோவில்லில் உள்ளது. ஆரோவில்லில் நான்கு மொழிகள் உபயோகப்படுத்தப்பட வேண்டுமென்று ஸ்ரீஅன்னை கூறியிருக்கிறார்: ஆங்கிலம் பன்னாட்டு மொழி, தமிழ் அங்குள்ள உள்ளூர்வாசிகளின் மொழி, பிரஞ்சு, சம்ஸ்கிருதம் எதிர்காலத்தில் இந்தியாவின் தேசியமொழியாக ஆக வேண்டும் என அவர் விரும்பினார். இதை கருத்தில் கொண்டு சாவித்ரிபவனின் செயற்பாடுகளும் அதன் வெளியீடுகளும் இந்நான்கு மொழிகளிலும் அமைக்கப்படுகின்றன.

"சாவித்ரி ஸ்ரீஅரவிந்தரின் தீர்க்கதிருஷ்டியின் பரம வெளிப்பாடே", "சாவித்ரி உலகின் திருவுருமாற்றத்திற்கான மந்திரம்" என ஸ்ரீஅன்னை கூறியது போல உலகம் முழுவதும் சாவித்ரி பற்றிய ஆர்வம் நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டே வருகிறது. தமிழ் மக்களுடைய சாவித்ரி பற்றி அறிந்து கொள்ளும் ஆர்வமும் நாளுக்கு நாள் அதிகரித்துவருவதால் அதனை ஈடுசெய்ய சாவித்ரிபவன் சில புத்தகங்களை வெளியிட்டுவருகிறது.

டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்கள் தமிழ் கூறும் நல்லுலகிற்கு நன்கு அறிமுகமானவர். சாவித்ரி மகாகாவியம் பற்றிய சொற்பொழிவுகளை பல இடங்களில் அவர் அளித்துள்ளார். டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்கள், ஸ்ரீஅரவிந்தரின் வாழ்க்கை சரித்திரத்தை எழுதியவரும் முதன்முதலில் சாவித்ரி பற்றிய சொற்பொழிவுகளை வழங்கியவருமான பேராசிரியர் திரு.ஸ்ரீனிவாச அய்யங்காரின் புதல்வி ஆவார். நாங்கள் அனைவரும் அவரை பிரேமாஜி என்றே அழைப்பது வழக்கம். பிரேமாஜிக்கு சாவித்ரியை குழந்தை பருவத்திலேயே அறிமுகம் செய்துவைத்தார் அவருடைய தந்தையார். ஸ்ரீஅரவிந்தரின் தலைசிறந்த

காவியமான சாவித்ரியையே தனது தத்துவஆராய்ச்சி பட்டத்திற்கு தேர்ந்தெடுத்தார். இந்த ஆய்விற்காக 1961ல் summa cum laude எனும் மிக உயர்ந்த பாராட்டினையும் பெற்றார். ஸ்ரீஅன்னையின் விருப்பத்தின்படி இவருடைய ஆய்வு 1962ல் ஸ்ரீஅரவிந்த ஆசிரமத்தினால் புத்தகமாக வெளியிடப்பட்டது. ஆங்கிலம், தமிழ், தெலுங்கு என பல மொழிகளில் அனைவராலும் விரும்பப்படும் பேச்சாளராக எழுத்தாளராக திகழ்பவர். தனது பரந்த அறிவாற்றலை தனக்கே உரிய பாணியில் சாவித்ரியை எடுத்துரைப்பதில் வல்லவர்.

சாவித்ரி பவனிலிருந்து வெளியாகும் தமிழ் இதழான ப்ரார்த்தனாவில் டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்களின் சாவித்ரி கட்டுரைகள் நவம்பர் 2007 முதல் தொடர்ந்து பிரசுரிக்கப்படுகின்றன. முதலில் இக்கட்டுரைகள் அவர் சாவித்ரிபவனில் ஆற்றிய உரைகளின் எழுத்தாக்கமாக வெளியிடப்பட்டன. சமீபகாலமாக எங்களுடைய வேண்டுகோளுக்கிணங்க சாவித்ரியின் 12 நூல்களையும் விவரிக்கும் விதமாக தொடர்கட்டுரைகள் எழுதிவருகிறார். இப்புத்தகம் இத்தொடர் கட்டுரைகள் முழுவதையும் ஆசிரியரின் அறிமுகவுரையையும் கொண்டுள்ளது. இப்புத்தகம் சாவித்ரி ஆர்வலர்களுக்கு ஓர் வரப்பிரசாதமாக அமையும் என நம்புகிறோம்.

# முன்னுரை

சாவித்ரி மாகாவியத்தின் முதல் காண்டம் 1946இல் பிரசுரமாயிற்று. முழுமையாக 1954இல் வெளியிடப்பட்டது. அன்றிலிருந்து இன்று வரை இந்நூல் அறிஞர்களின் அஞ்சலி, பகதர்களின் கைகூப்பு பெற்றவாறு, உலகெங்கும் ஆன்மிக ஒளியைப் பரப்பிக்கொண்டிருக்கிறது.

சிறு வயதில் என் தந்தையார் இக்காவியத்தைப் படித்துக் கேட்டதுண்டு. பின்னாட்களில் ஆந்திரப் பல்கலைக் கழகத்தில் அவரது மாணவியாக, சாவித்ரி பற்றிய ஆய்வேடு தயாரித்து முனைவர் பட்டம் பெறும் பாக்கியம் பெற்றேன். "உன் வாழ்க்கை செம்மையுற இக்காவியம் தெய்வீக வழிகாட்டியாக இருக்கும்" என்று அவர் கூறிய ஆசிகள் சத்தியவார்த்தை ஆயின. என் வாழ்வில் நான் பெற்றுள்ள அனைத்து நன்மைகளுக்கும் ஸ்ரீஅரவிந்தர், ஸ்ரீ அன்னை அருளைப்பொழியும் சாவித்ரிகாவியமே என்றால் மிகையல்ல.

இங்கிலாந்தில் உள்ள பல்கலைக்கழகங்களைச் சேர்ந்த பேராசிரியர்கள் விவியன் ஸோலா பிண்டோ, ஹெச்.ஓ.வயிட் மற்றும் டி.ஜே.பி.ஸ்பென்ஸர் மூவரும் என் ஆய்வேட்டினை முனைவர் பட்டத்திற்கு ஏற்றதை ஸ்ரீ அன்னையரிடம் தெரிவித்தபோது உடனே அந்நூலை அச்சிடுமாறு அருளினார். ஸ்ரீஅரவிந்த ஆசிரமத்தின் வெளியீடாக 1962இல் ஸாவித்ரி: ஓர் ஆய்வு (A Study of Savitri) வெளிவந்தது.

அரை நூற்றாண்டிற்கும் மேலாக இப்புனித நூலெனும் இன்ப வாரியில் நனைந்தவாறு இருக்கிறேன். என்னை சாவித்ரியில் ஆற்றுப்படுத்திய என் தந்தை, தன் வாழ்நாள் முழுவதும் சாவித்ரியைப்படிப்பதிலும் மொழிபெயர்ப்பதிலும் ஈடுபட்ட என் தாய் இருவருக்கும் தலையன்றிக் கைம்மாறிலேனே.

அன்பே உருவான திருமதி ஷ்ரத்தாவன் அன்னையின் அருட்செல்வி, சாவித்ரி பவனத்தை ஒரு மகாசரஸ்வதியின் சன்னிதானமாக உருவாக்கியிருக்கிறார். அவர் கேட்டுக்கொண்டபடி தமிழில் இந்நூலை எழுதியிருக்கிறேன். முதன்முறையாக சாவித்ரி

காவியத்தைப்படிப்பவர்களுக்கு இந்நூல் ஒரு கைவிளக்காக உதவும் என்பது எங்கள் நம்பிக்கை. சாவித்ரியில் ஒரு பயணம் எனும் இந்நூலை அச்சிடுவதற்கான பணிகளை இன்முகத்துடன் ஏற்று உதவிய திருமதி தனலக்ஷ்மிக்கு என் நன்றி.

சாவித்ரி மகா காவியத்தை புரிந்துகொள்ள முனைவதைவிட, இம்மந்திரகாவியத்தை அனுபவிப்பதே யோகம் என்றார் அன்னை. சாவித்ரியைப் படித்தால் அன்னையே இந்த அனுபவம் தருவாள் என்பதில் சந்தேகமுண்டோ?

அவளே நமக்கோர் பொற்பாலம், அற்புதமான நெருப்பு.
அறியவொண்ணாததின் ஒளிமிகு இதயமவள்,
இறைவனின் ஆழத்தில் இருக்கும் மௌனசக்தி.
அவள்தான் மகாசக்தி ...

(சாவித்ரி, பனுவல் III, காண்டம் 2)

பிரேமா நந்தகுமார்

முதல் திருமாளிகை
152/91, தெற்குச்சித்திரை வீதி
ஸ்ரீரங்கம் - 620 006.

# சாவித்ரி உதயம்

ஸ்ரீ அரவிந்தரின் நூல்கள் அனைத்துமே தெய்வ வாக்கு. ஆயினும், சாவித்ரியைப் பிரத்தியேகமாகக் கொண்டாடுவதற்கு ஒரு காரணம் இருக்கிறது. ஸ்ரீ அரவிந்தரின் அமுத மொழிகளைக் கிரமமாகப் படிப்பதில் ஓர் இன்பம் உண்டு. அதுவும், சனாதன தர்மத்தின் உயிர் நிலைகளைத் தன்னுள் பொதிந்துகொண்டு, ஒரு கட்டுக்கோப்பான திவ்ய சரிதம் மூலம் மகாயோகி கண்ட தரிசனத்தை நமக்குக் காட்டுவதால், சாவித்ரி செழுமறையாகவே விளங்குகிறது. வேத காலத்திலிருந்து பல்லாயிரம் ஆண்டுகள் இந்தியனின் யதார்த்த மற்றும் ஆன்மிக அனுபவங்களில் தோய்ந்த இச்சரிதம் மகாகாவியமாக மலர்ந்திருப்பது நம் பாக்கியம். தெய்வத்தை நேருக்கு நேர் சந்தித்து நம் ஆன்மபலத்தைப் பெருக்கிக்கொள்ள உதவும் விசையாக சாவித்ரி இருப்பது உண்மை.

இந்திய இலக்கியத்தைப் படிக்க ஆரம்பித்தவுடன் இராமாயணம், மகாபாரதம் எனும் இரண்டு நூல்களும் ஸ்ரீ அரவிந்தரின் சிந்தையை ஆக்கிரமித்துக்கொண்டன. அவற்றில் வரும் கதாபாத்திரங்கள் வெறும் கற்பனையல்ல, மனித குலத்தின் அனுபவங்களே இக்காவியங்கள் எனும் உண்மையைத்தேர்ந்தார். நூறாண்டுகளுக்கு முன்பே சாவித்ரி உபாக்யானம் அவரைச் சிந்திக்கவைத்தது. "வியாசர் ஒரு பெண்ணின் மௌனமான காதலின் ஆற்றலை நிரூபிக்கிறார். அன்பிற்கும் மரணத்திற்கும் இடையே நடக்கும் போரினை பல கவிகள் கற்பனை செறிவுடன், உணர்ச்சிகளின் கொந்தளிப்புகளுடன் வர்ணித்திருக்கக்கூடும். ஆனால் சாவித்ரியை நமக்கு ஒருவரால்தான் தரமுடியும்."

ஆம், வியாசரின் சாவித்ரி ஆன்ம வீராங்கனை. வியாசரின் சாவித்ரி உபாக்யானத்தினால் கவரப்பட்டு, பரோடாவில் பேராசிரியராக இருந்தபோதே இக்கற்புக்கரசி பற்றி ஸ்ரீ அரவிந்தர் ஒரு கவிதை எழுத ஆரம்பித்தார் என்று தெரிகிறது. ஆனால் அரசியல் ஈடுபாடு காரணமாக அவர் கவிதையைத் தொடரவில்லை போலும். முதன் முறை

அவரது கையெழுத்தில் கிடைக்கும் சாவித்ரி கவிதையில் 1916 எனும் ஆண்டு குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதுவும் முழுமையானதாக இல்லை. ஸ்ரீ அரவிந்தர் இக்கவிதையை மண்ணும், விண்ணும் என இரண்டு பாகத்தில் எழுத உத்தேசித்திருந்திருக்கிறார். அப்பொழுது அவருக்கு அதிமானஸ அனுபவங்கள் ஏற்படவில்லை. 1920-இல் ஸ்ரீ அன்னையார் புதுச்சேரியை தனது ஸ்திரமான இருப்பிடமாகக் கொண்ட பிறகு, ஸ்ரீ அரவிந்தரின் யோகமும் உயர் நிலைகளை அடைந்தது. 1926-ஆம் ஆண்டு சித்தி பெற்ற நிலையிலே, சாவித்ரியின் சரிதம் மூலம் தமது ஆன்மிக அனுபவங்களை விளக்கமுடியும் என்று நினைத்தார் போலும். மீண்டும் இப்புனித சரிதத்தை எழுதவாரம்பித்தார். சாவித்ரி காவியத்தை எழுத ஆரம்பித்தபோது அன்னையிடம் கூறினார்:

"நான் ஒரு புதிய சாகசத்தில் பிரவேசித்திருக்கிறேன் - முதலில் சற்று சந்தேகப்பட்டாலும் இப்பொழுது நான் நிச்சயித்துவிட்டேன். ஆயினும், எவ்வளவு வெற்றி பெறுவேனோ தெரியாது. அகண்டமெனும் பரவெளியிலே, துடுப்பு இல்லாத கப்பலில் நான் பயணிக்க ஆரம்பித்துவிட்டேன்."

ஸ்ரீ அரவிந்தர் தமது பள்ளி நாட்களிலிருந்தே கவிதை எழுதி வந்தவர்தான். யோகம் புரியும்போதும் கவிதையில் தன் அனுபவங்களை எழுதுவார். அவரது சானெட் எனப்படும் கவிதைகளில் அவரது ஆன்மிக அனுபவங்களின் ஒளி சிந்துவதைக்காணலாம். இப்பொழுது முழுமையான மாகாவியத்தில் தனது அனுபவங்களை கோர்த்தெழுத ஆரம்பித்தார். சம்ஸ்கிருதத்திலும், வங்காளியிலும் ஓரளவு சரளமாக எழுத ஆரம்பித்தாலும், தனது மாகாவியத்திற்கு ஆங்கிலமொழியைத் தேர்ந்தார். இதற்கான யாப்பு தமிழில் ஆசிரியப்பாவை ஒத்த ஆங்கில ப்லாங்க் வர்ஸ் (blank verse) பொருத்தமாக இருக்கும் என்று நினைத்தார். இந்த ஆங்கில யாப்பு வகையிலே வில்லியம் ஷேக்ஸ்பியர், டென்னிஸன் போன்றோர் பல வெற்றிகள் கண்டிருக்கின்றனர். ஜான் மில்டன் தனது "இழந்த சொர்க்கம்" மாகாவியத்தை இந்த யாப்பில்தான் வடித்திருக்கிறார். இக்கவிஞர்கள் அனைவரது நூல்களையும் படித்து விவரமாக ஸ்ரீ அரவிந்தர் கட்டுரைகள் எழுதியிருக்கிறார்.

அதே நேரத்தில், ஆங்கில யாப்பின் வெற்றுப்படியாக தமது கவிதை வரிகள் இருப்பதில் ஸ்ரீ அரவிந்தருக்கு இஷ்டமில்லை. அவரது ஆங்கிலக் கவிதையில் சமஸ்கிருத வடிவமும் இருக்கவேண்டும் என்பது அவரது ஆசை. வியாசரின் கம்பீரம், வால்மீகியின் தெளிவு,

உபநிஷதங்களில் காணும் மறைஞானம், காளிதாசனின் வியத்தகு கற்பனை அனைத்தையுமே தமது சாவித்ரி காவியத்தில் கொணடுவர முயற்சித்தார். இம்முயற்சி பற்றி அடிக்கடி திரு. கெ.டி.சேத்னாவுடன் கடிதப்பரிமாறல் நடந்தது. காவியமும் முன்னேறியது.

1938- ஆம் ஆண்டு ஸ்ரீ அரவிந்தருக்கு காலில் எலும்பு முறிவு ஏற்பட்டது. உடனே அவர் படுக்கையில் பல வாரங்கள் இருக்க வேண்டியதாயிற்று. அதனால் அவருடன் ஒரு சிலர் கூடவே இருக்க நேர்ந்தது. அவரும் சாவித்ரியை விரிவுபடுத்தத் தொடங்கினார். நிரோத்பரன் அவர்கள் டாக்டர் என்ற முறையில் ஸ்ரீ அரவிந்தருக்கு சேவை செய்வதோடு, அவர் கூறுவதை எழுதவும் ஆரம்பித்தார். 1950-இல் ஸ்ரீ அரவிந்தர் மகாசமாதி வரை இப்பன்னிரண்டு ஆண்டுகள் நிரோத்பரனின் சேவை தொடர்ந்தது.

இரண்டாவது உலகப்போர் நடந்தபோது, சாவித்ரியும் கம்பீரமாக வளர்ந்தது. உலகத்தை நெருக்கும் காரிருள் விலகிட ஸ்ரீ அரவிந்தர் ஒரு தெய்வீக ஒளியையல்லவா புதுச்சேரியிலிருந்து பாய்ச்சிக்கொண்டிருந்தார்! யுத்தம் முடிந்தது. மனித குலம் பிழைத்தது. 1946-ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் முதன் முறையாக ஸ்ரீ அரபிந்தோ மந்திர் அன்னுவல் (Sri Aurobindo Mandir Annual) உஷையெனும் உருவகம் (The Symbol Dawn) எனும் முதல் அத்தியாயத்தை வெளியிட்டது. முதல் வரியே கவிநயம் மிக்கு, படிப்போரைச் சிந்திக்க வைத்தது.

தெய்வங்கள் துயிலெழும் காலத்திற்கு முன் நேரம்.

அதே மாதத்தில் தி அட்வெண்ட் (The Advent) ஐந்தாவது அத்தியாயமான மறை நூல்களிலிருந்து (The Secret Knowledge) ஐம்பது வரிகளை பிரசுரித்தது. சாவித்ரி உதயமானாள்!

ஆண்டுகள் செல்லச்செல்ல, ஸ்ரீ அரவிந்தர் தாம் கைப்பட எழுதுவதைக் குறைத்துக் கொண்டார். அவர் சொல்லும்போது, அவரது வேகத்திற்கு ஈடு கொடுக்க தமது சக்தியையெல்லாம் உபயோகித்து நிரோத் எழுதி வந்தார். ஒரு சமயம் 400 வரிகளை ஸ்ரீ அரவிந்தர் சொன்னபோது அவற்றில் கண்ட அழகு, கவிதையுணர்வு, தத்துவ தரிசனம் பற்றி நிரோத்பரன் சொல்லி மகிழ்ந்திருக்கிறார். சாவித்ரி கவிதையாக, காவியமாக, அச்சிடுவதற்காக, பட்டம் பதவி பெறுவதற்காக எழுதப்படவில்லை. சாவித்ரி இயற்றியது ஒரு தவம். ஒரு மஹாபுருஷர் இவ்வுலகம் உய்ய வழிதேடி செய்த தவம். அதில் சந்தேகமில்லை. தவமும் பலித்தது. சாவித்ரி நிறைவுறும் நேரம் வந்தது. அப்பொழுது ஸ்ரீஅரவிந்தர்

மகாசமாதியில் ஆழ்ந்து விட்டார். தவயோகியின் தரிசனம் என்பதால் தான் இக்காவியத்தைப் படிப்பதே யோகம் என்று ஸ்ரீ அன்னையார் கூறியிருக்கிறார்.

சாவித்ரி காவியத்திற்கு மூல நூல் வியாசரின் மகாபாரதத்தில் வரும் சாவித்ரி உபாக்யானமாகும். காவியத்திற்குச் செல்லுமுன் இவ்வியாக்கியானத்தைச் சற்று பார்ப்போம். வனவாசத்தில் இருக்கும் பாண்டவர்களைப் பார்க்க மார்க்கண்டேய மகரிஷி வருகிறார். "மகாபாக்கியவதியும் பதிவிரதையுமான இந்தத் துருபதகுமாரியைப் போன்ற ஓர் உத்தமஸ்திரீயானவள் உம்மால் இதற்குமுன் பார்க்கப்பட்டிருக்கிறாளா?" என்று யுதிஷ்டிரர் அவரைக்கேட்கிறார். மகரிஷியும் "மகாபாக்கியம் முழுமையும் சாவித்ரி என்கிற ராஜகன்னிகையினால் அடையப்பட்டவிதத்தைக் கேட்பாயாக" என்று விட்டு பதிவிரதா உபாக்யானம் என்று பெருமைப்படுத்தப்படும் சாவித்ரி சரிதத்தை கூறுகிறார். மகாபாரதத்தின் வன பர்வத்தின் ஏழு அத்தியாயங்களில் சுமார் 700 வரிகளில் இச்சரிதம் சொல்லப்படுகிறது.

மத்ர தேசாதிபதியான அசுவபதி வாய்மையும், உயர்ந்தவனுமாக அரசாட்சி செய்துவந்தான். அவனுக்குக் குழந்தை இல்லை. அதனால் சாவித்ரி மந்திரத்தினால் லட்சம் ஆகுதி செய்து தவமியற்றினான். யாககுண்டத்திலிருந்து சாவித்ரிதேவி தோன்றி தன் மகிழ்ச்சியைத் தெரிவித்து அரசனுக்கு ஒரு சிறந்த பெண் மகவு பிறக்குமென்றாள். அதே போல் உரிய காலத்தில் லஷ்மீதேவி வடிவெடுத்து வந்தது போல் (ஸ்ரீர்யேவ) குழந்தை பிறக்கவும், அரசன் சாவித்ரி என்று பெயர் சூட்டினான். சாவித்ரியும் அழகிலும் அறிவிலும் இணையற்றவளாக வளர்ந்தாள். இவ்வற்புதமான பெண்ணை மணந்துகொள்ளும் தைரியம் ஒருவருக்குமில்லை என்பதைக்கண்ட அரசன் சாவித்ரியை தனக்குகந்த மணாளனைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளுமாறு கூறினான். சாவித்ரியும் தந்தை சொல்லை மந்திரமாகக் கொண்டு தபோவனங்களில் சஞ்சரித்தாள்.

ஒரு நாள் நாரத ரிஷி அசுவபதியைக் காண வந்தார். இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போது சாவித்ரி தன் சுற்றுலாவை முடித்துக் கொண்டு திரும்பி வந்தாள். பெரியவர்களை வணங்கி அவர்கள் விருப்பப்படி கானகத்தில் நடந்ததைக் கூறலானாள்: "இராஜ்ஜியத்தையும், கண்களையும் இழந்த சால்வ தேசாதிபதி த்யுமத்சேனர் காட்டில் மனைவியுடனும் மகனுடனும் வசித்துவருகிறார்.

அவருக்குப் பட்டணத்தில் பிறந்தவரும் கானகத்தில் வளர்ந்தவருமான சத்தியவான் எனும் மகன் இருக்கிறார். சத்தியவான் என் மனத்தினால் கணவனாக வரிக்கப்பட்டார்."

இதைக் கேட்டதும் நாரத மகரிஷி, அடடா சாவித்ரி தவறு செய்துவிட்டாளே என்று மனமுருகினார். அசுவபதி தூண்டிக்கேட்டபின் சத்தியவான் மிக நல்லவன் என்று ரிஷி கூறுகிறார். அவன் சூரியனைப் போல் பிரகாசமானவன், ப்ருஹஸ்பதி போல் புத்திசாலி, கருணையுள்ளம் கொண்டவன் என்றெல்லாம் கூறிப்பின் சொல்வார்:

"ஒரே ஒரு தோஷமானது அவனுடைய நற்குணங்கள் அனைத்தையும் மீறி நிற்கிறது. அந்த தோஷத்தை மனித முயற்சியால் மாற்றவும் முடியாது. அந்த சத்தியவானுக்கு இன்று முதல் ஒரு வருஷத்தில் ஆயுள் முடிந்துவிடும்."

தன் கண்ணான பெண்ணுக்கு இப்படியொரு விதியா? அசுவபதி சாவித்ரியை வேறு கணவனைத் தேர்ந்தெடுத்து கொள்ளுமாறு கூறுகிறார். அவளோ தைரியமாக விதியின் சவாலை ஏற்கிறாள்.

"நீண்ட ஆயுளுள்ளவன் ஆனாலும், குறைந்த ஆயுளுள்ளவன் ஆனாலும், குணமுள்ளவன் ஆனாலும் குணமில்லாதவன் ஆனாலும் என்னால் கணவன் ஒரு தடவை வரிக்கப்பட்டுவிட்டான். நான் இரண்டாமவனை வரிக்கமாட்டேன் (ஸக்ருத் வ்ரதோ மயா பர்த்தா ந் த்விதீயம் வ்ருணோம்யஹம்)."

பெரியவர்களும் சம்மதித்து, ஆசீர்வதிக்கிறார்கள். சாவித்ரி சத்தியவான் திருமணம் நடக்கிறது. சாவித்ரியும் காட்டில் அன்பு மனைவியாக, ஆசை மருமகளாக, அற்புதமான இல்லத்தரசியாக ஓராண்டு வாழ்கிறாள். நாரதர் குறித்த கெடுவிற்கு நான்கு நாட்கள் முன்னதாக, த்ரி ராத்திர விரதம் எனும் விரதத்தை மூன்று நாட்கள் அனுஷ்டிக்கிறாள். விரதத்தின் முடிவில் அக்னிஹோமம் செய்து பெரியவர்களை வணங்கி ஆசி பெறுகிறாள்.

விதி குறித்த நாளன்று சாவித்ரியும் சத்தியவானும் காட்டிற்கு கனிவகைகள், சமித்துக்கள், விறகு முதலியன சேகரிப்பதற்குச் செல்கின்றனர். சத்தியவானுக்கு தன்னைப்பற்றிய கொடூரமான உண்மை தெரியாது என்பதால் அவன் மகிழ்ச்சியுடன் காட்டின் அழகிய ஓடைகள், பூத்துக்குலுங்கும் மரங்கள் முதலியவற்றைச் சுட்டிக்காட்டியவாறு பேசுகிறான். சாவித்ரியின் மனமோ வெம்புகிறது. ஆனால் தன் துயரத்தையும் பயத்தையும் வெளிக்காட்டிக் கொள்ளவில்லை.

கட்டைகளைப் பிளக்கும்போது சத்தியவானுக்குத் திடீரென தலையை வலிக்கிறது. சாவித்ரியின் மடியில் படுத்தவாறு கண்ணை மூடிக்கொள்கிறான். அது சமயம் அருகே ஆதவனைப்போன்று ஒளி வீசும் ஒரு தேவன் கையில் பாசத்துடன் நிற்பதை சாவித்ரி காண்கிறாள். சத்தியவானின் தேகத்தைப் புல்லில் கிடத்திவிட்டு தேவனை வணங்கி அவன் யார் என்பதைக் கேட்கிறாள். தான் யமதர்மன் என்றும், சிறந்த குணமுள்ளவனான சத்தியவானின் ஆயுள் முடிந்துவிட்டதால் அவனது உயிரை எடுத்துச் செல்ல தானே வந்திருப்பதாகவும் கூறுகிறான். அதன்படியே, கட்டை விரலளவுள்ள சத்தியவானின் உயிரைப்பிரித்து தன்னுடன் இழுத்துச் செல்கிறான். ஆச்சரியம்! சாவித்ரியும் அவர்கள் பின்னால் செல்கிறாள்.

போகும் வழியில் யமனுக்கும் சாவித்ரிக்குமிடையே ஒரு சம்பாஷணை. சாவித்ரி கூறும் நன்னெறி வசனங்களைப் போற்றி, அவளுக்கு நான்கு வரங்கள் தருகிறான். அவற்றின்படி த்யுமத்ஸேன மகாராஜாவுக்குக் கண்ணொளி திரும்புகிறது. அவர் இழந்த சாம்ராஜ்யத்தைப் பெறுகிறார், அசுவபதிக்கு மக்கட்பேறு கிடைக்கிறது, சாவித்ரிக்கும் சத்தியவான் மூலம் (மமாத்மஜம் ஸத்யவதஸ்தௌரஸம்) நூறு குழந்தைகள் உண்டு என்பது நிச்சயமாகிறது. ஆனால் சாவித்ரி யமனைப் பின்பற்றுவதில் சளைக்கவில்லை. இதுவரை "சத்தியவானின் உயிரைத் தவிர ஏதேனும் வரம் கேள்" என்று கூறி வந்த யமன் கடைசியாக சாவித்ரி கூறும் அறநெறி கேட்டு மகிழ்ச்சியில் திளைக்கிறான். சாவித்ரி நல்ல மனிதர்களுடன் (சத்துவ குணம் நிறைந்த சாதுக்கள்) உறவு நல்ல பயன் தராமல் இருப்பதில்லை என்று பல கூறி முடிவாக

"வாய்மையில் நிற்கும் பெரியோர்களது ஆசிகள் நிறைவேறாமல் போவதில்லை: அவர்களிடம் சுயநலம் ஏதுமில்லை: அவர்கள் கௌரவம் பார்ப்பதில்லை. இம்மூன்று குணங்களும் மஹான்களிடம் இருப்பதால் அவர்கள் உலகின் காப்பாக எண்ணப்படுகிறார்கள்."

இது கேட்ட யமனது மகிழ்ச்சிக்கோர் அளவில்லை. யமன் தர்மராஜன் அல்லவோ? அன்புடன் அவளைப் பார்த்து சொல்கிறான்:

"பதிவிரதையே! அறப்பொருள் நிறைந்ததும், மனத்திற்கு அனுகூலமானதும், நல்ல பதங்கள் உள்ளதும், பல அர்த்தங்கள் நிறைந்ததுமான வசனத்தை நீ சொல்லும் போது உன்னிடம் பக்தி ஏற்படுகிறது. நிகரற்ற ஒரு வரம் கேள்!"

இம்முறை "சத்தியவானின் உயிரை" யமன் தவிர்க்கவில்லை. அதனால் சாவித்ரி சத்தியவானின் உயிரைக் கேட்கிறாள். யமனும் மகிழ்ந்து சத்தியவானது உயிரை தன் பாசத்திலிருந்து விடுவிக்கிறான். இருவரையும் ஆசீர்வதித்து நிலவுலகுக்கு அனுப்புகிறான். இப்படி அரசகுலமானது சாவித்ரியால் உயர்த்தப்பட்டது என்று மார்க்கண்டேயர் தன் உபாக்கியானத்தை முடிக்கிறார்.

இக்கதையைத்தான் ஸ்ரீ அரவிந்தர் 24,000 வரிகளுக்கும் அதிகமான மகாகாவியமாகப் படைத்திருக்கிறார். ஏன் இக்கதையை அவர் தேர்ந்தெடுத்தார்? முதல் காரணம், சாவித்ரி அசாதாரணமான தைரியம் கொண்டவள். எந்த ஒரு சந்தர்ப்பத்திலும் அவள் கண்ணீர் சிந்தவில்லை என்பதை நாம் கவனிக்கவேண்டும். அதுவும் தவிர, யமனிடம் அவள் எதற்காகவும் மன்றாடவில்லை. தவத்தால் உயர்ந்த இப்பெண்ணின் தீவிரத்தையும், இனிய சொற்களையும் கண்டு யமனே முன்வந்து வரங்களைத் தருகிறான். ராஜகுமாரியாக அரண்மனையில் வளர்ந்த இப்பெண், திருமணத்திற்குப்பின் கடின உழைப்புடன் கூடிய மிக எளிய வாழ்க்கையை மேற்கொள்கிறாள். இந்த உபாக்கியானத்தில் வருபவர்கள் அனைவருமே நல்லவர்கள்தான். விதி என்பதே இங்கு உள்ள முடிச்சு. அதை அவிழ்த்து மானுட வாழ்க்கையை செப்பமிடுவதே வியாசரின் நோக்கு. இதற்காக அவர் கண்ட பெண் காலம் காலமாக இந்தியர்களுக்கு ஒரு வழிகாட்டியாகிவிட்டாள்:

பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பெனும்
திண்மையுண் டாகப்பெறின்.

சாவித்ரி என்னும் பெண்ணிடம் ஒரு தவயோகியின் வலிமை இருப்பதை வியாசர் கண்டுணர்ந்திருக்கிறார் என்பதை ஸ்ரீ அரவிந்தர் கவனித்திருக்கிறார். சாவித்ரியைப் பற்றி பல அடைமொழிகளை வியாசர் உபயோகிக்கிறார்: கன்யா தேஜஸ்வினி, தபோன்விதா, தியான யோக பராயணா என்று பல சொற்கள்.

இதுபோலவே, மரணத்தை வென்றிட இப்பெண் செய்த விரதத்தைப்பற்றி யோசித்திருக்கிறார். மூன்று இரவு விரதம் என்றால் என்ன? மூன்று நாட்கள் உபவாசம். கட்டை போல் நிற்கிறாளாம். (காஷ்டபூதேவ). அப்படியென்றால், யோகத்தின் மேல் நிலைகளில் உடல் அசைவற்றுப்போகும் அல்லவா? அது எப்படிப்பட்ட

யோகம் என்று ஒரு கேள்வி. சத்தியவான் யார்? அவனுக்கு ஏன் அந்தப் பெயர்? யமனிடம் சாவித்ரி கூறியவற்றில் என்ன பொருள் பொதிந்திருந்தது?

ஸ்ரீ அரவிந்தரது ஆன்மிகத் தேடல்கள், காட்சிகள் அனைத்தையும் அவர் ஆங்கில நூல்களாகத் தந்திருக்கிறார். அவரது தத்துவத்தை திவ்விய ஜீவனம் (The Life Divine) விரிவாக விளக்குகிறது. இந்நூல் 1920-ஆம் ஆண்டுக்கு முன்பாக எழுதப்பட்டது. அதற்குப்பின் அவருக்கு ஏற்பட்ட ஆன்மிக அனுபவங்களை 1950-இல் கட்டுரைகளாக வெளியான "மண்ணுலகில் அதிமானஸ அவதாரம்" (The Supramental Manifestation Upon Earth) எனும் நூலில் எழுதி வைத்திருக்கிறார். அவரது "யோகங்களின் ஒருமைப்பாடு" (The Synthesis of Yoga) கர்ம, ஞான, பக்தி, தந்த்ர யோகங்களை விளக்குகிறது. ஆயினும் வெறும் விளக்கம் நமக்குப் போதுமானதாக இல்லை. சத்தியத்திற்கும் தர்மத்திற்கும் எவ்வளவு விளக்கம் தந்தாலும், "இதோ இராமன்" என்று சத்தியத்திற்கும் தர்மத்திற்கும் ஓர் உருவகத்தைக் காட்டும் போது அத்தத்துவங்கள் புரிகின்றன: கொடைக்கு உருவகம் கர்ணனாக, சபதம் ஏற்று அதை செய்துகாட்டுவதற்கு பீஷ்மனாக நமக்கு நாம் அறியக்கூடிய வகையில் உருவகங்கள் வேண்டும். இவை வெறும் உருவகங்களாக இல்லாமல் உயிருடன் நடமாடும் உருவங்களாகவும் இருக்கவேண்டும். அப்பொழுது தான் நமக்கு இராமன் போல் அறவழி நிற்க வேண்டும், கர்ணன் போல் தர்மம் செய்ய வேண்டும், பீஷ்மன் போல் கொள்கையை விடாமல் பற்ற வேண்டும் என்ற ஆர்வங்கள் மனத்தில் எழும்பும். இந்த ஆர்வங்களே வளர்ந்து யோகநெறியாக நம்மை முன் நடத்தும். அந்த வகையிலே ஸ்ரீ அரவிந்தர் அருளிய யோக வாழ்வினுக்கு முன்னுதாரணமாக, வழிகாட்டியாக அவரது மாகாவியத்தின் கதாநாயகி விளங்குகிறாள். இக்காவியம் காட்டும் அவளது சரிதத்தைப்படிப்பதே யோகம் என்று ஸ்ரீ அன்னையவர்கள் கூறியது முற்றிலும் உண்மை. சரித்திரத்தைப் படிக்கும்போதே, ஸ்ரீ அரவிந்த யோகத்தின் முதற்படியில் நம்மால் ஏறிவிட முடிகிறது.

பொதுவாக ஸ்ரீ அரவிந்தரின் சாவித்ரி மாகாவியம் செழுமிய ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருப்பதால் புரிவதில்லை என்று சொல்வதுண்டு. உண்மையில் அப்படியல்ல. ஆங்கிலம் நமது நாட்டு மொழி அல்லாததால் நமக்கு அதனருகில் செல்ல பயமாக இருக்கிறது போலும்! காரணமின்றி ஸ்ரீ அரவிந்தர் தன் வாழ்க்கையில் எதுவும் செய்யவில்லை.

அவருக்கு வங்காளியும் சம்ஸ்கிருதமும் நன்கறிந்த மொழிகளே. அவற்றில் பாடல்கள், இயல்கள் எழுதியிருக்கிறார். ஆனால் அவரது கண்ணோட்டத்தில் ஆங்கிலமே உலகளாவிய மொழியாகி வருவதால், அம்மொழியில் காவியத்தை இயற்றினார். மேலும், ஆங்கிலத்தில் ஆன்மிகசொற்கள் மிகவும் சொற்பம். பாரதத்தின் பழம்பெரும் தத்துவங்களையும் இலக்கியங்களையும் உலகத்திற்கு ஆங்கிலம் மூலம் கொண்டு செல்லும்போது, ஆங்கிலத்தில் ஆன்மிக வளம் நிறையும் என்று அவர் கூறியிருக்கிறார்.

இன்னுமொன்று, நமது மறை நூல்கள் ஒன்றல்ல, இரண்டல்ல, ஆன்மிக இலக்கியத்தில் இந்தியாவிற்கு இணையாக வேறு நாடு கிடையாது. நம்மை வேதங்களின், உபநிஷத்துக்களின், இதிகாசங்களின் குழந்தைகள் என்று கூறிப் பெருமைப்படுகிறோம். ஆனால் நமது மறைகள் அனைத்தையும் படித்துவிட்டோமா? அவற்றைப் புரிந்து கொண்டுவிட்டோமா? இன்றைய வாழ்க்கை ஒரு தேடல்தான். ஆன்மிக வாழ்க்கையும் இறைவனை சந்திக்கும் வேளை வரும் வரை ஒரு மாபெரும் தேடல்தான். அத்தேடல் இன்னும் எத்தனை பிறவிகள் தோறும் நடக்குமோ நமக்குத்தெரியாது. அத்தேடலில் இம்மறைகள் தமது தெய்வீக வாக்குகள் மூலம் நமக்குத் துணை புரிகின்றன. நமக்கு திருநாவுக்கரசர் தேவாரம் முழுவதும் தெரியாமல் இருக்கலாம். அவர் அருளியுள்ள ஆயிரமாயிரம் செய்யுட்களைப் புரிந்து கொள்ளாவிட்டாலும் ஒரு சில தெரிந்து கொண்டால் போதுமே!

"மனத்தகத்தான் தலைமேலான் வாக்கினுள்ளான்
வாயாரத் தன்னடியே பாடுந்தொண்டர்
இனத்தகத்தான் இமையவர்தஞ் சிரத்தின் மேலான்
ஏழண்டத் தப்பாலான் இப்பாற் செம்பொன்
புனத்தகத்தான் நறுங்கொன்றைப் போதி னுள்ளான்
பொருப்பிடையான் நெருப்பிடையான் காற்றினுள்ளான்
கனத்தகத்தான் கயிலாயத் துச்சி யுள்ளான்
காளத்தி யானவனென் கண்ணு ளானே"

இப்படிப்பாடுவதே, படிப்பதே, தேடுவதே இன்பம்தான். இதுவே ஆண்டாளின் ஆயர்ப்பாடிப் பெண்கள் கண்ட அனுபவம். ஒருவரை

ஒருவர் அழைத்துக்கொண்டு, இறைவனின் திருநாமம், அவன் சரிதம் பாடிக்கொண்டு நீராடச் செல்வதே அவர்களுக்கு யோகமாயிற்று. உரையாசிரியர் பெரியவாச்சான் பிள்ளை கூறுவதுபோல் "போகையே பிரயோஜனமாக நின்றார்கள்."

அதுபோல, சாவித்ரியைப் படிப்பதே பிரயோஜனம். நம் ஆன்மிக வாழ்க்கைக்கும் அன்றாட வாழ்க்கைக்கும் ஆரோக்கியம் சேர்க்கும். அதே சமயம் நம்மை உன்னத பரிணாமங்களுக்கும் இட்டுச் செல்லும் என்பதிலும் சந்தேகமில்லை. இதை ஒருமனப்பட்ட நிலையில் படிக்கும்போது நமக்கு முன்னும் பின்னும் இரு பக்கங்களிலும் ஸ்ரீ அரவிந்தரும் ஸ்ரீ அன்னையுமே வந்திருந்து காவியத்தைத் தெளிவுபடுத்துகிறார்கள் என்பது பெரியவர்கள் உணர்ந்த அனுபவம்.

இவ்வுயர்நிலைகளை எட்டும் பரிணாமத்தை காவியத்தின் ஆரம்பத்திலும் முடிவிலும் நாம் காண்கிறோம்.

தெய்வங்கள் துயிலெழும் காலத்திற்கு முன் நேரம்.

இப்படி சாவித்ரியைப் படிக்க ஆரம்பிக்கும்போது ஒரு கனமான இருளில் இருக்கிறோம். நம்மை நாம் அறிந்துகொண்டாலும், ஏனைய உலகம் அனைத்தும் இருளில் மூழ்கியிருப்பதுபோல் தெரிகிறது. இந்த எண்ணம் நம்முள் ஏதோ ஒரு வேதனையை, பயத்தைத் தோற்றுவிக்கிறது. இவ்விருளுக்கு முடிவில்லையா? மீண்டும், மீண்டும் மனிதனது வாழ்க்கை ஒரு பொருளற்ற மரணத்தில் தான் முடியவேண்டுமா? நம்மால் தெய்வத்தைச் சந்திக்க முடியாதா? நம்மால் தெய்வீக பரிணாமங்களை எய்த முடியாதா? காவியத்தின் இந்த ஆரம்ப வரிகள் நம்மாழ்வாரின் தலைவி பாசுரத்தை நினைப்பூட்டுகின்றன.

"ஊரெல்லாம் துஞ்சி உலகெல்லாம் நள்ளிருளாய்
நீரெல்லாம் தேறியோர் நீளிரவாய் நீண்டதால்
பாரெல்லாம் உண்டநம் பாம்பணையான் வாரானால்
ஆரெல்லே! வல்வினையேன் ஆவிகாப் பாரினியே"

நமது ஆவியைக்காக்க எங்கிருந்தோ உஷையின் கீற்று உலகத்தின் இருளை நீக்கவருகிறது. அக்கீற்றே துணையாக அன்றைய தெய்வீக நாடகத்தில் ஆழ்ந்து போகிறோம். சாவித்ரி துயிலெழுகிறாள்,

சத்தியவானுடன் கானகம் செல்கிறாள், மரணதேவன் சத்தியவானின் உயிரை எடுத்துக்கொண்டு செல்கிறான், அவனைப்பின்பற்றி, அவனுடன் வாதம் செய்து, முடிவில் மரணதேவனைத் தன் ஒளிப்பிழம்பான விசுவரூபம் மூலம் அழித்து சத்தியவானை மீட்டுக்கொண்டு த்யுமத்ஸேனன் வாழும் ஆசிரமத்திற்கு திரும்புகிறாள். இக்காவியத்தைப் படிக்கும்போது ஒரு முழு நாளைக்கடந்திருக்கிறோம். உலகத்தின் ஆன்மாவே காப்பாற்றப்பட்ட நிலையிலே இப்புதிய இரவு பலகோடி ஆர்வங்களைக் காட்டுகிறது. காவியத்தின் கடைசிவரிகளில் வர்ணிக்கப்படும் இந்த இரண்டாவது இரவு நம்மை அச்சுறுத்தவில்லை. இந்த இரவில் சந்திரனொளியில மண்ணகம் வெள்ளிமயமாகத் தெரிகிறது. தெய்வீக ஒளிக்கற்றைகளிலே தன்னை காப்பாற்றிக் கொண்டு இந்த இரவு ஒரு புதிய, பேரானந்தப்பெருவெள்ளம் பாய்ச்சும் உஷையை வரவேற்க தவமிருக்கிறது என காவியம் நிறைவுறுகிறது. ஸ்ரீ அரவிந்தரும் ஸ்ரீ அன்னையும் இந்த நம்பிக்கையை நம்முள்ளே பதித்துவிட்டிருக்கிறார்கள். நமக்கினி பயமேது? எங்கும் தெய்வீக அருளின் காட்சியே!

---

திருக்குறள், 54

திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம், 6-8-5

திருவாய்மொழி, 5-4-1

## 2. தோரண வாயில்

மனித ஜாதி தெய்வீக நிலையை அடைவதற்கான வழியைத்தேடிக் கண்டுபிடிப்பதே ஸ்ரீ அரவிந்தரது நோக்கம். அதற்காக அவர் ஏற்ற யோக வாழ்க்கையில் பல தேன் சிந்தும் தாமரைகள் மலர்ந்தன. ஆன்மிக யோக சாதனையைப் பொருத்தமான குறியீடுகளுடன் இணைத்து, சாவித்ரி மகாகாவியத்தை அவர் இயற்றினார். சாவித்ரி சரித்திரம் அனைவரும் அறிந்ததே. மாற்றவொண்ணா விதியினை மாற்றமுடியும் என்பதைக்காட்டும் சாவித்ரியின் செவ்விய வாழ்க்கையை முன் வைத்து, தனது யோக அனுபவங்களை அசுவபதி, சாவித்ரி இருவரது யோகசாதனை மூலம் விளக்கி, அழகியதோர் பெருங்காவியம் படைத்திருக்கிறார். காப்பிய நாயகி, கணவனைக் காப்பாற்றும் இளம் மனைவி மட்டுமல்ல. மனித குலம் படும்பாட்டிற்கு இரங்கி, இவ்வுலகத்திலேயே மனிதனுக்கு மரணமில்லா நல்வாழ்வு அருளும் பராசக்தியாகவும் ஒளிர்கிறாள் என்பது கண்கூடு.

காப்பியத்தின் முதல் இரு காண்டங்களும் கதைப்போக்கின் உணர்ச்சிமிகு கட்டத்தைச் சேர்ந்தவை. மகாகாவியத்துக்கு தோரண வாயிலாகவும் அமைந்தவை. சென்றதை நினைவுபடுத்தி, வருங்காலத்திற்கு நம்பிக்கையூட்டி, நிகழ்காலத்தை நம்முன் விரிக்கின்றன. மத்ர தேச அரசன் அசுவபதியின் அருமை மகள் சாவித்ரி. நாடிழந்த சால்வ தேச அரசன் த்யுமத்ஸேனனின் மகன் சத்தியவானை அவள் மணந்து ஓராண்டு நிறைவுபெறும் தருணம். காட்டில் சத்தியவானுடனும், அவனது பெற்றோருடனும் குடித்தனம் நடத்துகிறாள். இவ்வாழ்க்கையை மனமுவந்து ஏற்றுக்கொண்டவள். கணவன் மனைவி இருவரும் அன்னியோன்னியமாக வாழ்கின்றனர். சத்தியவான் மிகவும் மகிழ்ச்சியுடன் இருக்கிறான். சாவித்ரியோ மகிழ்ச்சியாக இருப்பதுபோல் காணப்படுகிறாள். அவள் நாரத மகரிஷி கூறியதை நினைத்துக் கொண்டிருப்பதால், சொல்லவொண்ணாத வேதனையில் மனம் வாடுகிறாள். இப்படி ஒருவகையில் இரட்டை வாழ்க்கை. ஒரு பக்கம் அமைதியான இல்லத்தரசி மறுபக்கம் என்ன

நடந்து விடுமோ, எப்படி விதியைத் தடுப்பதோ என்று அலைமோதும் மனம். அந்த நாளும் வந்துவிட்டது

மகாகாவியம் இங்கே தொடங்குகிறது. இரவு மறைந்து இளங்காலை வரும் சமயமாகிவிட்டது :

தெய்வங்கள் துயிலெழும் காலத்திற்கு முன் நேரம்[1].

ஆயிரம் செய்திகளை உணர்த்தும் ஆரம்பம். உஷத்காலத்தையே ஒரு குறியீடாக வைத்து, இக்காலப்பிரமாணத்திற்கும் மனிதனின் மலரும் சைதன்யத்திற்கும் முடிபோடுகிறது. ஆன்மிகச் செய்திகள் பலவுண்டு இங்கே என்பதால் இக்காண்டம் எளிதில் புரிவதில்லை. ஆன்மிகத்தேடல்களில் பகுத்தறிவின் கட்டுமானப்பணி உதவாது. திடீரென மின்வெட்டுக்களாக நம்முள் பேரறிவு பாய்ந்து புதிய நிலைக்களன்களை அறிமுகப்படுத்தும். இதோ, நம் முன்னே ஒரு காட்சி. அது மெல்ல வளர்ந்து புதுப்பரிணாமங்களை தீண்டுகிறது.

முதலில் இருட்டு. ஏன், கும்மிருட்டு. விடியலுக்கு முன்பாக இருள் மிகவும் செறிந்து காணப்படும். அப்படி இருந்தும், எங்கிருந்தோ ஒளி ரேகைகள் இருட்டினை ஊடுருவிக்கொண்டு நம்மிடம் வருகின்றன. முதலில் இளங்காலை ஒரு மூடுபனிபோன்று உலகை அணைக்கிறது. இருட்டு சற்று நடுங்கியவாறு பின்வாங்குகிறது. அனுமான் வந்தபின், இலங்கையின் கோட்டைவாயில் காப்பினை விட்டுச்செல்லும் இலங்கிணியைப்போல இருக்கிறது. இருள் பின்வாங்கும்போதே, ஒளி மின்னடி வைத்தவாறு வந்துகொண்டிருக்கிறது. ஆதவன் வருவதைக்காட்டும் அருணன் போல, இப்புலர்காலைப்பொழுதும் வரப்போகும் நாளுக்கு கட்டியம் கூறுகிறது.

---

[1] சாவித்ரி பற்றிய இக்கட்டுரைகளில் மகாகாவியத்திலிருந்து எடுத்தாளப்படும் வரிகள் என் அன்னையார், திருமதி பத்மாஸனி அவர்களால் மொழிபெயர்க்கப்பட்டவை. என் தந்தையாருடன் எழுபது ஆண்டுகள் வாழ்ந்து, சாவித்ரியில் தோய்ந்தவர். ஸ்ரீ அரவிந்தரின் மகாகாவியத்தைப்படிப்பதும், அதை மொழிபெயர்ப்பதும், படிகள் எடுப்பதும் அவர் ஏற்ற தவம். என் தந்தையார் 1999 இல் மறைந்த பிறகும் இத்தவத்தைக் கைப்பிடித்து, 2007 ஆம் ஆண்டு அன்னையின் திருவடியினைச் சேர்ந்தார். நான் தமிழில் சாவித்ரி பற்றிக்கட்டுரை எழுதினால் அவரது மொழிபெயர்ப்பை உபயோகிப்பேன் என்று அவரிடம் கூறியவாறு இருப்பேன். ஸ்ரீ அன்னையின் இனிய குழந்தையான என் அன்னைக்கு இதுவே என் அஞ்சலி'

எப்படியொரு உஷத்கால சைதன்னியத்தின் மலர்ச்சியைக் காட்டும் உருவகம். தன்னறிவின்றி அயர்ந்து தூங்கும் ஒரு பெண்மணி, எழுந்து, கண் விழித்து, தன் சுற்றுச்சூழலை உணர்ந்து, தான் யார் என்பதையும் புரிந்துகொண்டு எழுந்து நிற்கும் ஒரு தேவதையை இக்காட்சியில் காண்கிறோம்.

சாவித்ரி கதையை ஸ்ரீ அரவிந்தர் தேர்ந்தெடுத்ததே இப்பாடம் சொல்வதற்குத்தான். மனிதனது ஆரம்பம் ஒரு ஜட நிலைதான். அந்நிலையிலும் சைதன்னியம் எங்கோ ஒளிந்திருக்கிறது. பிறகு, படிப்படியாக இதழ் விரித்து, உயர் நிலைகளை மனிதனின் சைதன்னியம் அடைந்து, ஆன்மானுபவம் பெற்று, அதிமானஸ நிலையை எட்டுகிறான். இதுவே பரிணாமம் எனும் ஒரு ஏணி. இவ்வேணிக்கு பாதாளத்தின் கீழேகூட இறங்கும் படிகளுண்டு. மனிதனை மிக உயர்ந்த தெய்வீகப் பரிணாமங்களுக்கு ஏற்றிச்செல்லக்கூடிய படிகளும் உண்டு. இக்காட்சிக்கு உஷையே மூலக்குறியீடு.

உஷத்காலத்திற்கு முன்பான இரவுதான் எப்படி மவுனமாக பயங்கரமாக இருக்கிறது.

அப்படியொரு குருட்டுச்சிந்தனையின் பயங்கர குறியீட்டிலே
ஒளியற்றதாக, ஏதும் உட்புக வழியில்லாததாகத் தோன்றியது.
உடலற்ற அனந்தத்தின் பாதாளம் இதுவோ'.

ஸ்ரீ அரவிந்தரின் ஆங்கிலச் சொற்கள் பொருத்தமாக அமைகின்றன. மிகவும் ஆழமான, உட்புகமுடியாத, தாமச குணம் நிறைந்ததாக, பயங்கரமானதாக, புரிந்துகொள்ளமுடியாததாக அந்த இருட்டு இருக்கிறதாம். ஜட பிரகிருதி ஒரு பெண் மலைப்பாம்புபோல், அசையாமல் கிடக்கிறதாம்.

உருவமற்று, உணர்விழந்து, மனமும் உயிர்ப்பும் இல்லாமல்

இந்த "அளவிடமுடியாத பூஜ்யம்" என்பதில் தான் மரணமில்லா பெருவாழ்வின் விதைகள் உள்ளன. பல நூற்றாண்டுகள் ஓங்கி வளர்ந்து, மக்களுக்கு நிழல் தரும் ஆலமரத்தின் பெருமை சாமானியமோ? ஆனால், அதன் ஆரம்பம் எதில் இருக்கிறது? வெற்றி வேற்கை கூறும் :

தெள்ளிய ஆலின் சிறுபழத்தொருவிதை
தெண்ணீர்க் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணிதேயாயினும் அண்ணல் யானை
அணி தேர் புரவி யாட்பெரும் படையொடு
மன்னர்க்கிருக்க நிழலாகும்மே.

அதேபோல, அதிமானஸ சைதன்னியத்தை அடையப்போகும் வாழ்க்கையின் ஆரம்பம் சலனமில்லாத ஜடப்பொருளுக்குள்ளே இருப்பதை மறுக்கமுடியாது. உளதோ, இலதோ என்று தோன்றும் இவ்விதையில்தான் வாழ்க்கையின் உயிர்ப்பு இருக்கிறது. இருளென்னும் மாதின் உடலில் அசைவு இருப்பதே தெரியவில்லை. அது "பெயரற்ற புடைப்பெயர்ச்சி, சிந்தனையில் சிக்காத கருத்து" என்பதாக இருக்கிறது. பொழுது புலரும் நேரத்தில் "தயங்கியவாறு தோன்றியது நீண்டதொரு ஒற்றைக்கோடு". இதுவே அதிமானஸ ஜீவனத்தின் முன்னறிவிப்பு, இறைவன் தரும் வாக்குறுதி. அதோ! அனைத்தும் செம்மை

உஷை மிகச்சிறந்த வண்ணங்களுடன் ஒளிவட்டத்தைப் படைத்தாள்

மண்மகளின் மைந்தர்கள் துயிலெழுந்து, தமது கடமைகளில் ஈடுபட ஆரம்பித்தாயிற்று. சாவித்ரியும் கண்விழித்தாள். மண்ணுலகில் இருந்தாலும், அவள் எங்கோ தனித்திருப்பதுபோல் தோன்றுகிறது. அவளைச் சுற்றியுள்ளோர் வேலையில் ஆழ்ந்திருக்கிறார்கள். அவளும் அப்படியே, ஆனால் மனம் மரத்துப் போய்விட்டதுபோல் இருக்கிறது. கடமையைச்செயலாற்றும் பெண்மணி. முகத்தில் ஒரு அசாதாரண அமைதி. ஆனால்.... ஆனால்....

அனைவருடனும் இணைந்து, அவர்களுக்குத் தாரகையாக இருந்தவளை
வருவதினை உணர்த்தும் இருள் அவர்களிடமிருந்து பிரித்து வைத்தது.

அவள் ஒரு மாபெரும் சவாலை சமாளிக்கவேண்டும். சத்தியவானைக்காப்பாற்றி, மனிதனின் வருங்காலத்தினை செம்மைப்படுத்தவேண்டும். இத்தெய்வீகச்செயலில் அவள்

வருவதினை உணர்ந்து, துணையற்று, துயருற்று துணிதல் வேண்டும்.

சாவித்ரிக்குத் தெரியும். எதிர்பார்த்திருந்த உஷத்காலம் இதுவே. "இன்றே சத்தியவான் இறந்துபடும் நாள்."

இருளிலிருந்தும் ஜடநிலையிலிருந்தும் சைதன்னியம் வெளிப்படுவது கவியின் கண்ணோட்டத்தில் இப்படி விளக்கப்பட்டிருக்கிறது. அறியாமையிலிருந்து அறிவும் இப்படியே வெளிப்படுகிறது. ஸ்ரீ அரவிந்தரின் இவ்விளக்கத்தில் மூன்று பெண்களைக்காண்கிறோம். கரிய நிறத்தாளான இரவு மலரும் உஷை இருவர் நடுவே பாலமாக, மானுடமும் தெய்வீகமும் இணைந்த உருவத்தாள், சாவித்ரி.

இரவென்னும் பெண் வர்ணனை அபாரம். நம்பிக்கையை அறவே அழிக்கும் உருவம். இந்த ஒளியற்ற ஜட நிலையைக்காணும் போது, அதிமானஸ சைதன்னியம் ஒன்று இருக்கும் என்றே நமக்குத் தோன்றாது. திவ்விய ஜீவனத்திற்காக ஏங்கும் மனிதனுக்கு "ஆன்மா இல்லாத பெரும்பாழிலே சுழன்றுகிடக்கும் நிழல்" போன்ற காளராத்ரியினால் என்ன தரமுடியும்?

ஆ! அதோ பொழுது புலர்ந்தது! இந்த இடத்தில் பாரதியார் கட்டாயம் நினைவுக்கு வருகிறார். சாவித்ரி காவியத்தின் இக்குறியீட்டினை அவரது செந்தமிழ்ச் செய்யுள் ஒன்றில் காணலாம்.

பொழுது புலர்ந்தது, யாஞ்செய்த தவத்தால்
புன்மை யிருட்கணம் போயின யவும்:
எழுபசும் பொற்சுடர் எங்கணும் பரவி
எழுந்து விளங்கிய தறிவெனும் இரவி:
தொழுதுனை வாழ்த்தி வணங்குதற் கிங்குன்
தொண்டர்ப லாயிரர் சூழ்ந்து நிற்கின்றோம்.
விழிதுயில் கின்றனை யின்னுமெந் தாயே,
வியப்பிது காண்! பள்ளி எழுந்தரு ளாயே!

மனிதகுலம் வேண்டிய காலை நேரம் வந்துவிட்டது. இந்த உஷை எனும் தெய்வம் அதிமானஸ நிலையின் உருவகம். அவளே அன்றாடம் தோன்றி மரணமில்லா நிலையை அருள்பவள். வேண்டுவதெல்லாம் தரும் அருள்மாரியாக வருகிறாள்.

'வண்ணப்படங்களாக, ஆன்மிக அனுபவங்களை,
புரியாத அழகினை, ஆனந்தத்தினை விளக்கியவாறு'.
ஆன்மிக உஷத்காலத்தின் பெருமையைக்கூறும்
பொருளார்ந்த தொன்மத்தினை எழுதி வைத்தாள்'.

இளங்காலை வந்தது. மண்ணில் போட்ட விதை அழகிய ரோஜாமலராக மலர்ந்துவிட்டது. மண்ணெங்கும் இனிய வாசனை வீசுகிறது. பறவைகள் சப்திக்கின்றன. கிழக்கே செக்கர் வானம். திவ்விய ஜீவன நிலைதேடும் மனிதனுக்கு இந்நேரம் இனிய வரவு.

ஆனால் திவ்விய ஜீவனத்தை அடையும் வழி எங்கே? உயிர்ப்பில்லாத இரவாம் ஜடநிலையைப்பார்த்து நம்பிக்கையற்று மனிதன் வாடுகிறான். உதயசுந்தரி காட்டும் அதிமானஸ வாழ்வு எங்கே? அவனால் அடைய முடியுமா? மனிதன் தெய்வீக நிலை பெறலாம், மண்ணில் நல்ல வண்ணம் வாழ்ந்து, மண்ணிலே விண்ணினை சமைக்கலாம் என்பதை சாவித்ரி மூலம் ஸ்ரீ அரவிந்தர் நமக்குத் தெளிவுபடுத்துகிறார். சாவித்ரி எப்படிப்பட்டவள்? அவளுக்கு ஏற்பட்ட சோதனை என்ன? அதனை எப்படி வெற்றி கொண்டாள்? வெற்றி பெற எப்படி யோகத்தினால் தன்னைச் செப்பமைத்துக் கொண்டாள் என்பதே சாவித்ரி காவியம்.

அது என்ன சோதனை?

காவியத்தின் இரண்டாவது காண்டத்தில் இது விளக்கப்படுகிறது. இன்னும் சிறிது நேரத்தில் சாவித்ரிக்கும் மரணதேவனுக்கும் இடையே இப்போராட்டம் தோன்றப்போகிறது. விதி எதையேனும் செய்யட்டும் என்று அவளால் பின் வாங்கமுடியாது. யோகம் புரிந்து, நிறைவாக, பராசக்தியின் ஆற்றலை அவள் ஏந்தியிருக்கிறாள். அவள் முன்னேறி, விதியை சந்திக்கவேண்டும். விதியை வெல்ல முடியாது என்று மக்கள் சொல்வதை நிறுத்தவேண்டும். மரணம் அவளது அன்பனைக்கொண்டு செல்ல முயன்றால், அவள் போரிட்டு சத்தியவானை மீட்கவேண்டும். திவ்ய ஜீவனம் பெறும் வழி அதுதான். இந்த மிக பயங்கரமான நேரத்தில் சாவித்ரி சிறிது கூட தன்னம்பிக்கையை இழக்கவில்லை. அவள் ஏற்ற யோக நெறியும் சாதனையும் பொய்யோ?

கவசமணிந்த சேனை அழிவினை நோக்கிச்செல்வது போல பன்னிரண்டு மாதங்கள் கழிந்து போயின. கடைசி நாட்களோ நடக்க முடியாமல் நடந்து போவதுபோல் இருந்தன. ஸ்ரீ அரவிந்தர் காலம் யாருக்காகவும் தயங்குவதில்லை, நிற்பதில்லை என்பதை இங்கு

வலியுறுத்துகிறார். அதனால் நாம் நமது வாழ்வில் ஒரு கணத்தையும் வீணாக்காமல் யோகம் புரிய வேண்டும். எப்பொழுதும் உடலை, உள்ளத்தைத் தயாரான நிலையில் வைத்திருக்கவேண்டும்.

சாவித்ரி தன்னை இப்படி அமைத்துக்கொண்டிருக்கிறாளாம். இங்கே சாவித்ரி வர்ணனையை ஸ்ரீ அரவிந்தர் அதிமானஸ சைதன்னிய நிலையிலிருந்தவாறு எழுதியுள்ளார் என்பது வெள்ளிடைமலை. அவளை மவுனம் சூழ்ந்திருக்கிறது. ஆயினும், அவளருகே மவுனம் கூட பேசுகிறது. தெய்வீகப்பெண், அழகி, கம்பீரமானவள், ராஜகன்னிகை: அனைத்திற்கும் மேலாக பெண்மையே வடிவானவள்:

அவளைச்சேர்ந்த அனைத்துமே மேன்மையாக இருந்தது.
பரந்த மண்ணின் அருகிலே, விண்ணுடன் நெருக்கம் பூண்டு
அவளது விரிந்த ஆன்மா உயர்ந்து, வேகம் நிறைந்து,
ஒளிமயமான, அமைதியான உலகங்களிலே சஞ்சரித்து,
எண்ணங்களுக்கு அப்பால் மூலப்பிரகிருதியினை அடைந்தது.

இவளே பராசக்தி சொரூபம். இவளே உலகினைத் தோற்றுவித்துக் காத்தளிக்கும் பெருந்தேவி. அவளிடம் நிறைந்து பொங்கும் ஆற்றல்களுக்கு அளவில்லை.

அவளிடம் மவுனம், சொல் இரண்டும் ஒரே சமயத்தில் இருந்தன.
தன்னிலிருந்து மலரும் சாந்தி எனும் தேசம் அவளே.
கடலாகக்காணப்படும் ஒரு கன்னித்தீ.
தேவர்களின் வலிமை, அமைதி இரண்டும் பூண்டாள்.

அரியதொரு செயலுக்காக மனித குலத்தில் அவதரித்திருந்தாலும், சாவித்ரி சக்தி சொரூபம். மண்ணிலே நடந்து வரும் இம்மங்கையர் திலகம் யோகம் புரிந்து தெய்வீக ஆற்றல்களைப் பெற்றிருக்கிறாள். இப்பொழுது அவளை எதிர்நோக்கும் சவால் இதுதான்:

அறியாமையையும் மரணத்தையும் பொறுத்துக் கொள்வதா
அல்லது மரணமில்லாப் பெருவாழ்விற்கான பாதை சமைப்பதா,
மனிதனுக்கான தெய்வீகப்போட்டியில் வெற்றியா, தோல்வியா....

சாவித்ரி தோல்வியடைவதற்காக அவதரிக்கவில்லை.

வழி நடத்தி, வெற்றி காண்பதே அவளது நோக்கம்

மனிதனைப்பிணைத்திருக்கும் விலங்கினை உடைத்தெறிந்து, மரணபயத்திலிருந்து அவனை விடுவிக்கவேண்டும். இதற்காக அவள் தனியே நின்று விதியினை எதிர்கொண்டாள். வெற்றி ஏன் பெற முடியாது? இருள் கவிந்து நாம் தடுமாறும் வேளையில் ஒரு மின் விளக்கின் ஸ்விச்சைத் தட்டினால் உடனே எங்கும் ஒளி நிரம்பவில்லையா? முதலில் யாரேனும் தைரியமாக அதைச் செய்யவேண்டும், அவ்வளவுதான்.

ஒரு துதி, ஓர் உயர்ந்த செயல், ஒரு சிறந்த எண்ணம் கூட,
அறியவொண்ணாத சக்தியுடன் மனிதனின் ஆற்றலை இணைக்கும்.
பின்னர் சித்துகளெல்லாம் அன்றாடநிகழ்ச்சிகளாகிவிடும்.
ஒரு மேன்மையான செய்கை இயற்கையின் நெறியை மாற்றும்.
ஒரு தனித்த சிந்தனை வல்லமையில் ஓங்கி விடும்.

மனிதன் மரணத்தின் பிடியில் இருப்பது உண்மையே. குருதியும் சதையுமாக உள்ள அவனிடம் நிரந்தரமானது ஏதுமில்லை. அவனது ஆன்மாவைத்தவிர அவனிடம் உயர்ந்ததும் ஏதுமில்லை. ஆன்மாவிற்கோ அழிவில்லை.

இந்த ஆன்மா தெய்வீக நிலைகளிலிருந்து பிரிந்து வந்திருக்கிறது. இயந்திரமயமான மனிதனுள்ளே உயிர்ப்புடன் காணப்படும் சக்தி இதுவே. இந்த தெய்வத்தை உசுப்பி எழுப்பவேண்டும். நல்ல பாம்பினை கிளப்பினால்தான் படமெடுத்து கம்பீரமாக செயற்படும். மனிதனின் ஆன்மாவும் இப்படித்தான். ஆன்மிகப்போர் மனத்தில் நடக்கும்போது, அறிவற்ற, ஜட நிலையிலிருந்து சைதன்னியத்தை அடைந்து தெய்வீகத்திற்கு தாவிச்செல்லும்.

மரணம் சத்தியவானை கொத்துவதன்மூலம் வாய்மையை அல்லவா அழித்துவிடும்? வாய்மையே உருவான சத்தியவான் உலகின் ஆன்மாவாயிற்றே! இந்த சோதனை நேரத்தில் சாவித்ரி புரிந்த யோகம் அவளை மாற்றியமைத்துள்ளதை நாம் காண்கிறோம்.

சாவித்ரியிடம் குடிகொண்ட பராசக்தி இப்பொழுது உயிர்த்தெழுந்தாள்.

சுப்பிரமணிய பாரதியார் இப்படியொரு அனுபவத்தை பாஞ்சாலி சபதத்தில் காட்டுகிறார். திரௌபதியை துரியோதனன் மன்றுக்கு அழைத்துவரச்சொன்னான். இயற்கையே குழம்பியது! தேவர்களெல்லாம் களைப்புற, பராசக்தி மாத்திரம் உயிர்த்தெழுகிறாள்.

வாலை, உமா தேவி, மாகாளி, வீறுடையாள்,
மூலமா சக்தி, யொரு மூவிலை வேல் கையேற்றாள்
மாயை தொலைக்கும் மஹாமாயை தானாவாள்
பேயைக்கொலையைப் பிணக்குவையைக் கண்டுவப்பாள்
சிங்கத்தி லேறிச் சிரிப்பால் உலகழிப்பாள்
சிங்கத்திலேறிச் சிரித் தெவையுங்காத்திடுவாள்....
மங்களஞ் செல்வம் வளர் வாழ்நாள் நற் கீர்த்தி
துங்க முறு கல்வியெனச் சூழும் பல கணத்தாள்,
ஆக்கந்தானாவாள், அழிவு நிலை யாவாள்,
போக்கு வரவெய்தும் புதுமையெலாந் தா னாவாள்
மாறி மாறிப் பின்னு மாறி மாறிப்பின்னும்
மாறி மாறிப் போம் வழக்கமே தானாவாள்,
ஆதி பராசக்தி -- அவள் நெஞ்சம் வன்மையுற.....”

இந்நிலையிலே திரௌபதி தேவி பராசக்தி மேல் ஆணையிடுவதும், பாரதப்போரில் அவளது சபதத்தை வீமன் நிறைவேற்றுவதும் நாம் அறிவோம். ஸ்ரீ அரவிந்தரது மகாகாவியத்தில் தர்மமே படைக்கலனாக, நம்பிக்கையே துணையாக, கடமையினால் உந்தப்பட்டு சாவித்ரி

சாசுவதத்தின் உச்சியிலிருந்து தீக்கொழுந்தாம் போர்வீரன்போல்
அடைத்துப்போன கதவினை உடைத்தெறியும் சக்தி பெற்று
மரணத்தின் முகத்திலிருந்து அதன் ஊமை நிச்சயத்தை அழித்து
சைதன்னியம், காலம் இரண்டையும் அவள் கடந்து நின்றாள்.

## 3. அசுவபதியின் தவம்

சாவித்ரியின் வாழ்க்கையில் மிகவும் சோதனையான நாள் வந்துவிட்டது. அவளும் சோதனையை சந்திக்கத் தயாராகிவிட்டாள்.

இந்த சாவித்ரி யார்? இங்கு ஏன் வந்தாள்? அவள் போராடி வெற்றிபெறவேண்டிய சோதனை என்ன? இக்கேள்விகளுக்கு பதில் கூறவேண்டும். ஸ்ரீ அரவிந்தர் கடந்த காலத்திற்கு நம்மை அழைத்துச்செல்கிறார். காலம் சலனமற்று நின்றுவிட்டதுபோல் இருக்கிறது. முன்கதை நம்முன் விரிகிறது. இந்நிலவுலகமே வேண்டிக்கொண்டதால் சாவித்ரி அவதரித்தாள். நலிவடைந்த மக்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவன் அவதரிக்கிறான் என்பது பாரதத்தில் பரம்பரையாக தொடர்ந்துவரும் நம்பிக்கை. இராமாவதாரம் அப்படிப்பட்டதே. தேவர்கள் நாராயணனிடம் முறையிட்டதை "அவதாரம் செய்திடுவீரே" என்று தொடங்கும் தேர்ந்த பாடலாக அருணாசலக்கவிராயர் வடித்திருக்கிறார். நாராயணனும் தான் இராமனாக அவதரிப்பதாகவும், தனது படைகள் சகோதரர்களாக, தேவர்கள் குரங்கினமாக தோன்றி இராவணனது வீழ்ச்சிக்கு உதவுவார்கள் என்றும் வாக்களிக்கிறார். இது போன்று ஸ்ரீ அரவிந்தரும் A world's desire compelled her mortal birth என்பதைக் காணலாம். மனித குலத்தின் இவ்வேண்டுகோளை அசுவபதி முன்வைப்பதை காப்பியத்தில் காண்கிறோம்.

இவ்வுலகத்தின் வேண்டுகோளை அசுவபதி இசைத்தார். ஆம், மேல்நிலைகளை நோக்கிச் செல்லும் மனிதகுலத்தின் ஆர்வங்களுக்கு ஒரு குரலாக, சாவித்ரியின் வருகைக்கு வழிசெய்வதே அவரது கடமையானது.

அசுவபதியை பல நிலைகளில் நாம் காணலாம். அவர் தனி மனிதனின் பிரதிநிதி. அரசன் என்பதால் நெறிப்படுத்தும் தலைவன். மனித குலத்திற்கே நல்லது செய்வதை நோன்பாக ஏற்ற மகான். அவரது யோகம் பலநிலைகளில் முன்னேறியது. முக்கியமாக மூன்று நிலைகள் காண்கிறோம். முதலாவது நிலை பனுவல் 1, காண்டங்கள் 3, 4 மற்றும் 5-ல் விவரிக்கப்படுகிறது.

தனி மனிதனது யோகத்தில் முதல் படி இதுதான். நம்மால் காணப்படும் இந்த உலகத்தின் பின்னணியாக பேருண்மை ஒன்று உள்ளது என்பதை உணர்ந்து கொள்ளும்போது நாம் யோகத்தை ஏற்கும் யோக்கியதை பெற்றுவிட்டோம் எனக்கொள்ளலாம். நாம் காணும் காட்சிகள் ஒன்றல்ல இரண்டல்ல. ஆனால் அனைத்தையும் இயக்கும் சக்தி நம் கண்ணிற்கு அப்பால் இருக்கிறது. நாம் காணும் மனிதன் ஆரம்பமும் அல்ல; முடிவும் அல்ல. புல்லிலிருந்து மேல் நிலைகளைப்பெற்று தெய்வீக நிலை பெறும் வரை மனிதனது வளர்ச்சி தொடர்கிறது. மணிவாசகப்பெருமான் இதை தேன்சிந்தும் திருவாசகத்தின் தொடக்கத்திலேயே அமைக்கிறார்:

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்மிருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்ல நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யெயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்...

இத்தெய்வீக நிலைபெறவேண்டி, தியானத்தில் குவியும் அசுவபதி, மனம், பகுத்தறிவு எனும் நிலைகளைத்தாண்டிச் செல்கிறான். நமது புறக்கண்களுக்குத் தென்படாத உலகங்கள் எத்தனை எத்தனையோ! இவை யாவும் ஆன்மாவால் துல்லியமாகக் காணப்படுபவை; ஆன்மாவின் ராகங்கள் ஒலிக்கும் உலகங்கள்.

இவற்றையும் தாண்டினால் மன வாசகம் கடந்த நிலையும் உண்டு என்று அசுவபதிக்குப் புரிகிறது. ஆரம்பத்தில் பெறும் இவ்வனுபவத்தால் அரசனது மனம் திடமான நம்பிக்கையுடன் செயற்பட ஆரம்பிக்கிறது. இந்த அனுபவம் அவனுக்கு ஒரு புத்துணர்ச்சியைத் தந்துவிடுகிறது. இந்த அனுபவம் யாருக்கு எப்பொழுது வரும் என்று கூறமுடிவதில்லை. இதுவே "அனந்தத்தின் ஒளிக்கீற்று இதயத்தைத் தாக்கும் கணம்." இதற்குப்பின் மனிதன் இறைவனைத்தேடும் மாமனிதனாக ஆகிவிடுகிறான்.

சரி, இந்த தனிமனித அனுபவத்தினால் உலகத்திற்கு என்ன நன்மை என்ற கேள்வி எழக்கூடும். தனிமனிதனின் இப்படிப்பட்ட அனுபவங்கள் மனித குலத்திற்கு நம்பிக்கை நட்சத்திரங்களாக ஒளி பாய்ச்சுகின்றன. நாம் எப்படிப்பட்ட உயர்ந்த உலகில் இருக்கிறோம் என்று புரிகிறது. பல

உலகங்களைத் தன்னுள் கொண்டுள்ள இந்த சிருஷ்டியை அசுவபதி ஒரு மாபெரும் மரமாகக் காண்கிறான். இம்மரத்தில் அனைத்து அனுபவங்களும் காட்சிகளும் உள்ளன. இவையாவும் பராசக்தி எனும் மூலத்திலிருந்து கீழே இறங்கி வந்து வளர்ந்தவை. இவ்வளர்ச்சி பொருளற்றதல்ல. இது பரம்பொருளின் லீலையோ, மனிதனை தேவனாக மாற்றும் சித்தோ நாமறியோம். ஒன்று நிச்சயம். இந்த சிருஷ்டியின் பின்னணியில் ஒரு காரணம் இருக்கிறது. அதுவே பராசக்தி. இந்த சக்தி எங்கெங்கும் பரவியுள்ளது. ஞானக்கண் கொண்டு நோக்கினால் இந்த ஏழுகடல் அவள் வண்ணமென்று காணமுடியும். தெய்வசக்தி இந்த உலகத்தில் அவரோகணம் செய்துள்ளது. மனித சக்தி இனி தெய்வீகத்தை நோக்கி ஆரோகணிக்கவேண்டும்.

இந்த மேல்நோக்கி எழும்பும் ஆரோகணத்திற்கு எதை உதவியாகக் கொள்ளலாம் என்று அசுவபதி யோசிக்கிறான். உடனே வேத ரிஷிகளின் கவிதை நினைவுக்கு வருகிறது. நம் முன்னோர்கள் கண்டறிந்த உண்மைகளின் உதவி பெற்றால் இப்பயணத்திற்கு உதவுமே! சாவித்ரி காவியத்தில் "மறை ஞானம்" எனும் காண்டம் இதுவரை சேர்ந்துள்ள ஆன்மிகச்செல்வங்களையும், அவற்றின் உதவியுடன் நாம் முன்னேறலாம் எனும் நம்பிக்கையையும் முன்வைக்கிறது. வாழ்க்கை மிகவும் இருண்டு காணப்படும்போது அங்கே பழமறைகள் உதவியுடன் ஒளி பாயும்:

பூமியின் உள்ளத்தில் இருள் கவிந்து அழுத்தும்போது
மனிதனின் உடல்சார்ந்த மனம் எனும் விளக்கே உதவி.
இரவினில் ஒரு திருடன் எவரும் காணாமல் நுழைவதுபோல்
அவனது வீட்டிற்குள் அவனறியாமல் ஒருவன் அடிவைக்கிறான்.
தெளிவற்ற குரல் பேச, ஆன்மா அதற்குப் பணிகிறது.
அகத்தினுள்ளே ஒரு சக்தி மெள்ள நிலைகொள்கிறது.
மூடிக்கிடந்த உயிரின் கபாடங்களை அழகும் இனிமையும்
திறக்கின்றன; உலகை அழகு வெற்றி கொள்கிறது.
உண்மைப்பேரொளி இயற்கையை திடீரென அணைக்க,
தெய்வத்தின் ரகசியம் இதயத்தில் இன்பம் பாய்ச்ச
எதிர்பாராது இம்மண்ணும் விண்ணாய்ப்பொலிகிறது.

மறைஞானத்தின் பெருமைகளைக்கண்டுணர்ந்து தனது பூரண யோகத்திற்கு அவற்றை அடித்தளமாக ஸ்ரீ அரவிந்தர் அமைத்தார்.

வேதம், உபநிஷத்துக்களில் அவர் பரந்த ஆய்வு செய்தார். அந்நாட்களில் அவருடன் இவ்வாய்வில் கலந்துகொண்ட சுப்பிரமணிய பாரதியாரின் வேதரிஷிகளின் கவிதையைப் படிக்கும்போது நமக்கு "மறை ஞானம்" எனும் காண்டம் ஓரளவு விளங்குகிறது. உதாரணமாக, வேதம் மிக அதிகமாக இந்திரன் எனும் தெய்வத்தை வாழ்த்தும் மந்திரங்களை உட்கொண்டுள்ளது. இந்த இந்திரன் புராணங்களில் காணப்படும் கதாநாயகன் அல்ல. வேதம் கூறுவதுபோன்று இந்திரன் விருத்திரனை அழிப்பது கூட வெறும் கதையல்ல. இந்திரன் என்பது ஒரு தெய்வ சக்தி. அந்த சக்தி நம்முள் பாய்ந்திடவேண்டுமென இம்மந்திரங்களை ஓதுகிறோம் என்பதை நினைவில் கொள்ளவேண்டும். பாரதியார் கூறுவார்:

'இந்திரன்' என்பது விஞ்ஞான சக்தி; இவனுக்குப் பகை அஞ்ஞானம். இந்த அஞ்ஞானத்திற்கு "விருத்திரன்" என்று பெயர். (விருத்திரன் - மூடுவோன், மறைப்போன்), விருத்திரன் இருள். அவனே தெய்வ இன்பங்களிலிருந்து நம்மைப் பிரித்துவைக்கும் அஹங்காரம் - அதாவது, பிரிவுணர்ச்சி. அவன் தாய்க்கு "தாநு" என்ற பெயர் (தாநு - பிரிப்பது).

நமக்குள்ளே மூன்று படிகள் இருக்கின்றன, மண், காற்று, வானம் என. (அதாவது உடல், உயிர், அறிவு என்ற மூன்று) வானத்தின் மேலே உண்மையுலகம் இருக்கிறது. அந்த உண்மையுலகத்திலிருந்து நமது அறிவிலே ஞான ஒளியின் கிரணங்களும், தேவ இன்பங்களாகிய நதிகளும் எப்போதும் பாயும்படி செய்ய வேண்டும். இதுவே வேத ரிஷிகளின் நாட்டம்."

இந்த ஒளி, இந்த இன்பம் நம்முள் பாயாதபடி தடுப்பதே விருத்திரனின் தொழில். அச்சம், கவலை, சிறுமை முதலிய கூட்டத்துடன் அவன் செயல்படுகிறான். இந்திரன் முதலிய தேவர்களை யாகத்தின் மூலம் தோழர்களாகச் செய்துகொண்டால் நம்மால் அஞ்ஞானத்தை வெல்ல முடியும். யாகம் என்பது உடல், பொருள், ஆவி, அறிவு அனைத்தையும் பராசக்திக்கு சமர்ப்பிப்பதாகும் என்று பாரதியார் கூறுகிறார். இப்படி நம் மனம் வலிமை பெற, நம்முள் ஊக்கம் பெருகிட தேவர்களை அழைக்கிறோம். அஞ்ஞானம் மறையும்போது தெளிவு தோன்றுகிறது. அத்தெளிவிலே அசுவபதி சிருஷ்டியின் காரணத்தை இரட்டை சக்தியாக உணர்ந்து கொள்கிறான்.

இந்த பந்தம் விண்மீன்களைச்சேர்த்துக்கட்டுகிறது.
இவ்விருவரே அனைத்து ஆற்றல்களுக்கும் காரணம்
ஒன்றான இவ்விருவரே வலிமை, நேர்மையுமாம்.
மோனத்தில் அவன் ஆன்மா அவளையும் உலகினையும்
தாங்குகிறது; அவனது செய்கை அவளது ஆணையின் பதிவேடு.
மகிழ்வுடன், அசைவற்று அவளது காலடியில் கிடக்கின்றான்.
அவளது ஆனந்தக்கூத்திற்கு தன் திருமார்பினைத் தந்துள்ளான்.
நமது வாழ்க்கையே இந்நடனத்திற்கு அரங்கம்.

அசைவற்ற புருஷனும் அசைத்துலகைப்படைக்கும் பிரகிருதியும் ஒன்றாக உள்ள காட்சி அசுவபதிக்குத் தெளிவு தருகிறது. பராசக்தியின் படைப்பில் உள்ள பல அனுபவங்களை ஏற்பதற்கு அவன் தயார்! "ஆன்மாவின் சுதந்திரமும் மேன்மையும்" எனும் காண்டத்தில் உடலைக் கட்டுப்படுத்தும் தளைகளை வெட்டி, அசுவபதி சித்தர் நிலை எய்துவதைக் காண்கிறோம். இதற்காக மனத்தைக்கட்டுப்படுத்தி, மவுனத்தில் ஆழ்த்துகிறான். சித்தர்கள் கண்ட இந்நிலையில் உடலில் மூச்சுவிடுவது நிறுத்தப்பட்டாலும், அங்கே மரணம் நுழைவதில்லை. அசுவபதியின் மூச்சும் மனமும் அசைவற்றுப்போகின்றன. இந்நிலையில் சித்தர்கள் கண்ட அக உலகினுக்குள் அவன் நுழைகிறான். இங்கு அனைத்துமே அறியப்பட்டதாக இருக்கிறது. ஒரு தெய்வீக எழுத்தர் அனைத்து அனுபவங்களையும் குறிப்பெடுத்துவைத்துள்ள இடம். வேதம் கண்ட உண்மைகள் யாவும் இங்கே காணப்படுகிறதாம்; நமது விதியை நிர்ணயிக்கும் விண்மீன்களின் போக்கு இங்கு வரையப்பட்டிருக்கிறது, உலக சரித்திரத்திற்கான ரகசிய குறிப்பு, பிரகிருதிக்கும் ஆன்மாவுக்கும் உள்ள சம்பந்தம் அனைத்துமே இந்த அக உலகில் பதியப்பட்டுவிட்டன.

ஆன்மாவின் நினைவலைகள் மூலம், மறந்து போன அற்புத சங்கீதமும் மீட்கப்படுகிறது. அனந்தத்தின் புதுப்புது உடல்களுக்கு பிரகிருதி அணிவிக்கும் போர்வைகளையும் அசுவபதி காண்கிறான். அரசனாக ஆண்டபோது புரியாத புதிர்களெல்லாம், சித்தனாக ஆன பின்பு புரிகின்றன.

ஓர் ஆர்வம், நம்பிக்கை அவனுள் மூண்டெழுந்தது.
மாமனிதனின் உருவினைக்காண, அவனது கண்கள்
ஆன்மிக உச்சிகளைநோக்கி எழும்பின. அந்த

மேன்மையான உலகினை கீழே கொண்டுவர விழைந்தான்.
அவன் கண்ட மேன்மையே அவனுடையதாக வேண்டும்.
இந்த இருண்ட உலகம், இதன் கருத்த அக-ஏணி
துளக்கமற்ற சூரியனால் தூய ஒளி பெறவேண்டும்.
சிறிய ஆரம்பப்பள்ளியில் உள்ள குழந்தையான ஆன்மா
பாடம் புரியாத கலன்களிடையே இருக்கிறது.
அது தனது மனத்தின் பால பாடங்களை முடித்து,
உலகில் இருப்பதையே மீட்டுருவாக்கம் செய்யாமல்,
தன் பேச்சைக்கூட தெய்வமொழியாக மாற்றவேண்டும்.
வாழ்க்கையின் உருவகங்களைத்தேர்ந்து,
சாசுவதத்தின் தத்துவத்தை புரிந்துகொள்ளவேண்டும்.

அப்பாடி! இவ்வுலகம் மேன்மையுற, மண்ணகம் விண்ணாகப் பொலிய அசுவபதிக்குத்தான் எவ்வளவு ஆசைகள், ஆர்வங்கள்! ஆனால் ஆசைகள் நிறைவுற, ஆர்வங்கள் உருப்பெற தவம் வேண்டும். அதைச்செய்யும் வகையை நாம் கற்றுக் கொள்ளவேண்டும். இறை நம்பிக்கையை ஆதாரமாகக் கொண்டதாயினும், தவத்திற்கு சில நெறிகள் உண்டு. அதன்படி, முதலில் மனத்தை அமைதியில், மவுனத்தில் தோய்க்கவேண்டும். தெய்வீக மாற்றம் தோன்றிட அசுவபதி ஏற்கும் யோகம் மனத்தை உளைச்சல்களிலிருந்து தனிமைப்படுத்துவதில் தொடங்குகிறது. இதுவரை தான் முயன்று சாதித்தவை, மானுட வாழ்க்கையின் பொருளற்ற சச்சரவுகள், நாட்கள் தோன்றி மறையும் வேகம் அனைத்தையும் தனது எண்ணங்களிலிருந்து அவன் விலக்கிவிடுகிறான்.

பரோடாவில் யோகி விஷ்ணு பாஸ்கர் லேலேயுடன் 1907-ல் ஸ்ரீ அரவிந்தர் யோகம் பயின்றதை இவ்வரிகள் நினைவூட்டுகின்றன. லேலே ஸ்ரீஅரவிந்தரை அரசியலைவிட்டு ஒரு சில நாட்களேனும் தள்ளியிருக்கவேண்டும் என்றார். மேலும் அவர் சொன்னார்: "அமர்ந்த நிலையில் அகத்தை நோக்கு. உன் எண்ணங்கள் புறத்திலிருந்து அகத்தினுள் புகுவதைக் காண்பாய். அவை உள்ளே புகுமுன் அவற்றை தூக்கி எறிந்து விடு." லேலே கூறியது உண்மையே என்று ஸ்ரீ அரவிந்தர் அறிந்தார். லேலே கூறியபடி செய்ததும் முழு மவுனம் அவரை அணைத்துக்கொண்டது. மனத்திலிருந்து மாசுபடிந்த, உலகாயதமான எண்ணங்களை நீக்கினால்தான் மனம் சுத்தமான பலகையாக இருக்கும்,

அதில் தெய்வத்தின் வாசகங்கள் தெளிவாகப்படியும் என்பது லேலேயின் நோக்கு. இப்பாடம் அஸ்திவாரமாக அமைய, ஸ்ரீ அரவிந்தரின் யோகம் மாபெரும் விருக்ஷமாக வளர்ந்தது. உடல் அன்றாட வேலைகளில் ஈடுபட்டாலும், மனம் சுதந்திரமாக, அனைத்து அறிவுக்கருவூலங்களையும் தன்னுள் பெறக்கூடிய விசையாக மாறிவிட்டதாக அவர் எழுதியிருக்கிறார். 'நான்' என்பதை அறவே மறந்து விட்ட நிலையைப் பெற்றுவிட்டார்.

அந்நிலையை அசுவபதியின் யோகத்தில் இங்கு காண்கிறோம். எண்ணங்களிலிருந்து மனத்தை விலக்கி மவுனம் காப்பது மாசுகளை நீக்கவே. கோயில் சுத்தமாக இருந்தால்தான் இறைவன் அங்கு எழுந்தருளுவான் என்பதில் சந்தேகமுண்டோ? இந்த அடிப்படை நம்பிக்கையில் அசுவபதி பேரானந்தத்தை நோக்கிப் பயணிக்கவாரம்பிக்கிறான்:

உலகளாவியதொரு ஒளி அவன் கண்களில் நிறைந்தது.
இதயத்தையும், மூளையையும் பொன்மய வெள்ளம் சூழ்ந்தது.
ஒரு சக்தி அவனது உடலுள் பாய்ந்தது.
அது ப்ரும்மாநந்தக்கடலிலிருந்து வரும் நதி.
அப்படையெடுப்பை, மகிழ்ச்சியை அவன் உணர்ந்தான்.....
வேட்டைக்குச்செல்வதுபோல் வேகத்துடன் இறைவனைத்தேடி,
மறுவற்ற தெய்வீக மகிழ்ச்சியையே நாடி,
ஒரு வேள்வித்தீ போல் அவன் முன்னேறினான்.
ஒரு சிலருக்கே இந்த அபூர்வ, தெய்வீக விடுதலை
கிடைப்பதுண்டு. புறத்தில் நாட்டம்கொண்டோர் ஆயிரமாயிரம்;
அவர்களைவிட்டு, நாமறியாது சாட்சியாக உள்ளதொரு கண்
ஒரு சாதகனை இவ்வாறு தேர்ந்தெடுக்கிறது.

மனத்தில் நிழலாடும் எண்ணங்களைத்தவிர்த்த இந்நிலையில், அவனது ஆன்மா உடல் எனும் தளையிலிருந்து விட்டு விடுதலையாகி எழும்பவும், அதை நோக்கி ஒரு சக்தி இறங்குவதை உணர்கிறான்.

ஆன்மா எழும்பியபோது, அவனை சந்திக்க
தூயதொரு சக்தி கீழே பாய்ந்தது. ஒரு சுவாலை,
ஆற்றல், கண்டும் காணாமலும் தோன்றும்அழகு,
சுழற்றிப்போடும் ஆனந்தம், பேரின்பம் யாவுமே

தனது கரங்களில் அவனை வளைத்துப்போட்டது.
அவனது நரம்பு, இதயம், மூளை அனைத்தையும்
தாக்கியது; அம்மகிழ்ச்சியில் தன்னை மறந்தான்.
அறியவொண்ணாததின் பிடியில் அவன் திணறலானான்.

இந்த அனுபவம் ஸ்ரீ அரவிந்தருக்கு 1926-ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 24-ஆம் தேதி ஏற்பட்ட சித்தியை நினைவுறுத்துகிறது. அச்சமயம் கண்ணனது சக்தி பரு உடலில் இறங்கியதாகக் கூறப்படுகிறது. இது மனத்தின் மேல் உள்ள சக்தியாகத் (overmind) தெரிகிறது. சாவித்ரி காவியத்தில் அசுவபதி பெற்ற தாக்கம் விவரமாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. அசுவபதி தன்னுள்ளே ஏதோ ஒரு மாற்றம் ஏற்படுவதை உணர்ந்துகொள்கிறான். கண்ணால் காணாமலே, காதால் கேட்காமலே, அவனுக்குள் முழுமையான ஞானம் மலர்கிறது. அனைத்து உலகங்களையும் தன்னுள் அடக்கிய இந்த ஞான உரு, அனைத்து ஆற்றல்களையும் தன்னுள் கொண்டுள்ள ஒரு பெருஞ்சக்தி, இச்சிறிய மனிதனின் உள்ளத்தை தன் கோயிலாகக்கொண்டது என்ன விந்தை! தியானத்தில் தன்னுள்ளே குவிந்து போன அசுவபதியை இறைவனின் மாபெரும் அணைப்பு மலர்வித்துள்ளது சாமானியமான சரித்திரமா? அசுவபதியின் ஆன்மா விரிந்து, மறுவேதுமின்றி, தூய்மையானதாக மாற்றம் பெற்றுவிட்டது. அவனது அறிவார்ந்த மனம் இப்பொழுது துடைக்கப்பட்ட பலகை. இனி அகில உலகினையும் ஆளும் தன்னொப்பாரில்லா ஒருத்தன் அதில் எழுதவேண்டியதே.

இம்மாற்றத்தை மிகச்சிறப்பாக ஸ்ரீ அரவிந்தர் வர்ணிக்கிறார். அனந்தத்தின் தீண்டுதலில் வழி வழி சுமந்து வந்த குப்பைகள் சிதறிப்போயின. உலகின் ஈர்ப்பு சக்தியைவிட சிறந்ததொரு சக்தி அவனைப் பிணைத்தது. இதுவரை அறியாமையில் மூடிக்கிடந்த அறிவுச் செல்வங்களை இப்பொழுது தெளிவாகக் காண முடிந்தது. மனம், புத்தி, அகங்காரம் முதலியவைகள் விடுபட்டு, தெய்வீகத்தின் பார்வைக்கு இலக்காயின. அகத்தில் செயற்படும் விசைகள் அதிகமாயின; செயற்பாடுகளிலும் சிறந்தன. நம்மை பயமுறுத்தும் மாயை கண்ணாடித் துகளாகிவிட்டது. சிறையிருந்த தெய்வம் விடுதலை பெற்றது. பழமையான தடைகள் நீங்கின. எழுச்சி பெற்ற இத்தெய்வமகனை யாரால் நிறுத்த முடியும்? மரணபயத்தில் நடுங்கிக்கிடந்த மனிதன் எங்கே? மரணத்திலிருந்து இச்சிறிய, மெலிந்த உடலை

பொத்திப்பொத்திக் காக்கவேண்டியதில்லை. சூனியத்தில் அழிந்து போவோமோ எனும் மரணமெனும் பயமே இம்மாமனிதனிடம் இல்லையே! தன்னால் மாபெரும் சாதனைகள் செய்யமுடியும் என்பதை அசுவபதி அறிந்து கொண்டான்.

இங்கே ஸ்ரீ அரவிந்தர் ஒரு காட்சியை அமைக்கிறார். சுதந்திரமான ஆன்ம சக்தியால் முடியாதது ஏதுமில்லை என்னும்போது, இந்த சிருஷ்டியே அப்படியொரு சித்து அல்லவோ என்று புரிகிறது. ஒன்றுமில்லாத இடத்தில் எப்படி இவ்வளவு அண்டகோளங்களை இறைவன் அமைத்தான்? அவன் ஒரு பெரிய ஆன்மிக மந்திரவாதி போலும்!

உருவற்ற, படர்ந்த வெற்று இடத்திலே
கண்கள் காணும் உருவங்களை சமைத்துவிட்டான்.
அவனது மாயக்கலையின் வண்ணங்கள், வடிவங்கள்
மற்றும் உறுதியாக உள்ள குழறுபடியான இணைப்புகள்,
மறைவில் செயற்படும் ஒழுங்கு முறைகள்,
தவிர்க்கமுடியாத சட்டங்கள், கண்காணா படிமுறை
அனைத்தும் மிகச்சிறப்பாக சிருஷ்டிக்கின்றன.

இறைவன் படைக்கும் இக்காட்சியை நாம் உணர்வதற்கு நமது மனம் உதவுகிறது. இம்மனத்தை "இணைக்கும் தெய்வமாக" (a mediator divinity) ஸ்ரீ அரவிந்தர் கருதுகிறார். தெய்வத்தை சந்திக்க உதவும் இம்மனம் தெய்வீகக்காட்சிகளை மறுக்கவும் அழிக்கவும் கூட பயன்படுவதுண்டு. சரியான முறையில் அதை நாடினால், நமது அறியாமையில் மனம் ஒளியைப்பாய்ச்சும். பிரகிருதியின் பெருமையை நமக்கு உணர்த்துவதே மனம்தான். இறைவன் எனும் படைப்பாளி மனத்தின் மூலம் காட்டும் இக்காட்சியை பாரதியார் அற்புதத்தமிழில் தருவார்:

எத்தனை கோடி இன்பம் வைத்தாய்! - எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!
சித்தினை அசித்துடன் இணைத்தாய் - அங்குச்
சேருமைம் பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக்களஞ்சிய
மாகப் பலபலநல் லழகுகள் சமைத்தாய்

முக்தியென் றொருநிலை சமைத்தாய் - அங்கு
    முழுதினையு முணரும் உணர் வமைத்தாய்
பக்தியென் றொருநிலை வகுத்தாய் - எங்கள்
    பரமா! பரமா! பரமா!

"உணரும் உணர்வு" இருப்பதால், அதை சரிவர உபயோகித்து, மௌனம் காத்து மனத்தை கூர்மையாக்கினால், சிருஷ்டி முழுவதையும் நம்மால் அறிய இயலும். ஆன்ம சக்திமூலம் உடலையும் மனத்தையும் கட்டுப்படுத்தினால், பிரகிருதியின் படைப்புகள் அனைத்தையும் கண்டு அனுபவிக்கலாம். அப்படியொரு ஆன்ம சக்தியை இப்பொழுது அசுவபதி பெற்றுவிட்டான். அவன் முன்னால் பல உலகங்கள் தோன்றுகின்றன. இந்த உலகங்களைப் படைக்கும் சக்தியை சித்தி எனக்கூறலாம். இது மந்திரவாதி செய்யும் சித்தல்ல. இவை தவமுனிவன் பெறும் சித்திகள். இச்சக்தியை எளிதில் பெறமுடியாது. பராசக்திக்கும், பூவுலகிற்கும் நடுவே செங்கோலோச்சும் சக்தி இது. மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் நடுவே அரணாக நிற்கும் ஆற்றல். இந்த ஆற்றலுக்குப் பின்னணியில் பராசக்தி விளங்குகிறாள். மறைஞானம், தவம் மூலம் அசுவபதி பெற்றுள்ள சித்தி காரணமாக அவன் முன் இவ்வுலகங்கள் தோன்றுகின்றன. ஒன்றன் மேல் ஒன்றாக, அடுக்கு அடுக்காக, அப்பப்பா! எத்தனை உலகங்கள்! ஆயினும் இவை அனைத்தும் ஒரு கட்டுப்பாட்டில் உள்ளன.

இங்கு அவன் கண்டது ஒரு மாபெரும் வரையறை.
இதனைச்சுற்றியுள்ள ஆடையின் நுனியும் குஞ்சமுமே
நமது அன்றாட புற வாழ்க்கை.
காட்சியளிக்கும் இவ்வுலகின் உருவங்கள்
அதிமானஸ ஒளியின் ரகசியங்களை மறைத்து
அவற்றின் நுட்பங்களை குறிப்பிட்டன.
மனம் கடந்த நிலையிலுள்ள குறிகளின் வரைபடம்
உள் மனத்தில் மாட்டிவைக்கப்பட்டது.
உலகின் புறக்காட்சிகளில் ஒளிவீசி
அவற்றைப் பொருளார்ந்த உருவகங்களாகச்செய்து
அனந்தமான ரகசியத்தின் செய்தியினை
உள்ளுணர்வின் உந்துதலுக்குப் பரிசளித்தது.

ஸ்ரீ வித்யா உபாசனையில் மகாமேரு எனக்கூறப்படும் மலைபோன்றதொரு உருவகத்தை வழிபடுவதற்கு ஏற்கிறார்கள். பௌத்த மதத்தில் மகாமேரு அல்லது ஸுமேரு எனும் மலை போன்ற உருவகம் உலகத்தின் நடுப்பாகமாக சொல்லப்படுகிறது. புறத்தோற்றங்களுக்கப்பால் மேலும் கீழுமாக பல்வேறு உலகங்கள் உள்ளன என்பதையே இந்த மகாமேரு உருவகம் காட்டுகிறது.

சரம் சரமாக உலகங்கள் உள்ளதை தன் தவக்கண்ணால் கண்ட ஸ்ரீ அரவிந்தர் தான் கண்ட காட்சியை நமக்கு விளக்க முயற்சிக்கிறார். அனந்தத்திலிருந்து இவ்வுலகங்கள் வெளியே வந்து, 'காலம்' எனும் கட்டுப்பாட்டினுக்குள் புகுகின்றனவாம். இங்கு மனம் எனும் ஆற்றல் உதவிட, இவ்வுலகங்கள் வாழ்க்கையின் கோடானுகோடி இன்பங்களை, அனுபவங்களை ரசித்து, புறவாழ்வின் ஆச்சரியமான வண்ணங்கள், வடிவங்களை ஏற்று, மீண்டும் காலத்தின் கட்டுப்பாட்டிலிருந்து விலகி, ஜீவான்மாவைக் கையில் ஏந்திக்கொண்டு, பொன்மயமான ஏணியில் ஏறிச்சென்று மறைந்துபோகின்றன.

சைதன்யத்தின் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்குத் தாவும் இச்சூழலில், யாவுமே மறைவில் உள்ள அஸ்திவாரமாம் அசேதனத்தின் சக்தியை பற்றுக்கோடாக ஏற்று, அதில் சாய்ந்து நிற்கின்றன. இந்த பருப்பொருள், அறியாமை அனைத்துமே ஆற்றல்கள்தாம். அதனால் தான் ரிக் வேதம் 'ராத்ரி' ஸூக்தம் இசைக்கிறது.

"எவள் வருங்கால் நாங்கள் மனைகளுக்கு - மரத்தின் மீதுள்ள கூடுகளுக்குப் போகும் பறவைகளைப்போல் செல்லுகிறோமோ அவள் - இரவு - இன்று எங்களுக்கு அனுகூலமாயிருப்பாளாக.

நான் உன்னிடம் இந்தத் தோத்திரங்களைப் பசுக்களைப்போல் ஏந்தி வருகிறேன். இரவே! சோதியின் மகளே! ஜயிப்பவனான என்னுடைய ஸ்தோமத்தைப்போல் அவியை ஏற்றுக்கொள்ளவும்."[1]

தூக்கத்தையும் சக்தியாக பாவிக்கும் பரந்த, ஆழமாகச் செல்லக்கூடிய ஞானம் வேண்டும். "தேவீ பாகவத"த்தில் தேவர்கள் மகாலக்ஷ்மியைத் துதிக்கும்போது இதைக் குறிப்பிடுகிறார்கள்:

யா தேவீ ஸர்வபூதேஷு நித்ரா ருபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம: ...
யா தேவீ ஸர்வபூதேஷு க்ஷுதா ரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸயை நமோ நம:...

யா தேவீ ஸர்வபூதேஷு ப்ராந்திரூபேண ஸம்ஸ்திதா
நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமஸ்தஸ்யை நமோ நம:[2]

அசுவபதி காணும் இவ்வுலகங்கள் அனைத்திற்கும் உச்சியில் இரவு, தூக்கம் போன்றவை கிடையாது. இங்கு தான் திரிமூர்த்தியின் ஒளி வீசுகிறது. நமது தேடல்களுக்கான விடையை அவ்வொளியில் பெறலாம். அசேதனம் இங்கு தன் ஆழத்தில் உள்ள சைதன்யத்தை அறிகிறது. உலகில் இசைக்கும் பாடல்கள் அனைத்திற்கும் இங்கேதான் பொருள் புரிகிறது.

அசுவபதி இந்த உலகங்களில் தன்னிஷ்டப்படி சஞ்சரிக்கிறான். அவன் பெரும் அனுபவங்கள் ஆச்சரியமானவை. பொருள் நிறைந்தவை.

அறிவு நிறைந்த ஆதவனொளிப்பிரதேசங்கள்,
ஆனந்தம் நிறைந்த நிலவொளிப்பிரதேசங்கள்
நமது புறக்கண்களின் காட்சிக்கு அப்பால்
ஒரு மெய்மறந்த கழிபேருவுவகையாக விரிந்தன.
இங்கு அவனால் நுழைந்து சற்று தங்கவும் முடியும்.
விளக்கமற்ற பாதைகளில் செல்லும் பயணியாக,
அறியவொண்ணாததின் ஆபத்துக்களை ஏற்று,
மாபெரும் தேசங்கள் வழியே சென்றிட
இடம், காலங்களைத்தாண்டி மேலே சென்றான்.

மேலே கூறியபடி, முதல் பனுவலில் உள்ள 3, 4 மற்றும் 5-ஆம் காண்டங்கள், அசுவபதியின் தவத்தின் முதல்படியை விளக்குகின்றன. இங்கு கூட அரசனது யோக அனுபவங்களை இரண்டு கூறாகக் காணலாம். ஸ்ரீ அரவிந்தரே விளக்கியபடி, முதலில் சாதகனது உள்மனம் ஆன்மீகம் நிறைந்ததாக மாறுவதைக்காண்கிறோம். பின்னர் ஆன்மிக மாற்றம் காரணமாக அசுவபதி உயர்ந்த சக்திகளை நோக்கி எழும்புவதைக் காண்கிறோம். இரண்டிற்கும் நடுவே "மறை ஞானம்" எனும் காண்டம். முதல் அனுபவம் அசுவபதியின் மனத்தில் தேடல் வேண்டும் எனும் எண்ணத்தை தோற்றுவித்தது. மறைஞானத்தில் ஆன்மிகத்தேடலுக்கான நெறியை அவன் கண்டுகொண்டான். இவ்வுலகத்திற்கு அப்பால் எண்ணற்ற உலகங்கள் சூக்ஷ்மமாக இருப்பதையும், அனைத்துமே அனந்தத்திலிருந்து தோன்றுவன என்றும்,

இவற்றை தோன்றவைத்து இயக்குவது ஓர் இரட்டை சக்தி என்றும் உணர்ந்துகொண்டான். மறைஞானம் தந்த இந்த அறிவினால், அவன் தீவிர யோகம் பயின்று சித்திகள் பெற்றான். இனி, இச்சித்திகள் மூலம் அவன் பெறப்போகும் வரம் அவனுக்காக அல்ல, மனித குலத்தை வாழவைக்கும் வழியைத்தேடுவதே இனி அவன் நோக்கம்.

---

[1] மொ.பெ. எம்.ஆர். ஜம்புநாதன்

[2] "எந்த தேவி பிராணிகள் அனைத்திலும் துயில் உருவாய் நிலைபெற்றிருக்கிறாளோ, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம், வணக்கம்..... எந்த தேவி பிராணிகள் அனைத்திலும் பசி உருவாய் நிலை பெற்றிருக்கிறாளோ, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம், வணக்கம்.... எந்த தேவி பிராணிகள் அனைத்திலும் மருள் உருக்கொண்டு நின்றனளோ, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம் அவளுக்கு, வணக்கம், வணக்கம்." (மொ. பெ. ஸு. சங்கர நாராயணன்)

# 4. உலக ஏணி

சாவித்ரி காவியத்தை முதலில் அமைக்கும் போது மேலும் கீழுமாக ஒரு ஏணியின் படிகள் போல் தோன்றும் பல உலகங்களை ஸ்ரீ அரவிந்தர் வர்ணிப்பதாக இல்லை. அப்பொழுது தனக்கு அதிமானஸ நிலைகளின் அனுபவம் ஏற்படவில்லை என்று ஸ்ரீ அரவிந்தர் கூறுகிறார். மனத்துக்கு அப்பால் சென்று சிருஷ்டியின் தத்துவத்தைத் தெள்ளெனப் புரிந்து கொண்ட பிறகு இவ்வுலக ஏணியை அமைக்க முனைந்தார். அவருக்கு சுலபமாகப் புரிந்த காட்சிகளை நம்மைப் போன்ற சாதாரண மனிதருக்குப் புரியவைக்க முடியுமா? கூடியவரை எளிமையாக, நாம் புரிந்துகொள்ளக்கூடிய உருவகங்களுடன் எழுத முயன்றதில் காவியம் அவர் நினைத்ததைவிட வளர்ந்துவிட்டது. இரண்டாவது பனுவலில் ஓரிரு காண்டங்களாக எழுத நினைத்த பொருள் பதினைந்து காண்டங்களுக்கு நீண்டது. இதுவும் நமக்கு நன்மையே. மானுடம் மேன்மை பெற நமக்காக யோகத்தை ஏற்றுள்ள அசுவபதி மன்னனின் அனுபவங்கள் நமது நிலையையும், நாம் பெறக்கூடிய, பெறப்போகும் உயர்வினையும் தெளிவாக்குகிறதல்லவா?

மறைஞானம், தியானம் முதலிய துணைகள் மூலம் அசுவபதி சித்திகள் பெற்றுநம்உலகுடன்பிணைந்துள்ளபல்வேறுஉலகங்களைக்காண்கிறான். கடவுளர் வீதி வலம் வரும் தேர் போல் அவை உள்ளனவாம்:

அதற்கானதோர் தடுப்புச்சுவரால் தனிப்பட்டதாக,
ஆன்மிகப்பேரொளியின் அணைக்கட்டிலே உள்ளதாக
ஒரு மாபெரும் கூரையின் கீழ் தனித்ததோர் உலகாக,
நிமிர்ந்து நிற்கும் மலைபோன்ற தேவர்களின் ரதமாக
பெரும்புதிராம் வானத்தின் கீழ் சலனமற்று இருந்ததொன்று.
பருப்பொருளாம் பீடம், பார்க்கமுடியாத அடித்தலத்தினின்றும்
எழும்பியதற்கும் முடிவில்லை, செதுக்கிய உலகங்கள் பலவும்
நுரை-அலைபோல் பிடரிகாட்டும் குதிரைகள்மீதேறி
எண்ணத்திற்கப்பால் உள்ள இடங்களுக்குச்சென்றனவாம்.

இறைவனது அரசாட்சியை அடையச்செல்லும் முயற்சியுமாம்.
அறியவொண்ணாததை நோக்கி நூற்றுக்கணக்காய்ப் படிகள்.

அப்பப்பா நாமறிந்த இவ்வுலக்கத்தினுக்கப்பால் இப்படி நூற்றுக்கணக்கான உலகங்கள் உள்ளனவே இவற்றை சித்தர்கள் கண்டிருக்கிறார்கள். வள்ளலார் ராமலிங்கசுவாமிகள் பாடுவார்:

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி - அம்மா
அற்புதக் காட்சியடி

ஜோதி மலைஒன்று தோன்றிற் றதிலொரு
வீதிஉண்டாச்சுதடி- அம்மா
வீதிஉண்டாச்சுதடி

வீதியில் சென்றேன் அவ்வீதி நடுஒரு
மேடை இருந்ததடி - அம்மா
மேடை இருந்ததடி

மேடைமேல் ஏறினேன் மேடைமேல் அங்கொரு
கூடம் இருந்ததடி - அம்மா
கூடம் இருந்ததடி

கூத்தைநாட அக்கூடமேல் ஏழ்நிலை
மாடம் இருந்ததடி - அம்மா
மாடம் இருந்ததடி

என்று சித்தயோக நிலையில் தான் கண்ட பல உலகங்களைக்காட்டுகிறார். ஒவ்வொரு நிலையும் ஒவ்வொரு வகை மணியால் ஒளிர்கிறதாம். இந்த ஜோதிமலையின் கொடுமுடியிலே ஒரு பொற்கோவில் இருந்ததாம். மற்றவர்கள் வழிகாட்ட அங்கு "பெண்ணொடாணாக இருவர்" இருந்தார்களாம். அவர்கள் வழிகாட்ட முடிவில் ஆனந்தவல்லி அம்மையைக்கண்டாராம்.

இதிலிருந்து ஸ்ரீ அரவிந்தர் காண்பது வெற்றுக் கற்பனையல்ல என்று புரிகிறதல்லவா? இந்த உலகங்களுக்கு ஆரம்பமும் இல்லை. முடிவும்

இல்லை. மேலே, மேலே, மேலே என்று போய்க்கொண்டே இருக்கின்றன. அதேபோல பாதாளமும் கீழே, கீழே, கீழே என்று இறங்கிக்கொண்டு போகிறது. சரி, இவற்றினை ஓரளவு தெரிந்துகொண்டால்தான், நமக்கு வேண்டியவை என்ன, நாம் தள்ளவேண்டிய உலகங்கள் யாவை என்று புரியும். அதனால் அசுவபதி தனது பிரயாணத்தைத் தொடங்குகிறான்.

முதலில் அவன் அடைவது பருப்பொருளின் நுண்ணிய உலகம், The Kingdom of Subtle Matter. இது மனோமயமானது. இங்கு தான் மனத்தின் ஆற்றல்கள் மனித வாழ்க்கையின் நடப்புகளுக்கு வரைபடங்களைக் கோலம் போடுகின்றன. தெய்வீக நிலையிலிருந்து கீழே தாவி வரும் எண்ணங்களுக்கு வண்ணங்கள், வடிவங்கள் கொடுக்கும் இடம். எம்பிராய்டரி போடுவதற்கு முன்பாக துணியில் பென்ஸிலால் வரைபடம் போடுவதுபோல் இங்கு நுண்ணிய மனம் அபூர்வமான செயல்கள் புரிகிறது. ஆனால் பருப்பொருளுடன் கலந்ததும் இந்த நுண்மையான திறன் மறைந்து போய்விடுகிறது. இத்திறனை மீண்டும் பெற நாம் மேல்நோக்கிச் செல்லப்பயணிப்பதே பரிணாம வளர்ச்சிக்கு வழி செய்யும். ஆனால் இறங்குவது சுலபம், ஏறுவது கடினம்.

அடுத்த காண்டத்தில் உயிரின் ஏற்றமும் வீழ்ச்சியும் பற்றி (The Glory and Fall of Life) தெரிந்துகொள்கிறோம். உயிரைப்பொறுத்தவரை அது "தேமே"னு கிடக்கும் சடப்பொருள் அல்லவே! எப்பொழுதும் அசைந்துகொண்டே இருக்குமல்லவா? தோற்றம், வளர்ச்சி, தேய்வு, இறப்பு, மீண்டும் தோற்றம் என்று கண்மூடித்தனமாக, ப்ரஞை இன்றி அசைந்தவாறு இருக்கும். அதனால் பயம், துன்பம், தோல்வி எல்லாமும் இருக்கும். இதுவே உயிரின் வீழ்ச்சி. ஆனால் மனிதனின் ஆன்மா தனது தெய்வீக வாழ்க்கையிலிருந்து துணிச்சலுடன் இதற்குள் பாய்ந்துவிட்டது!

இங்கு நிச்சயமற்ற உருவமாக உயிரதுவும்
அமைதியற்ற கடல்போலே அசைவுகளுடன்
துணிச்சலாக வானத்தில் ஆன்மா தாவுதல்போல,
என்றுமுள அமைதியினை குலைக்கும் செய்கையாக
அனந்தத்தின் மனவெழுச்சியின் ஆர்வம்போல் காணும்.
தான் நினைத்த உருவங்களை எடுத்தவாறு
செய்நேர்த்திகண்ட பாதுகாப்பினை விட்டு
அறிந்த, பாதுகாப்பான நிலைகளைத் துறந்திருக்கும்.

இத்தகைய வீழ்ச்சிக்கு ஒப்பான எழுச்சியும் உயிருக்கு உண்டு. அன்பு, கைங்கரியம் போன்ற செயல்களால் வாழ்க்கையை அமுதமாக்கிவிடும் ஆற்றல் உயிருக்குத்தான் இருக்கிறது. உயிர் இருப்பதன் காரணமாக மனிதன் காட்டும் அற்புதங்கள் எத்தனை, எத்தனையோ! மலையைப்பார்க்கிறான் குடவரைக்கோயிலை அமைக்கிறான். பறவையைப்பார்க்கிறான், விமானத்தைக் கட்டுகிறான். இதெல்லாம் கவனித்து பாரதியார் வருங்காலத்தில் மனிதனின் சாதனைகள் மேன்மேலும் வளரும் என்று பாடினார்.

மந்திரங் கற்போம் வினைத் தந்திரம் கற்போம்
வானை யளப்போம் கடல்மீனை யளப்போம்
சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்
சந்தி தெருப் பெருக்கும் சாத்திரங் கற்போம்.

இந்த உயிர் உடலில் எங்கு இருக்கிறது? அதை நடத்தும் உயிரணுக்கள் உலகினுக்கு (The Kingdoms of the Little Life) அசுவபதி செல்கிறான். மனிதனது ஆற்றல் தூக்கத்திலிருந்து மெள்ள விழிக்கிறது. இன்னும் அறிவு மலரவில்லை. இந்நிலையிலே, இயற்கையறிவினால் உந்தப்பட்டு, தன் நிலையை தெரிந்துகொள்ள முயற்சிக்கிறது. இழந்த நன்மைகளை மீண்டும் பெறவேண்டும் என்று ஆர்வம் கொள்கிறது. அடேடே! இந்த உலகம் நாம் வாழும் உலகம் போலவே இருக்கிறது!

இந்தக் கீழ்மையான நாடு மனிதன் வாழ்வை ஒத்திருக்கிறது.
ஆனால் மாறுதலற்ற சாசுவதமாக அமைந்துள்ளது.
ஒரு கணநேர இயக்கம் காலத்தின் கடைசிவரை செல்லும்.
அறியாமையின் பள்ளங்களை சிருஷ்டி இணைத்தது.
உருவம் என்னும் ஒரு பள்ளத்திலிருந்து
ஆன்மா எனும் மற்றொரு பள்ளத்தினை அடைந்திட.
பனிப்படலத்தினூடே எழுந்த ஒளி குறைந்த வீடு இது.
மாபெரும் இருளில் தோன்றிய சிறியதொரு ஒளியாம்
இந்த உயிருக்கு வந்த இடம், போகுமிடம் தெரியவில்லை.
சுற்றியெங்கும் சடத்தன்மை படலமாக சூழ்ந்திருந்தது.

உண்மைதானே! நாம் எங்கிருந்து வந்தோம். எங்கே செல்கிறோம்? நாளையே நாளையே என்று தினம் கழியுது! ஆனால் இந்நுண்ணுயிருலகத்தில் சில சக்திகள் உண்டு என்பதை அடுத்த காண்டத்தில் (The Godheads of Little Life) அசுவபதியுடன் பார்க்கிறோம். ஆனால் இச்சக்திகள் பொம்மலாட்டக்காரன் இயக்கும் பொம்மைகளே! விதியென்னும் பொம்மலாட்டக்காரன் அசைப்பதை அனுபவித்தாலும், அவனை இந்த பொம்மைகளால் பார்க்க முடிவதில்லை. ஆண்டவனை அறியும் ஆற்றல் இல்லாதவை. தோன்றியது முதல் இன்றுவரை மனிதனும் மிருகமும் மாறவில்லை. மாற்றியமைக்க மனிதன் முனைந்தாலும், அவனால் நல்லபடியாக மாற்றம் தேடமுடிவதில்லை. பகுத்தறிவின் உதவி மாத்திரம் போதும் என்றிருந்தால் மனிதனால் விண்ணினைச்சாடியிருக்கமுடியுமோ?

அப்படியொரு உலகத்தையும் அசுவபதி காண்கிறான். பெருவாழ்வின் ராஜ்யங்களும் தெய்வங்களும் (The Kingdoms and Godheads of Greater Life) எனும் காண்டத்தில் இந்த தெய்வங்கள்தான் நினைவு, நம்பிக்கை, நன்மை நடக்கும் எனும் தீர்மானம் என்பவை என்கிறார். இத்தெய்வங்கள் உதவியுடன் நாம் முன்னேறலாம்தானே! மனித வாழ்க்கையின் முன்னேற்றத்திற்குத்தான் துயரம், அவநம்பிக்கை, சாவு என்று எவ்வளவு தடங்கல்கள்! அவற்றையும் தெரிந்துகொள்ளவேண்டும். வியாதி எப்படிப்பட்டது என்று தெரிந்தால்தான் மருந்து கொடுக்கமுடியும். அதற்காக அசுவபதி மன்னன் பேரிருளில் இறங்கிச்செல்கிறான். இதுவே இருளினுள் இழிதல் (The Descent into Night) எனும் காண்டம்.

இதுவே நரகம். இங்கு அரசாட்சி புரிபவன் இருளின் சக்கரவர்த்தி. சிருஷ்டியை நோக்கியவாறு பேரிருள் அமர்ந்திருக்கிறதாம். ஆற்றல், காட்சி, ஒளி, அன்பு போன்றவை இங்கு கோணலாகிவிட்டன. அறியாமை எனும் பாம்பு இருப்பதன் காரணமாக கெட்டதை நல்லதாகவும், கசப்பை இனிப்பாகவும் காணும் வக்கிர அனுபவங்களாகிவிட்டன. வாழ்வும் பிரேமையும் பாவத்தாலும், கையாலாகத்தனத்தினாலும் பீடிக்கப்பட்டுள்ளன. முன்னேற்றத்தை சாவு தடுக்கிறது. காதல் காமமாகிவிட்டது. அசலெல்லாம் காணாமல் போயின. நகல்களுக்கே இங்குமதிப்பு. பொய்மையே அரசியல்நடத்துகிறது. அராஜகத்திற்குத்தான் எத்தனை உருவங்கள், செயற்பாடுகள்!

தமக்குள்ளே சண்டையிட்டுக்கொள்ளும் சமயங்களிடையே
ஒரு மதம் குருதிதோய்ந்த சிம்மாசனத்தில் வீற்றது.
நூற்றுக்கணக்கில் கொடுங்கோன்மை உயிரைப்பறித்தது.
பொய்கூறி, கட்டாயப்படுத்தி ஒற்றுமை எனக்காட்டியது.
வெற்றுத் தோற்றமே கொண்டாடப்பட்டது.
இலட்சியவாதிக்குக் கிடைத்ததெல்லாம் கேலிதான்.
கூட்டத்தினால் விசிலடிக்கபட்டு, படித்தவரும் தலையாட்ட,
ஆன்மிகத்தேடல் அனாதையாய் அலைந்தது.

இக்கொடுங்கோல் அரசினை ஸ்ரீ அரவிந்தர் வர்ணிக்கும்போது நமக்கு ஹிட்லரும் அவனது நாஜி (Nazi) அடியாட்களும் செய்த அக்கிரமங்கள் நினைவுக்கு வராமல் போகாது. இவ்விருளில் அகாதமான ஆழத்திற்குச் சென்ற அசுவபதி பொய்மை கிரீடம் தரித்துக்கொண்டு அமர்ந்திருக்கும் உலகினைக் காண்கிறான். பொய்மை உலகம், கொடுமையின் தாய், இருளின் புதல்வர்கள் எனும் காண்டம் (The World of Falsehood, the Mother of Evil and the Children of Darkness) அடுத்து வருகிறது. இதைவிட பயங்கரக் காட்சியை நினைத்துப்பார்க்கவும் முடியாது.

இறைவன் மனிதனுக்குப் படிப்படியாக பரிணாம வளர்ச்சி கொடுத்து மனம் எனும் அற்புத சக்தியை அருளியிருக்கிறான். கொடுமையிலும் கொடுமை! மனத்தை வைத்துக்கொண்டு மனிதன் என்ன பயங்கரங்களை இந்நிலவுலகில் விளைத்துவிட்டான்! இருளின் புதல்வர்களான இந்த அரக்கர்கள் போடும் ஆட்டம் என்ன!

அக்கினியின் கத்தி, ஒளிமிகு தெய்வீகக்கண்,
இவற்றிலிருந்து பதுங்கி இருண்ட கோட்டைகளில்
ஆதவனற்ற அமைதியில் வாழ்கின்றனர்.
சொர்க்கத்தின் கதிரேதும் இங்கே நுழைவதில்லை.
விஷமயமான முகமூடிகளால் காக்கப்பட்டு,
சாவின் பல தோற்றம் காட்டும் பட்டரை தன்னில்
இருளின் ராக்ஷஸ மக்கள் அமர்ந்து, இவ்வுலகின்
துன்பியல் நாடகமே தங்கள் அரங்கமாக்கினர்.

இப்படியும் ஒரு பயங்கரம் உண்டா எனும் அதிர்ச்சியில் உறைந்து நிற்கும் அசுவபதி, இந்த நரகம் தோன்றக் காரணம் என்ன என்று

யோசிக்கிறான். இந்த விஷத்தைக் குடித்தால்தான், இந்த பயங்கரத்தை அனுபவித்தால்தான் காரணம் தெரியும் என்றால் அதற்கும் தயார்! அந்த கணத்திலேயே அறியாமை தோற்றுவிக்கும் காட்சிகள் இவை எனும் உண்மை அவனுக்குப் புலப்படுகிறது. கும்மிருளில் தோன்றிய நரகம் மாய்கிறது. இருள் நிலைப்பதில்லை, பகல் இனி வந்துவிடும் எனும் நம்பிக்கை அவனுள் பாய்கிறது. சொல்லினால் விளக்கமுடியாத இளங்காலை நேரம் மலர்கிறது. நரகத்தின் நினைவுகளை தள்ளிவைத்துவிட்டு அசுவபதி மேலே செல்கிறான்.

கையோடு அசுவபதிக்கு உயிரோட்டமுள்ள சொர்க்க அனுபவம் ஏற்படுகிறது (The Paradise of the Life-Gods). அழகு, அமைதி, அன்பு, ஆற்றல், ஆசை, சுகானுபவம், கனவு அனைத்துமே இனிமையாக இருக்கிறது. ஒளி, அன்பு இரண்டுடனும் உயிர் கைகோத்து உலவுகிறது. இங்கு அனைத்தும் ஆனந்தமே! கந்தர்வர்களுடைய நாடுகளில் அசுவபதி நடக்கிறான். ஆகா! இறைவனின் மாட்சி எங்குமே நிறைந்திருக்கிறதே! அசுவபதியின் உடலில் கூட ஒரு தெய்வீக சாந்தி இணைகிறது. சொர்க்கத்தின் துணைவனாகிவிட்டதுபோல் அவனுக்குத் தோன்றுகிறதாம். அவன் உடலெங்கும் ஆனந்தம், அவனது ஆன்மாவில் தெய்வீக இனிமை.

சுப்பிரமணிய பாரதியாருக்கு இப்படியொரு அனுபவம் ஏற்பட்டிருக்கிறது. தனது வசன கவிதையில் அவர் எழுதுவார்:

"இவ்வுலகம் இனியது. இதிலுள்ள வான் இனிமை
யுடைத்து. காற்றும் இனிது.
தீ இனிது. நீர் இனிது. நிலம் இனிது.
ஞாயிறு நன்று. திங்களும் நன்று....
குழந்தை இன்பம். இளமை இனிது. முதுமை நன்று.
உயிர் நன்று. சாதல் இனிது."

இப்படி எல்லாம் இன்பமயமான உலகத்திலே ஒரே ஒரு குறை. இதற்குமேல் இங்கு வளர்ச்சிக்கு வழியில்லை. அதனால் அசுவபதி மேலே செல்கிறான். இங்கு பரிணாம வளர்ச்சியில் மனம் மலர ஆரம்பித்திருப்பதால் இந்த உலகினை சிறு மன உலகம், The Kingdoms and Godheads of the Little Mind என்பார் ஸ்ரீ அரவிந்தர். இங்கு மனமெனும் அரசனுக்கு மூன்று அடிமைகள் ஊழியம்

செய்கின்றனர். 1. எண்ணம் எனும் சித்திரக்குள்ளன் 2. முன்யோசனையில்லாத புத்தி. 3. பகுத்தறிவு. இவை அனைத்துமே மனிதன் மேன்மை பெற உதவும் கருவிகள் என்றாலும், மனிதனை அழிக்கும் வகைகளாகவும் உள்ளன. இவற்றில் பகுத்தறிவுக்கு அதிக பலம் உண்டு. பகுத்தறிவு எனும் கருவி மூலம் பல கலாச்சாரங்கள் தோன்றியுள்ளன. இக்கருவி நன்கு ஆலோசித்து முடிவுக்கு வருவதால், மனிதன் அறிவியலில் மாபெரும் முன்னேற்றம் கண்டிருக்கிறான். அதே சமயம் புதுப்புது படைப்புகளும் எண்ணங்களும், வேறு புதுமைகள் பல தோன்றுவதால் விரைவிலேயே குப்பைக் கூடைக்குச் சென்றுவிடுகின்றன. மேலும், பகுத்தறிவு ஆன்மாவைப் புறக்கணிப்பதன் மூலம் சிருஷ்டியின் தெய்வத்தன்மையை ஏற்காமல் வரண்டு போகிறது. இங்கு சஞ்சரிக்கும்போது அசுவபதிக்கு இரண்டு ஒளிமிகு தெய்வங்கள் தென்படுகின்றன. இவையே மகாமன உலகின் தெய்வங்கள். இவையே அவர்களது உலகங்கள். The Kingdoms and Godheads of the Greater Mind.

மனத்தின் உயர்நிலை நோக்கிப்பயணிக்கும் அசுவபதி, மானுடத்தின் கட்டுக்களிலிருந்து ஓரளவு விடுதலைபெற்று தனது பூர்விக பூமியான உயர்மனத்தை அடைகிறான்.

தியானத்தின் கொடுமுடியாம் சமாதிநிலையிலே
கண் காணா உயரம் நோக்கி எண்ணப்படிகள் எழும்பி
காலத்தின் இறுதியிலே அனந்தத்தைத் தீண்டும்.
இயற்கையும் ஆன்மாவின் தனித்தன்மையுடன் பேசும்.

ஒவ்வோர் படியிலும் பல உலகங்கள். அதிமானஸ நிலைகளின் ஆரம்பகட்டங்களில் மூன்று உலகங்கள். முதல் உலகம் நம் உலகம் போன்றதே. மனிதன் தனது அறிவினைப் பெருக்கி, சிருஷ்டியின் மூல காரணங்களை இங்கு புரிந்துகொள்கிறான். அடுத்த கட்டத்தில் பெறும் அறிவு அவனுக்கு ஒரு சுதந்திர நிலையை தருகிறது. நடக்கமுடியாது, செய்ய முடியாது என்பனவற்றைக்கூட திட்டமிட்டு செயற்படுத்தலாம் எனும் தைரியம் பெருகுகிறது.

சிரவனபெலகொலாவில் மாபெரும் ஜைன சிற்பம் அமைக்க நினைத்து, அதைச் செய்துமுடித்தவன் போன்ற மாமனிதர் வாழுமிடம் இதுவே. இது போல அறிவியலில் சிறந்த கண்டுபிடிப்புக்கள்

தோன்றிடக்காரணமான மேதைகள் வாழுமிடம். சிந்தனைச்சிற்பிகள் வாழுமிடம்மூன்றாவதுஉலகம்.இங்குமனிதனின்சிந்தனைக்கோவைகள் உலக இயலைவிட்டு, வேறு உயர்ந்த, தெய்வீக ஆற்றலால் உந்தப்படுகின்றன. இங்கு இருப்போர் திருஷ்டா எனப்படும் ரிஷிகள், தாங்கள் கண்ட தெய்வீகக்காட்சிகளை நமக்கு எடுத்துக்கூறும் சக்தி உடையவர்கள். இவர்கள் தவத்திற்கு பராசக்தியே பலன் தருகிறாள், அவர்கள் இருக்குமிடத்திற்கு வந்து காட்சி தருகிறாள். பலனாக மனிதன் புதிய வாழ்வினைப்பெறுகிறான். புது யுகம் பிறக்கிறது.

அசுவபதிக்கு ஒரே உற்சாகம். மனிதனது வாழ்வில் உள்ள கள்ளங்களைப்போக்கிஉலகிலேபுதுவாழ்வுமலர்விக்கவேண்டுமென்பதே அவன் நோக்கம். அதனால் மேலே ஆர்வமுடன் சென்று இலட்சியத்தின் சொர்க்கத்தினை (The Heavens of the Ideal) அடைகிறான்.

இந்த அற்புதப்பிரயாணத்தில் ஒவ்வோர் அடியிலும்
ஒரு புது ஆச்சரியம், ஆனந்தம் விளைகிறது.
வாழ்க்கையின் மாபெரும் ஏணியில் ஒரு புதிய அடி
மணியாக ஜொலிக்கும் தீயாகத்தோன்றும் அற்புதம்.

லட்சிய உலகின் படிகள் இருவகையான மேல்தடங்களுக்கு எழும்புகின்றன. ஒன்றில் ஏறிச்சென்றால் அழிவற்ற ரோஜா உலகினை அடைகிறோம். இறைவனின் அருளுக்கு ரோஜா ஒரு அழகிய உருவகம். இங்கு அமுதமயமான அமைதி பெறலாம். மற்றொன்றினைக்கடந்தால் அங்கு அழிவற்ற அக்னியின் உலகங்கள் இருக்கின்றன. மனத்தில் கனன்றபடி மனிதனுக்கு வாழ்வினை மாற்றியமைக்கும் வழிகாட்டுகிறது இந்த அக்னி. இதற்கு மனமே யஞ்ய வேதி; மக்கள் நலனுக்காக தம்மை அர்ப்பணித்துக்கொண்டுள்ள தெய்வங்களே புரோகிதர்கள்; மானுடமே வேள்விச்சாலை. அனைத்திற்கும்மேலே அழிவற்றரோஜாவும் ஆற்றல்மிகு அக்கினியும் இணைந்த உலகமும் உண்டு. அதையும் கடந்து செல்லும் அசுவபதி மனத்தின் மையத்தை அடைந்துவிடுகிறான். In the Self of Mind எனும் பதிமூன்றாம் காண்டத்தில், அவன் மனத்தின் அகாதமான பரப்பில் தன்னந்தனியனாக நிற்கிறான். பயணம் முடிந்துவிட்டதோ? அரசனும் இலக்கை அடைந்துவிட்டானோ?

முதலில் அப்படித்தோன்றினாலும், கையோடுஇதுநிருவாணநிலையின் அமைதி என்று தெளிகிறான். அவனுக்கு மட்டும் இந்த அமைதி கிடைத்து

என்ன லாபம்? மனிதகுலம் இன்னும் துயரங்கள், அமைதியின்மை, சாவு முதலியவற்றால் பீடிக்கப்பட்டிருக்கிறதே எனும் நினைவு அவனுள் எழும்புகிறது. உடனே அவனுள் தோன்றியிருந்த ஆர்வங்கள், நிச்சயங்கள், ஆச்சரியங்கள் அனைத்தும் சுக்குநூறாகிவிடுகின்றன. மனிதனது நல் வாழ்விற்கு இந்த நிருவாண மௌனம், அமைதி பிரயோசனமிலலை. அசுவபதியின் கேள்விக்கு பதில் சொல்பவர் வேறு யாரோ? அப்பெருமகனை எங்கு தேடுவது? அவனைச்சுற்றிலும் நிசப்தம். தனிமை. கீழே நோக்கினால் உலகத்தின் கொந்தளிப்பு. சிருஷ்டி என்பது மேலே மௌனம், கீழே இரைச்சல், அவ்வளவுதானா? அல்லது இந்த சிருஷ்டிக்கு ஏதேனும் பொருள் உண்டா?

இந்த நீண்ட, அகன்ற மௌனத்திலிருந்து விடுபட அசுவபதியின் முன்பாகதெய்வத்தின் குகைப்பாதைஒன்று தென்படுகிறது.எங்கிருந்தோ வரும் ஒலியே வழிகாட்ட அசுவபதி அங்கே செல்கிறான். அவன் செல்லுமிடத்தை உலகின் ஆன்மா, The World soul என்று ஸ்ரீ அரவிந்தர் குறிப்பிடுகிறார்.இங்கு அனைத்துமே ஆன்மசக்தியாகஇருக்கிறது.இங்கு பிறப்பு இறப்புக்களிலிருந்து விடுதலைபெற்ற ஆன்மாக்களும், அடுத்த பிறப்பினை எதிர்நோக்கிய ஆன்மாக்களும் உலவுகின்றன. எங்குமே ஒரு ஆன்மிகப்பேரின்பம் தெரிகிறது. இங்கு செல்லும்போது அனைத்திற்கும் மூலமான அழிவற்ற புருஷ-பிரகிருதி காட்சியைக்காண்கிறான். இவர்களே படைப்பிற்கு மூலகாரணம். அர்த்தநாரீச்வர சொரூபமாக விளங்கும் இவர்கள் பின்னால், அறியவொண்ணாததிலிருந்து இவர்களை படைக்கும் பராசக்தி காணப்படுகிறாள். அவளை நோக்கி அசுவபதி கைகூப்புகிறான். இவனைப்போன்ற ஆர்வலர்களை இந்த அன்னை எதிர் நோக்கியிருக்கிறாளாம்.

இவளே "ஒன்று" எனப்படும் அனந்தத்திற்கு வழிகாட்டும் சக்தி. இதுவரை கண்ட ஒவ்வொரு நிலையிலும்கூட இவளது ஆளுமை படர்ந்திருக்கிறது. அனைத்திற்கும் மேலே இருந்தபடி அனைத்திற்கும் அடிக்கல்லாக இருக்கிறாள். இவ்வுலகமே அவளது புரிந்துகொள்ளமுடியாத முகமூடிதானே! அவளுடைய சக்தியல்லவா மனிதனை நடத்துகிறது? இந்த அன்னையை அவன் கைகூப்பி வணங்கும்போதே, அவனது இதயம் அவளிடம் பிரார்த்தனை செய்தது. பிரார்த்தனைக்கு இணங்கி தன்னை மறைத்த வண்ணமிகு திரையின் ஒரு மூலையைச்சிறிதளவு நீக்கினாள். அசுவபதியும் மாயாத ஒளியினைக்கண்டான். அக்கண்களின் பிரகாசம் அவனைத்

திக்குமுக்காட வைத்தது. என்ன ஒளி, என்ன ஆனந்தம்! அவளது சக்தியில் தேனும் மின்னலும் பாய்கின்றனவே! அசுவபதியும் பரவசக்கடலில் மூழ்கி, எழும்பி, பொன்னான ஆன்மிக மதுவைக்குடித்த நிலையை அடைந்தான். அவனது ஆன்மாவின் மௌனத்திலிருந்து ஆர்வம் நிறைந்த பிரார்த்தனை எழும்பியது. அவனது மௌனமான இதயம் முழுமையாக சரணாகதி செய்தது. அவள் திருவடியில், நினைவிழந்து, நெடுஞ்சாண்கிடையாக விழுந்துவிட்டான்.

அசுவபதியின் தவத்தில் இரண்டாம் பாகம் பேரறிவு ராஜ்ஜியங்கள் (The Kingdoms of the Greater Knowledge) எனும் காண்டத்துடன் நிறைவுறுகிறது. சற்றுநேரம் நினைவிழந்து கிடந்த அசுவபதி மீண்டும் எழுந்தபோது அனந்தத்தினை நோக்கி மனிதன் செய்யும் பயணம் இங்கே முடிவுறுகிறது என்பதை உணர்ந்து கொள்கிறான். இங்கே அனைத்தும் பூஜ்யமெனவும் கொள்ளலாம் அல்லது இங்கிருந்துதான் சிருஷ்டி தொடங்குகிறது என்றும் காணலாம். இனி அறியவொண்ணாத அனந்தத்தினை எவ்வாறு சந்திப்பது? தவயோகம் மூலமாக அவனது அகக்காட்சி தேச, கால, நடப்புக்களை மீறி அனைத்தையும் அறிந்துகொள்ளும் ஆற்றல் பெற்றுவிட்டது. மனித குலம் பெறக்கூடிய பெருமைகள், நன்மைகள் இன்னும் ஏராளமாக இருப்பதைக் கண்டுவிட்டான். இதுபோல மனித வாழ்வை மாற்றியமைக்க முடியுமா என்பதே இப்பொழுது அவன் மனம் சந்திக்கும் கேள்வி.

இதோ பேரறிவு: நற்காட்சிகள்: அவனே சிருஷ்டிகர்த்தாவாகிவிடலாம் போல் ஆற்றல்கள் அவனுள் நிறைந்துவிட்டன. தெய்வீக உண்மை நிலவும் நாடுகளில் அசுவபதி மகிழ்ச்சியுடன் சஞ்சரிக்கிறான். நேற்று, இன்று, நாளை எனும் வித்தியாசங்கள் இப்பொழுது அவனைக்குழப்பவில்லை. அவனது ஆன்மா காலத்தை முன்னோக்கிப் பாய்ந்து செல்லும் நதியாக, கவனித்தவாறு இருந்தது. உலகளாவிய அழகு அங்கே தோன்றியது. சாமானிய பொருள்களில் இருக்கும் பேருண்மைகள் அவனுக்குப் புலப்பட்டன. இந்நிலையை சுப்பிரமணிய பாரதியார் மிக அழகாக எடுத்துச்சொல்வார்:

எத்தனை கோடி இன்பம் வைத்தாய் - எங்கள்
இறைவா! இறைவா! இறைவா!

சித்தினை அசித்துடன் இணைத்தாய் - அங்கு
சேருமைம்பூதத்து வியனுல கமைத்தாய்
அத்தனை யுலகமும் வர்ணக் களஞ்சிய
மாகப் பலபல நல் லழகுகள் சமைத்தாய்

(எத்தனை கோடி இன்பம்)

மௌனத்தின் விளிம்பினிலே, உலகத்தின் ஓசைகள் கேட்டவாறு அசுவபதி முத்தீ ஓம்பினான். தூக்கம், அகக்காட்சியின் விளிம்புகளில் இருந்தான். அருள்வாக்கின் ஆன்மிகக்கூவல் அவனை ஈர்த்தது. மனத்தைத்தாண்டிய நிலையில் அமுங்குதலில்லாத சொல்லின் மூலத்தைக்கண்டான். இதுவரை மானுடம் அறிந்தது அனைத்தையும் அறிந்துகொண்டான்.

அறியவொண்ணாததின் அடியினையும் பாாத்தான். பொய்மையறியாத நாட்டினிலே, உலகத்தின் ஆன்மாவில் பத்திரமாக அமர்ந்த இம்மாமனிதன், உடலை ஆன்மாவிடம் ஒப்புவித்துவிட்டு ஒரே சைதன்னியமயமாக ஒளிர்ந்தான்.

அனந்தத்தின் ஆனந்தத்திலிருந்து ஓர் அலை அனுபவமாக,
வாழ்க்கை ஆன்மாவின் சிறந்த பயணமாயிற்று.
பரமாத்மாவின் சக்தி, ஒளி காட்டும் ராஜ்ஜியத்தில்
எல்லையற்ற பரவெளியின் கர்ப்பத்திலிருந்து
தோன்றிய புதுக்குழந்தையாக இருக்கும் அவன்
அனந்தத்தின் தெய்வச்சிசுவின் அறிவு பெற்றான்:

அசுவபதி இப்பொழுது சரளமாக தேவர்களுடன் பேசும் ஆற்றல் பெற்றுவிட்டான். பேரறிவாளர்கள் அவனது தோழர்கள் ஆயினர். அவன் மனம் ஒளியில் மூழ்க, அவன் இதயத்தில் அனைத்து அறிவும் குடிகொண்டது. மனத்திற்கு அப்பாற்பட்ட சக்திகள் இப்பொழுது அவனுக்கு சகஜமாகிவிட்டன. சூரியனுலகின் அருகே செல்லக்கூடிய ஆற்றல் பெற்றுவிட்ட அசுவபதியின் செயற்பாடுகள் தேவர்களை ஒத்திருந்தன. உலகங்களை செலுத்தும் சக்தியின் கடிவாளங்களை அவனது ஆளுமையில் கொண்டுவந்துவிட்டான் என்று ஸ்ரீ அரவிந்தர் அசுவபதியின் தவத்தில் இரண்டாவது பாகத்தை நிறைவு செய்கிறார்.

# 5. பராசக்தி பர்வம்

பொதுவாக இராமாயண காவியத்தில் அனைத்துக்காண்டங்களும் மேன்மையானவையே. ஆனால் சுந்தர காண்டம் வெகுவாகப் போற்றப்படுவது. அதுபோலவே, ஸ்ரீ அரவிந்தர் அருளிய சாவித்ரி காவியத்திலும், பராசக்தி பர்வத்தைப் (The Book of the Divine Mother) போற்றிவருகிறோம். இப்பருவம் சுமாராக சாவித்ரி காவியத்தின் மையத்தில் அமைந்திருக்கிறது. அசுவபதியின் யோகம் பெற்ற பலனைக்கூறுவது. காவியத்தை முழுமையாகப் பாராயணம் செய்ய முடியாவிட்டாலும் இப்பருவத்தைப் படித்து வந்தால் நலன்கள் பெருகும்.

அசுவபதியின் யோகம், அவ்வரசனைப் பொறுத்தவரையில் பலனைப் பெற்றுவிட்டது. அவனது மனம் ஒளியால் சூழப்பட்டுவிட்டது. அனைத்து அறிவும் அவனது இதயத்தில் நிறைந்துவிட்டன. எண்ணிலடங்காத ஆற்றல்கள் பெற்றுவிட்டான். தேவர்களுக்கு சமமான தேஜஸை அடைந்துவிட்டான். ஆனாலும் அவன் மனம் சமாதானம் அடையவில்லை. உலகில் பல்வேறு துயரங்கள் நிறைந்திருக்கும்போது, அவனால் மாத்திரம் சுகமாக இருக்கமுடியுமோ? தான் பெற்றுவிட்ட சக்திகளை உபயோகித்து உலகிற்கு நன்மை புரியவேண்டும். பல்வேறு உடல் மற்றும் மன நோய்களாலும் மரணபயத்தாலும் அவதியுறும் மனிதகுலத்திற்கு நன்மை செய்யவேண்டும். அதற்காகக் கடும் தவம் இயற்றி அப்பரம்பொருளை இவ்வுலகில் அவதரிக்கச்செய்து காலனைக் காய்ந்திடவேண்டும். இது முடியும் என்று அவனுக்குத் தெரிகிறது. பரிணாம வாதத்தில் மேல் நோக்கிச்செல்லும் மானுடம் நிச்சயமாக ஒளி நிறைந்த வாழ்வைப் பெறும் என்ற நம்பிக்கையிருந்தாலும், இப்பரிணாமம் மிக மெல்ல நடந்து கொண்டிருக்கிறது. இன்னும் எத்தனை நாள் மனிதன் இப்படி ஒவ்வொரு நாளும் மரணத்திற்கு பயப்படுவது? இனி பொறுப்பதில்லை என்று அறியவொண்ணாத அப்பரம்பொருளைத்தேடி அசுவபதி மீண்டும் தியானத்தில் அமர்கிறான்.

அவன் மனத்தையும் தாண்டிய பேருண்மைப் பெருவெளியில் இருக்கிறான். அவன் முன்னால் பரந்து விரியும் உலகினை அவனால்

புரிந்துகொள்ள முடியவில்லை. இப்பேருண்மையில் தான் பிறந்த இடமான ப்ரம்மத்தில் ஆன்மா என்பது கலந்து மறையவேண்டும். இல்லையேல் அசைக்கமுடியாத, மாறுதல் அறியாத ஒரு சிறந்த உண்மையைப் பெறவேண்டும். அப்படிப்பெற்ற உண்மை மூலம் உலகிற்கு ஓர் ஒளிமயமான எதிர்காலம் தரமுடியும். உருவமற்ற அந்த ஆதிபராசக்தியை எப்படித்தெரிந்து கொள்வது?

"அனைத்தும் வாழ்வது அதனாலே. அது எதனாலும் வாழவில்லை.
அளப்பறிய ஒளி வீசும் ரகசியம் அதுவே.
திரைகளினால் மறைக்கப்பட்டு நாம் காணாத ஒன்று.
மேலே அண்டங்கள் மாறிடும் நாடகம்.
அங்கே அனைத்திற்கும் காரணமான பொருள்,
உருவமின்றி, ஏதும் உட்புகாதபடி அமர்ந்திருக்கிறது -
அது நித்தியமானது, எல்லையற்றது, சிந்தனைக்கு எட்டாதது,
ஓர் தனிப்பொருள்."

இச்சமயத்தில், ஒரு சமுத்திரத்தில் எழும்பி அதற்குள்ளேயே விழுந்து கரையும் அலை போல் அசுவபதி இருந்தான். அவன் மனம் அரற்றிய வேண்டுதலுக்கு ஒரு விடை போல, ஏதோ ஒரு பதில் போன்ற அனுபவம் அவனுக்குத் தோன்றியது. அதற்கு உருவமில்லை, குரலுமில்லை. மௌனமான, புரிந்து கொள்ளமுடியாத, அழிவற்ற, தனிப்பட்ட அனுபவமாக இருப்பதை அசுவபதி உணர்ந்தான். மானுட வாழ்க்கையின் சின்னங்கள் அவனிடமிருந்து அகன்றன. அவன் இப்பொழுது அந்த அகாதப்பெருவெளியில் தனித்து இருக்கவில்லை. சமுத்திரத்தில் கலந்து போன நீர்த்துளியானான். இதுவே அவனது பயணத்தின் முடிவா? 'தான்' என்பதை இழந்து பரமாத்மாவுடன் அத்வைத நிலைபெற்றுவிட்டானா? இந்தநிருவாண சுகம் அவனைப்பொருத்தமட்டில் வரவேற்க வேண்டியதுதான். ஆனால் அசுவபதி தனக்கென வாழா பிறர்க்குறியாளன் அல்லவோ? அவன் தன்னளவில் சுகம் பெற்று ஆனந்தத்தில் தோய்ந்தால் என்ன ஆகும்? அவனைப்போன்ற ஆர்வம் படைத்தவர்கள் மூலம்தான் இவ்வுலகம் உய்யமுடியும் என்று தெரிந்திருந்தும், அதற்கான வழியைத்தேடாமல், தனிப்பட்ட நிலையில் அத்வைத நிலையை ஏற்பதோ? அந்த அத்வைத நிலை 'இது அல்ல', 'இது அல்ல' (நேதி, நேதி) என்று கூறி முடிந்துபோகுமே!

"தெய்வீகக் காதலனின் குரல் கேட்பது எங்கே?
இதயத்தினுள்ளே இருக்கும் அமரத்துவம்,
உயிர் தந்திடும் தீயை நோக்கி மறையோதும் குரல்,
ஓம் எனும் ஏற்புடைய, மேன்மையான சொல்,
மகிழ்ச்சிக்கும் அமைதிக்கும் இடையே உள்ள பாலம்,
மணப்பெண்ணின் அழகு, ஆர்வம்,
மேதகு விரோதிகள் ஒன்று சேர்ந்திடும் அறை,
காக்கும் புன்னகை, நிகழ்வுகளின் தமனிய சிகரம் எங்கே?

ஆனால் ஒன்று நினைவில் கொள்ளவேண்டும். இந்த அளப்பரிய மௌனம், அசைவற்ற அமைதி யாவுமே சாவின் அமைதி அல்ல. இந்த மவுனத்திற்குள் ஒரு மாபெரும் ஆற்றல் உறங்கிக்கொண்டு இருக்கிறது. அந்த ஆற்றலை உசுப்பி விட்டால், 'நேதி' (இல்லை) என்பது 'அஸ்தி' (உண்டு) என்றாகிவிடும். இல்லை என்பது இல்லாமல் போகும். அதனால் அசுவபதி இந்த நிருவாண சுகத்தில் ஆழ்ந்து விடக்கூடாது. அதையும் தாண்டி மேலே செல்லவேண்டும். எங்கு சென்றால் அவனது கேள்விக்கு விடை கிடைக்குமோ, எங்கு சென்றால் அவனது ஆசைகள் நிறைவேறுமோ, எங்கு சென்றால் மானுடம் தெய்வீகமாகும் சித்தினைப் பெறலாமோ, அங்கு அவன் செல்லவேண்டும். அதனால் அசுவபதி நிருவாண நிலையின் அமைதிக்குள் தன்னை இழந்து விடாமல், நம்பிக்கையே தன் துணையாக தியானத்தில் இருக்கும்போது அவனுக்கு ஓர் அனுபவம் ஏற்படுகிறது. மங்களகரமான ஓர் உருவம் அவன் பக்கம் வந்து, தாயன்புடன் அவனை அணைத்துக்கொண்டது.

"இவ்வாறு ஜீவனின் நிருவாண விளிம்பினில்
அவனது ஆன்மாவின் ஆசைகளும் ஆர்வங்களும்
பெருவெளியில் தம்மை இழக்கும் நிலையில்,
அவன் விரும்பிய ஒரு தோற்றம் அருகினில் வந்தது.
முடிவான அமைதியின் மோனத்தினூடே,
வியத்தகு பரநிலையின் மூலத்திலிருந்து,
அற்புதமும் ஒளியும் ஒன்றான ஒருருவம்
பராசக்தியின் இனியதொரு சித்தாம் குறிப்பாக
ஆனந்தத்தின் மூலத்தினுள் பாய்ந்து,
அனந்தத்திலிருந்து விடுதலை பெற்றதாக,

சாச்வதமாம், பூரணமாம் என்றொருவர் வந்தார்.
அறிவு, ஆற்றல், ஆனந்தம் எனும் ஒரு தேவி
தாய் சேயைக்கையிலெடுத்து அணைப்பதுபோல்
இயற்கை, உலகம், ஆன்மா அனைத்தையும்
தன்னுடைய மார்பினிலே சேர்த்து அணைத்துக்கொண்டாள்.

இது யார்? இவளே பேரழகுடனும் பேராற்றல்களுடனும் கூடிய பராசக்தி. இவளே மண்ணையும் விண்ணையும் இணைக்கும் தெய்வம். அசுவபதி தன்னுள்ளே எவ்வித மாசுமில்லாமல் தூயவனாகிவிட்டதாக உணருகிறான். அறிவுமயமாக அவன் மாறவும், எண்ணிக்கையில்லா ஆற்றல்கள் அவனுள்ளே பாய்கின்றன. ஆனந்த நிலையின் புல்லரிப்புடன் அவன் இருப்பதற்கு அந்த பராசக்தியே காரணம். அவளிடம் அனைத்து கலைகளும் அறிவும் நிறைந்திருக்கின்றன. அவள் தரும் ஒளிமூலம் அசுவபதி அவளைக்காண்கிறான். ஸ்ரீ அரவிந்தர் இங்கு அற்புதமாக தேவியை மந்திரச்சொற்களால் துதிக்கிறார்:

"உருவமும் அருவமும் ஒன்றாக நின்றாள்.
நோக்கும்போதே அகண்டத்தினை கடந்து சென்று
நித்தியத்தின் கூட்டத்திலே ஒரு திருமுகம் தெரிந்தது.
கண்மூடிய நிலையில் உலக மக்கள் தேடும்
மட்டற்ற மகிழ்ச்சியாக அவள் உருக்கொண்டாள்.
அவளது உடலழகு ஒரு பேரானந்தக்கடல்.
பிறவி, விதி, தொழில் அனைத்திற்கும் தலைவி.
பருவங்கள் மெல்ல அவள் குரல் கேட்டுச் சுழலும்.
காலத்தின் அடிக்கற்களை அவளது கைகள் மாற்றும்.
இரவு மறைத்திடும் ரகசியம் அவளே.
ஆன்மாவின் ரசவாத ஆற்றல் அவளே.
அவளே நமக்கோர் பொற்பாலம், அற்புதமான நெருப்பு.
அறியவொண்ணாததின் ஒளிமிகு இதயமவள்,
இறைவனின் ஆழத்தில் இருக்கும் மௌனசக்தி.
அவள்தான் மகாசக்தி, தவிர்க்கமுடியாத சொல்,
கடினமான நம் ஏற்றத்திற்கு உதவிடும் காந்தம்.
நமது சூரியன்களை ஏற்றும் ஆதவனாம் தேவி,
அறியப்படாத பரத்திலிருந்து கீழ்நோக்கும் ஒளி,

அடையமுடியாததிலிருந்து அழைக்கும் ஆனந்தம்,
இன்னும் அவதரிக்காத மாபெரும் சக்தி.
வாழ்க்கையின் தாபத்தை அவளது திருவடிகள் நீக்கிடவே,
அரைஇருட்டு மனதிலுள்ள மாசுகளை அகற்றிடவே
அனைத்து சிருஷ்டியும் அவளை மௌனமாக அழைத்து
மனிதனின் மனதிலுள்ள முத்திரைகளை அகற்றி
மூடிப்போன இதயங்களில் அக்னிவளர்க்க வரவேண்டும்.
அதன் பின்னர் இங்கு யாவும் இனிமையின் சூழலே...."

அசுவபதிக்கு பிரமிப்பு ஒரு புறம்; ஒரு புறம் புத்துணர்வு. இலக்கினை அடைந்துவிட்டோம் என்ற களிப்பு. இந்த அன்னையிடம் அடைக்கலம் புகுந்தால் கையோடு மண்ணில் நல்ல வண்ணம் காணலாம்! அவளது ஆற்றல்கள் ஆசீர்வாதமாக அவனுள் பாய்ந்து அவனை செயல்வீரனாக்கும் என்பதில் சந்தேகமில்லை. இப்பொழுது அவன் வேண்டுவதெல்லாம் மகாசக்தியின் அன்பும், பேருண்மையும், ஆனந்தமும் நொந்துகிடக்கும் இவ்வுலகினைத் தீண்டவேண்டும் என்பது தான். மக்கள் புது வாழ்வு பெற வேண்டும்.

உலக வாழ்க்கையினைக்கண்டு வெதும்பும் நாம் கூட புது வாழ்வு வேண்டுகிறோம். ஆனால் அது எப்படிப்பட்ட வாழ்க்கையாக இருக்கவேண்டும் என்று நமக்குச் சொல்லத்தெரிவதில்லை. இருபதாம் நூற்றாண்டில் மனிதகுலத்தின் வாழ்க்கைமுறை வேகமாக, அற்புதமாக முன்னோக்கிப்பாய்ந்தது. ஆனால் மகிழ்ச்சி மனிதனை ஆட்கொண்டதா? கோபமும், வன்மமும், சூதும், வாதும் மறைந்தனவா? எங்கு பார்த்தாலும் போர். மிருகங்களுக்கும் கேவலமாக மனிதன் நடந்துகொள்கிறான். இறைவன் அவன் கையில் அறிவியலின் சாகசங்களை வைத்து என்ன பயன்? அதனால் அசுவபதி புது உலகில் மனிதர்கள் எப்படி இருக்கவேண்டும் என்பது பற்றி சிந்திக்கிறான். அவனது சிந்தனைகளும் அவனுக்குத்தோன்றிய காட்சியும் 'ஆன்மாவின் இல்லம்: புது சிருஷ்டி' எனும் காதையில் காண்கிறோம்.

நம்பிக்கையே அவதரித்ததுபோன்ற அசுவபதி, பிரார்த்தனை செய்கிறான். அண்டகோளங்கள் நிறைந்த சிருஷ்டி அவன் முன் விரிகிறது. ஆன்மஞானம் பெற்ற அசுவபதிக்கு இப்பொழுது சிருஷ்டி பற்றிய பூரண ஞானம் ஏற்படுகிறது.

"விரிந்து பரந்த இந்த அனந்தத்தில்
அவனது ஆன்மாவும் மனமும் தம்முள்ளே
அனைத்து ஆன்மாக்களையும் மனங்களையும்
அணைத்துக்கொண்டது. அவனது பரு உடலும்
மாந்தர்களது உடல்களுடன் இணைந்தது...
அவனிடமிருந்து பொங்கிப் பெருகிய கருணை
கடல்போல சிருஷ்டியைத்தாங்கி நின்றது."

உலகத்தின் கவலைகள், உழைப்பு, நம்பிக்கை அனைத்தையும் அவன் ஏற்று இனி வரப்போகும் புதிய உலகத்தைக்காண விழைகிறான். இது வெறும் கற்பனையல்ல. மகாயோகிகள் காணும் உண்மையான காட்சி. மனிதகுலத்தின் நெஞ்சில் நம்பிக்கை ஒளியை ஏற்றும் தவம்.

அசுவபதி கண்ட காட்சியினை ஸ்ரீ அரவிந்தர் தெரிவிப்பது ஒரு முயற்சிதான். அதை நமக்கு உதவியாகக்கொண்டு நாம் தியான யோகத்தில் ஆழ்ந்தால் நமக்கும் இதுபோன்ற காட்சிகள் தோன்றி, பேருண்மையை உணர்த்தும் என்பதில் சந்தேகமில்லை. அந்த வகையிலே அசுவபதி கண்ட காட்சிகள் நமக்குப் பேருதவி புரிகின்றன. நாம் வரிக்கப்போகின்ற உலகம் எப்படி இருக்கவேண்டும்? வேத காலத்திலிருந்தே மனிதர்கள் தவமியற்றி, புறவாழ்விலிருந்து நோக்கினை மாற்றி, அகத்தினுள் செலுத்தி, பேருண்மைகளை கண்டிருக்கிறார்கள். அப்படிக்கண்ட காட்சியினை ஓரளவு மற்றவர்களுக்குப் புரியவைப்பதற்காக மொழியை சிறப்பாகக் கையாண்டு வரும்போது, உண்மையான கவிதை அங்கு தோன்றுகிறது.

அகவாழ்வில் நாட்டம் கொண்டு, தவத்திருவாக ஒளிர்பவர்களுக்கு தெய்வீக அனுபவம் ஏற்படும்போது இப்படியான விளக்கங்கள் சிறந்த கவிதையாக பாய்வது கண்கூடு. வால்மீகி முனிவர் அப்படியொரு தவசிரேஷ்டர். ஒரு நாள் தமஸா நதிக்கு நீராடச்சென்றார். உடன் அவரது சீடன் பாரத்துவாஜனும் சென்றான். அச்சமயம் வேடனொருவனது அம்பினால் அடிபட்ட ஒரு ஆண் பறவை கீழே விழுந்து துடித்து இறந்து போனது. அப்பறவையின் இணையான பெண் பறவை ஓலமிட்டது. அனைத்தையும் துறந்த தவசியான வால்மீகி முனிவரது இதயத்தையே உருகவைத்ததாம் அப்பறவையின் துயரம். அவர் வேடனை நோக்கி சாபமிட முனைந்தபோது, அச்சாபம் கூட வால்மீகியின் உணர்ச்சி வேகத்தால் ஓர் அப்பழுக்கற்ற சுலோகமாக மாறிவிட்டது. அந்த

சுலோகமே இராமாயண காவியத்தின் ஆரம்பம். சத்தியமும் தர்மமும் இணைந்த உருவான இராமனின் தோற்றத்திற்குக் காரணம். தவமியற்றும் வேகம் ஒரு நெருப்பு ஜொலிப்பது போன்றது. அப்பொழுது தோன்றும் காட்சிகள் பொய்யல்ல. அவை சத்திய வாக்கு. சாவித்ரி காவியத்திலும் அப்படியொரு சத்திய வெள்ளமாக அசுவபதி காணும் காட்சிகள் நம்முன் தோன்றுகின்றன. வள்ளலார் போல், வால்மீகி போல், அசுவபதியும் சத்தியத்தின் சன்னிதானத்தில் நிற்கும் ஒரு மறுக்கமுடியாத சாட்சியாக விளங்குகிறான்; தான் காண்பதை விளக்குகிறான்:

"துயரத்தின் தேம்பல் எங்குமே இல்லை.
தொடர் மகிழ்ச்சியாக அனுபவம் வளர்ந்தது.
பொருள்கள் அனைத்துமே ஆனந்தமாயின.....
அவன் கண்ட இப்புது உலகிலே
பேரறிவாளனாக அவன் மாறிவிட்டான்.
அவனிடத்தில் அனைத்து ஒளியும் மின்னின.
அமைதியென்னும் கடலிலே அவன் ஓர் அலை."

வள்ளலார் ஆணிப்பொன்னம்பலத்தே கண்ட அற்புதக்காட்சிபோல் அசுவபதியும் பல நிலைகள் ஒன்றன் மேல் ஒன்றாக இருப்பதைக்காண்கிறான். இவை மிக அழகாக, சீராக உள்ளன. அதே சமயம் கட்டுதிட்டங்களால் அடைக்கப்படாத நிலைகள்.

"நமது உலகில் நம்மைச்சீரழிக்கும் ஆற்றல்கள்
அங்கே உண்மை நிறைந்து, மகிழ்ச்சியை இறைத்தன.
இங்கு செயல்படும் சிற்பிகள் தவறே செய்வதில்லை.
தம்மில் தாமே முழுமை பெற்றவர்கள்.....
நினைத்ததை தீர்மானித்து, தீர்மானத்தை செய்துகாட்டி,
ஆன்மாக்கள் ஒருங்கிணைந்து இயங்கின...
இது தெய்வீக ஆனந்தத்தின் அற்புத நாடகம்,
உலகத்தின் மகிழ்ச்சியினை காட்டும் ஆர்ப்பரிப்பு...."

அசுவபதி நமது மனம் வேண்டுவதையெல்லாம் இவ்வுலகில் கண்டான். இது போன்ற கள்ளமற்ற உலகம் நம் வசப்படுமோ? புறமும் அகமும் ஒன்று சேருமோ? உடலும் ஆன்மாவும் ஒருங்கிணைந்து செயற்படுமோ?

இந்த ஒருங்கிணைப்பை நடத்தமுடியாதபடி இரு தடங்கல்கள் உள்ளன. ஸ்ரீ அரவிந்தர் இவற்றை "புறவாழ்வின் திரஸ்காரம்" (the Materialist Denial) மற்றும் "சன்னியாசியின் வைராக்கியம்" (the Refusal of the Ascetic) என்று தமது திவ்விய ஜீவனம் (The Life Divine) நூலில் கூறியுள்ளார். இவையே நமது அகவாழ்வினையும் புறவாழ்வினையும் ஒருங்கிணைய முடியாதபடி தடுக்கின்றன என்கிறார். அதனால்தான் புது சிருஷ்டியும் தடைப்பட்டு நிற்கிறது. சரி, அந்த திரஸ்காரத்தையும் வைராக்கியத்தையும் தகர்க்கமுடியுமா? முடியும் என்ற உறுதி அசுவபதிக்கு ஏற்படுகிறது.

"நாம் காணும் சிருஷ்டியிலிருந்து புதியது தோன்றும்.
பேரறிவுக்கு ஏற்றதொரு மொழியும் மலரும்.
அடக்கிவைத்த அழகு தெய்வீகமாக விரியும்.
இன்பமும் துன்பமும் தூய ஆனந்தத்தில் முழுகிவிடும்."

தான் காணும் புறமும் அகமும் இணைந்த, அற்புத வகையிலான புதிய சிருஷ்டியை உலகிற்கு கொண்டுவரவேண்டும் என்பது அவனது ஆசை. நடக்குமா, நடக்காதா என்ற கேள்விகள், நடக்கவே நடக்காது, மனிதன் மீண்டும் பிறவி, மீண்டும் இறப்பு எனும் சக்கரத்தில் சுழன்றுகொண்டே இருப்பான், அவன் துயரத்திற்காகவே இவ்வுலகில் பிறந்தவன் என்னும் போக்கற்ற பேச்சுக்களை மீறி, அசுவபதியின் ஆர்வமிகு பிரார்த்தனை எழும்புகிறது. தன்னுள்ளே ஆசை எள்ளளவும் இல்லாதபடி, அகந்தை என்பது இல்லாதபடி, தன் இதயத்தையே தன்னிடமிருந்து பிய்த்து எறிவது போன்ற பிரார்த்தனை. தனக்காக எதையும் கேட்காமல் உலகம் உய்யவேண்டுமென ஒருமுகமாக அசுவபதி அன்பும் ஒளியுமான பராசக்தியை நோக்கிப் பிரார்த்திக்கிறான். அவன் வேறு, பிரார்த்தனை வேறு என்று இல்லாமல் அவனது இதயமே ஆன்மாவின் குரலைக்கேட்கும் அரங்கமாக மாறிவிட்டது. அதோ, யாரோ வருவது போன்ற சின்னஞ்சிறு சலசலப்பு. தீக்கொழுந்தின் தூய்மையுடன், தெய்வீக மென்மை காட்டும் குழற்கற்றைகள் சூழ ஓர் அற்புதமான முகம் தெரிகிறது. அத்திருமுகத்தின் உதடுகள் மெல்ல சொற்களை உச்சரிக்கின்றன. அசுவபதி உயர்நிலையைப் பெற்றுவிட்டான் என்று கூறி, அண்டத்திற்கு அப்பாற்பட்ட பரவெளியை அவன் தேடிச்செல்லவேண்டாம் என்று அறிவுரை செப்புகிறது.

"மாந்தரின் ஊமை உள்ளங்களுக்காக நீ ஏன் பேசுகிறாய்?
மூட உலகினை ரிஷிகளின் காட்சிக்கு இல்லமாக செய்வாயோ?
இந்த மந்தபுத்தி உலகின் சுமையைக் குறைக்கவோ?
நான் மனத்திற்கெட்டாத மறைபொருள்.
சூரியர்களது உழைப்பின் லட்சியம்.
என் நெருப்பும் இனிமையும் உயிரைத் தோற்றுவிக்கும்.
என்னுடைய பயங்கரமும் மகிழ்ச்சியும் தாங்கமுடியாதன.
அளக்கமுடியாத அருவியாம் ஆற்றலின் வேகத்தைத் தூண்டாதே.
பகை காக்கும் காலத்திடம் என் நாமத்தைச்சொல்லாதே.
வலுவற்ற மனிதன் அதிமானஸ சக்தியினை தாங்குவதற்கில்லை."

மரணத்தை மனிதன் வெல்ல வேண்டும். ஆனால் அதற்கு இன்னும் வெகுகாலம் இருக்கிறது. தற்சமயம் மனிதன் மரணத்துடனும் எதிர்பாராத விபத்துடனும் வாழவேண்டியதே. தெய்வநிலை எய்தும் நேரம் இன்னும் வரவில்லை. இப்போதைக்கு அவன் இருளுக்கும் ஒளிக்கும் நடுவே ஊசலாடவேண்டியதே. இன்னும் பல நாட்கள் அவன் வாழ்க்கை தொடர்கதையாகவே இருந்து வரவேண்டியிருக்கிறது. பொறுமை காக்கவேண்டியது இத்தருணம். பரிணாம நிலையிலே கட்டாயம் மனிதன் மேல் நோக்கிச்செல்வான். மனிதனை மூலமாக வைத்து அல்லவா பராசக்தி வருங்காலத்தில் கோடி அற்புதங்கள் காட்டப்போகிறாள்? அசுவபதியை பொறுத்தமட்டில் அவன் நிறைந்த மனதுடன் இருக்கட்டும். ஒரே ஒரு வரம் அவனுக்காக கேட்கட்டும். அவனது சந்ததி மாண்புற ஒரு வரம் கேட்கட்டும். மற்றபடி பராசக்தி விதித்த முகூர்த்தத்தில் மண் விண்ணாகும் என்று அசுவபதிக்கு தெய்வத்தின் குரல் கேட்கிறது.

ஆனால், இனி அசுவபதியால் சும்மா இருக்கமுடியுமா? அவன் கண்ட அற்புதக்காட்சிகள் ஒன்றா இரண்டா? அப்பொன்னான உலகத்தை மனிதன் அடைய இன்னும் எத்தனை யுகங்கள் காத்திருப்பான்? ஆர்த்தியுடன் அசுவபதியின் குரல் தெய்வத்திடம் கெஞ்சுகிறது. பிரகிருதி எனும் திரைக்குப்பின்னால் உள்ள திருமுகத்தைக்கண்டபின், அவனால் மௌனம் காக்க முடியுமா? பராசக்தியால் ஒரு கணத்தில் மனிதனை தெய்வமாக மாற்றமுடியாதா? இக்கொடுமையான உலகில், அகமும் புறமும் இருள் கப்பிட, மனிதன் உழன்று கொண்டே இருக்கவேண்டுமா? அவன் கண்ட காட்சியில் தோன்றிய அதிமானஸ இளைஞர்கள் கற்பனை வடிவங்கள் அல்ல!

"பரமசிவனின் ஊழிக்கூத்து கடந்தகாலத்தை அழித்தது.
உலகங்கள் வீழும்போது கேட்கும் இடிச்சத்தம் கேட்டேன்.
பூமியெங்கும் நெருப்பும் சாவின் கூக்குரலும் அவனது
பசிக்காகத்தோன்றிய சிருஷ்டியை அழிக்க வந்தது.
அழிவின் சிறகுகள் எங்கும் படபடத்தன.
என் காதிலே ராக்ஷஸனின் போர் முரசம் கேட்டது.
பயமும் ஆதாரமற்ற செய்திகளும் இரவினை குலுக்கின.
பராசக்தியின் தீக்கொழுந்து போன்ற முன்னோடிகள்
வாழ்க்கையை நோக்கியுள்ள சொர்க்கத்தின் விளிம்பிலிருந்து
மணியான பிறவிப்படிகளில் இறங்கிவருவது கண்டேன்.
தெய்வீகக்கூட்டத்தின் முன்பு வரும் வீரர்கள்,
அதிகாலை தாரகையின் வழி வந்திடும் செல்வர்கள்
மானிட வாழ்க்கையாம் சிறு அறைக்குள் வந்தனரே!
ஒரு யுகத்தினைத் தாண்டி அவர் வருவதைப் பார்த்தேன்.
அற்புதமான இளங்காலையின் ஒளிபடைத்த குழந்தைகள்,
அமைதியான, பரந்த புருவங்கள் காட்டும் படைப்பாளிகள்
பயங்கரத் தடங்கல்களை எற்றிடும் பெருமக்கள்
விதியுடனே மற்போரிடும் தீரமிகு மறவர்கள்,
தெய்வத்தின் சுரங்கத்தில் உழைத்திடும் வீரர்கள்,
நினைக்கவொண்ணாததை எடுத்துக்கூறிடுவோர்,
நித்தியத்தின் சிற்பிகள்....."

இப்படிப்பட்ட புதிய உலகினைச் செதுக்கும் சிற்பிகள் இருக்கும்போது, இன்னும் உலகம் இருட்டிலே உழல்வதோ? அசுவபதியின் பிரார்த்தனை அவனுக்காகவா? அல்ல, அல்ல! நமக்காக! நாம் அனுதினமும் அன்னையை வேண்டுவதற்காக, அசுவபதி மூலம் ஸ்ரீ அரவிந்தர் இந்த இணையற்ற பிரார்த்தனையை அருளிச்செய்திருக்கிறார்.

"ஞானத்தின் பேரொளியே! அகிலாண்டேசுவரி தாயே!
படைப்பவளே! அழிவற்ற பரமனின் மணமகளே!
காலமானது கடவுளைத்தோற்றுவிக்க தயங்குவதுபோல
மாற்றியமைக்கும் ஆற்றல்மிகு உன் கரமும் தாமதிக்கலாகாது......
உனது அனந்த சக்தி ஓர் உடலில் அவதரித்திடுக.
ஒரு மனதில் உன் ஞானஒளி நிரம்பிப் பொலிந்திடுக.

ஓர் இதயத்தில் உன் அன்பெல்லாம் வளர்ந்திடுக.
அழிவற்ற உன் பேரழகு மானுட உடலில்
தெய்வீக வீச்சுடன் இவ்வுலகில் உலாவிடுக.

மானுடத்தாயால்கூடஇப்படியொருபிரார்த்தனையைஒதுக்கமுடியாது. இவளோ ஜகன்மாதா! யோகப்பிழம்பாக அவளது தலைமகன், மானுடம் உய்வதற்காக அவளிடம் அடைக்கலம் புகுந்திருக்கிறான். தாயும் தன் பிள்ளையைத் தள்ளிடப்போமோ! பராசக்தி இரங்காவிடில் மனிதனுக்குத் துணை ஏது? வாழ்வு எங்கே? வருங்காலம் ஏது? அசுவபதியின் பிரார்த்தனையைத் தடுக்க தீய சக்திகள் முயல்கின்றன. இதெல்லாம் வெறும் மாயம், மனிதன் தெய்வமாக ஆவது நடக்காத காரியம், மண் விண்ணாகாது, இறப்பு, பிறப்பு, இன்பம், துன்பம் என்று சலித்துக்கொண்டே இருக்கவேண்டியது இந்த சிருஷ்டியின் நியமம் என்றெல்லாம் தீயசக்திகள் முனகுகின்றன. நாம் நல்லது நினைக்கும்போது நம் மனத்தில் அதைரியம், லோபம், மோகம் போன்ற தீய எண்ணங்களை இச்சக்திகள் தருவன. ஆனால் தனிப்பெரும் யோகம் மூலம் அசுவபதி அவற்றையெல்லாம் கடந்துவிட்டான். அதனால் அவனது வேண்டுதல் தேவியைச்சென்று அடைகிறது. பராசக்தியின் அற்புதமான திருமுகத்தில் புருவங்களைச்சுற்றி பேரொளி பாய்கிறது. அழிவற்ற ஆனந்தம் அவளது சொற்களாக உருப்பெறுகிறது:

"ஓ பலசாலியான முன்னோடியே! நான் உன் குரலைக் கேட்டேன்.
இந்த இரும்புச்சட்டத்தை மாற்ற ஓர் அவதாரம் இறங்கி வரும்.
தனியொரு சக்தி இயற்கையின் அழிவை மாற்றிவிடும்....
மௌனம் நிலவுகின்ற அவளது நெஞ்சில் அறிவைத்தாங்கிடுவாள்.
வெற்றிவீரனது கத்திபோல் அவள் சக்தி ஒளிரும்.
அவளது கண்களில் நித்தியத்தின் பேரானந்தம் மின்னும்.
மரணத்தின் ஒரையில் ஒரு விதையினை அது தூவும்.
சொர்க்கத்தின் கொம்பொன்று மானுடத்தில் நடப்படும்.
இயற்கை தன் சாதாரண லயத்தைத்தாண்டிவிடும்.
மாறுதலற்ற ஒரு சக்தி விதியையே மாற்றிவிடும்."

இப்படியொரு அனுக்கிரகத்துடன் சக்தி மௌனமாகிவிட, அசுவபதி கண்ட அந்த அற்புதம் மறைகிறது. அவனது இதயத்துள்ளே அக்குரலின்

எதிரொலி கேட்டவாறு இருக்க, அவனுள்ளே ஏதேதோ மாற்றங்கள், அனுபவங்கள், இவற்றை சொல்லில் வடிக்கமுடியாதே. கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர் என்பதே உண்மை. இந்த அளவிலே அசுவபதி ஏற்ற தவத்தின் மூன்றாம் பாகம் நிறைவுறுகிறது.

அனந்தத்தின் சூழல் பின் வாங்கவும், புற வாழ்வினை அசுவபதி மெல்ல உணர ஆரம்பிக்கிறான். பராசக்தியை வணங்கி, துதித்து, மனிதகுலம் மாண்புற ஒரு சக்தி அவதரிக்கும் என்ற வரத்தினைப் பெற்றதுடன் அசுவபதியின் தவம் முற்றுப்பெறுகிறது. தனது தவம் பலித்தது எனும் மகிழ்ச்சியுடன் அரசு கடமைகளில் கவலையின்றி ஈடுபடுகிறான். ஆயினும் இவன் முன்பு நாம் கண்ட அரசனல்ல. இவன் ராஜரிஷி. அவன் கண்முன் தவத்தில் கண்ட சொர்க்க வாழ்க்கை அரசின் செயற்பாடுகளில் நம்பிக்கையைப் பாய்ச்சிக் கொண்டே இருக்கிறது. புதிய உலகம் மலரும், அதிமானஸ உலகம் தோன்றும் என்று நாமும் அவன்போல் அமைதி கொள்கிறோம். அப்படிப்பட்ட நம்பிக்கையுடன் நாம் அன்றாட வாழ்க்கையினை ஏற்க வேண்டுமென்பதே ஸ்ரீ அரவிந்தரின் செய்தி.

## 6. சாவித்ரி தோற்றம் வளர்ச்சி

அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்த இறைத் தத்துவத்தை, மனவாசகம் கடந்த பேரொளியை முதன் முதலில் குழந்தையாகக்கண்டு போற்றியது பெரியாழ்வாரே. எம்பெருமானை ஆயர்குலத்தில் நந்தகோபன் மகனாகக் கண்டவர். அவரது யசோதை கண்ணனைத் தொட்டிலில் இட்டுப்பாடுவாள், அலங்கரிப்பாள், பாலூட்டுவாள். அவன் செய்யும் சாகசங்களில் ஒன்று அப்பூச்சி காட்டுவது:

"பதக முதலைவாய்ப் பட்டகளிறு
கதறிக்கை கூப்பிஎன் கண்ணா! கண்ணா! என்ன
உதவப்புள் ஊர்ந்து அங்கு உறுதுயர் தீர்த்த
அதகன் வந் தப்பூச்சி காட்டுகின்றான்
அம்மனே! அப்பூச்சி காட்டுகின்றான்."

(பெரியாழ்வார் திருமொழி, 2-2-9)

பெரியாழ்வாரின் பாசுரங்களே பிள்ளைத்தமிழுக்கு வித்து. உலக இலக்கியம் எதிலும் இல்லாத கவிதைச் சித்து. குமரகுருபரர் இறைவிக்குப் பிள்ளைத்தமிழ் பாடி இவ்வகைப் பிரபந்தத்திற்கு தெய்வீக ஏற்றம் கொடுத்தது நாமறிவோம். 'மீனாட்சி அம்மை பிள்ளைத்தமிழ்' நூலில் ஒவ்வொரு செய்யுளும் மானுடத்தில் தெய்வீகம் கண்டு, தெய்வத்தை மனிதர் நடுவே நடமாட வைக்கும்.

"தொடுக்கும் கடவுள் பழம்பாடல்
        தொடையின் பயனே நறைபழுத்த
துறைத்தீந் தமிழி நொழுகுநறுஞ்
        சுவையே யகந்தைக் கிழங்கையகழ்ந்து
எடுக்கும் தொழும்ப ருளக்கோயிற்கு
        ஏற்றும் விளக்கே வளர்சிமய
இமையப்பொருப்பில் விளையாடும்
        இளமென்பிடியே எறிதரங்கம்

உடுக்கும் புவனம் கடந்து நின்ற
ஒருவன் றிருவுள் ளத்தில் அழ
கொழுக வெழுதிப் பார்த்திருக்கும்
உயிரோவியமே மதுகரம்வாய்
மடுக்கும் குழற்கா டேந்துமிள
வஞ்சிக்கொடியே வருகவே
மலயத்துவசன் பெற்றபெரு
வாழ்வே வருக வருகவே."

இப்பொழுதுதானே "அகந்தைக் கிழங்கையகழ்ந்து எடுக்கும் தொழும்பன்" மகாயோகி அசுவபதியைப் பார்த்தோம்! அப்படிப்பட்டோர் உள்ளத்தில் இருப்பவள் மீனாட்சி, பராசக்தி.

ஆங்கிலத்தில் பிள்ளைத்தமிழ் இலக்கியம் கிடையாது. அக்குறையைப்போக்க வந்தவர் ஸ்ரீஅரவிந்தர். சாவித்ரி எனும் அவதாரம் நம் வீட்டுக்குழந்தை!

காளிதாஸனின் கவிதையில் தோய்ந்தவர் என்பதால் சாவித்ரியின் பிறப்பைத் தெரிவிக்குமுன் ஸ்ரீஅரவிந்தர் ஒரு ரிது சம்ஹாரத்தைக் (பருவங்கள் மாறுவதை) காட்டுகிறார் தோற்றுவிக்கிறார். இயற்கை அன்னை எப்படிப்பட்ட அற்புதங்களை அலுக்காமல் நிகழ்த்துகிறாள்! கோடையில் ஆகாயம் வெளிர் நீலமாக இருந்து பின் கறுத்து, சூல் கொண்ட மேகங்களால் நிறைந்து விட மழைக்காலம் வருகிறது. மழை இறைவனின் சார்ங்கத்திலிருந்து புறப்படும் சரமழையாகக்கொட்டுகிறது.

புழுதிபடிந்த நிலமகள் முகத்தை கார்மேகமாம் சீலை மூடியது.
மேகங்களின் அணிவகுப்பு உலகின்மேல் நீண்ட படை எடுத்தது.
வானமெங்கும் புயற்காற்றின் பேரிரைச்சல். போரிடும் வானவர்களை
இடியென்னும் முரசுகள் அறிமுகம் செய்தன. மாரிக்காலம்
அருகே இருந்த அமைதியற்ற கடலிலிருந்து புறப்பட்டது.
காலத்தினூடே உலகெங்கும் தாவியோடியது.
அதன் கையில் வேல்கள் போல் கீழ்நோக்கிவீழும் தாரைகள்.
ஜோதிப்பிழம்பான ஆழிபோல் மின்னி வன விளிம்பினைக் கிழித்தது."

இனி அழகும் அமைதியும் நிறைந்த கூதிர் காலம், பனியின் தண்மை. அட, இதோ வசந்தம் கூட வந்து விட்டது! வஸந்தன் பூமிப்பெண்ணை

அன்புடன் அணைத்துக்கொள்கிறான். அழகிற்கோர் திருவிழாவாகத் துலங்கும் இக்காலத்தில் சாவித்ரி அவதரிக்கிறாள்.

"தேவர்கள் சைகை செய்யும் இந்த உயர்வான தருணத்தில்
மண்ணுலகின் ஆர்வத்திற்கும் ஆனந்தக்கூவுதலுக்கும் பதில் போன்று
நமது ஏனைய உலகங்களிலிருந்து ஒரு மேன்மை வந்தது.
உலகின் பேரிரைச்சல்கள் நடுவே ஒரு மௌனம்
நிலையான மறைவாசகத்தினை அலுங்காது விளக்கியது.
மஹாசக்தி யொன்று உணர்வில்லா ஜடப்பொருளை நிறைத்தது.
விளக்கொன்று ஏற்றப்பட்டது, புனிதமான சிலை வடிக்கப்பட்டது.
இணைக்கும் கதிர் ஒன்று மண்ணினைத் தீண்டியது.
மனிதனது மனத்திற்கும் இறைவனுக்கும் பாலமானது.
நிலையற்ற நம் வாழ்வினை அறியவொண்ணாததுடன் இணைத்தது.

வாழ்வின் அனைத்துப்படிகளுக்கும் ஸ்ரீஅரவிந்தரின் யோகத்தில் இடம் உண்டு. அதனால் ஒரு குழந்தையின் வளர்ச்சியைக்கூட யோகமாகக்காணலாம் என்று இக்காண்டம் (The Birth and Childhood of the Flame) தெரிவிக்கிறது. ஒளிமிகு குழந்தை முதலில் தூங்கியவாறு இருக்கிறது. நமது ஆரம்பமும் அப்படித்தான். ஜடப்பொருளில் நாம் தூங்கிய நூற்றாண்டுகள் எத்தனை எத்தனையோ! சாவித்ரி தெய்வீகமான சலனமின்மை எனும் தொட்டிலில் தூங்குகிறாள். இவளைப் பலகோடி சூரியர்களின் ஆர்வம் துயிலுணர்த்துகிறது. குழந்தையிடம் அறிவு விழித்துக்கொள்கிறது. இத்தெய்வீக விதை அற்புதமான, அழகிய, மென்மையான மொட்டாக ஆனது. இம்மொட்டு தெய்வத்தாமரையாக மலரும் என்று அப்பொழுதே தெரிந்துவிட்டது. இணையற்ற அதிமானஸ குலத்திற்கு தாய் ஆகப்போகிறாள் அல்லவா? குழந்தையாக இருப்பினும் அவளது செயலும் அவளது தெய்வீக மேன்மையைத் தெரிவித்தவாறு இருந்தது. மண்ணிலே விண்ணின் முத்திரை பதிக்க வந்தவள். அதனால் அவளது நாட்கள் இனிய கீதம் போன்று நிறைவாக இருந்தன. அவளது ஒளிமிகு மனத்தில், இனி வரப்போகும் தெய்வ மக்களை காணமுடிந்தது. அவள் கண்களில் பேரின்ப நோக்கு. அந்நோக்கிலே சாவித்ரியின் திட சித்தத்தை உணரமுடிந்தது. அவளது நெற்றியிலோ அறிவின் வீச்சு.

விதை உயர்ந்ததாக இருப்பதற்குத் தகுந்த மண், உரம், சீதோஷ்ணம், வளர்ப்போர் என அனைத்துமே அசுவபதியின் நாட்டில் உயர்ந்தவையாக

இருக்கின்றன. தீக்கொழுந்தின் வளர்ச்சி (The Growth of the Flame) காண்டத்தில் சாவித்ரி பண்பாட்டின் பொன்கலனாக வளர்ந்து ஆன்மிகப்பாடங்களை நன்கு பயில்கிறாள். அவளது வாழ்க்கை, தெய்வீக உலகின் ஜதிகளுக்கேற்ப அறியப்படுகிறது. உயிர்கள் அனைத்திலும் பரமாத்மாவை தரிசிக்கும் மேன்மை பெற்ற சாவித்ரி, அனைத்து உயிர்களிடமும் அன்பு கொண்டாள். அதே சமயம், மற்றவர்களால் அவளை முழுமையாகப் புரிந்து கொள்ளமுடியவில்லை. அப்படியொரு தேஜசுடன் விளங்குகிறாள். அதற்குக் காரணம் அவர்கள் இன்னும் மானுடத்தின் பிடியில் சிக்கியிருந்தனர். ஆன்ம விடுதலை பெறவில்லை. அவளுக்கு நெருங்கியவர்கள்கூட அவளைப்புரிந்து கொள்ளமுடியவில்லை. அதே சமயம் அவளைப்போற்றி வழிபட்டனர். அவளது அஞ்சா நெறியினை, பண்பினை, உயர்ந்த எண்ணங்களை வாழ்த்தினர். அவளைத் தங்களது தலைவியாகக் கொண்டாடினர். அவ்வளவே!

"மலர்கள் சூரிய ஒளிக்கு விடை தருவதுபோல
தங்களை தாங்களே அவளிடம் ஒப்படைத்தனர்.
தங்களைக்காட்டிலும் உயர்ந்ததாய், தங்களது அறிவினும்
பரந்ததாய் உணர்ந்தும், அவர்களது மனம் முழுமையாக அவளை
தெரிந்துகொள்ளவில்லை. தம் வாழ்வே அவளுக்கு விடையாக,
அவளது சொற்படி நடந்தனர். தெய்வமாக அவளை உணர்ந்து
அவள் ஆணைக்குக் கீழ்படிந்தனர். அவள் தலைமையை ஏற்று
மண்ணில் அவளது தொழிலை நன்று நடத்தினர்.
அவர்களது ஆன்மாவின் பெருவாழ்வு தெய்வீகம் பெற்றதுபோல்,
அவர்களை உலகியலிலிருந்து ஆன்மிகதளங்களுக்கு செலுத்திட,
அவர்களது வாழ்வு, இயற்கை இரண்டுமே அவளால் இயக்கப்பட்டன.
உயர்ந்த எதிர்காலம் வருவதை அவர்கள் உணர்ந்தனர்.
அவர்களது கையைப்பிடித்து, அவர்களது பாதையைத் தேர்ந்தாள்.
மகத்தான, இதுவரை அறிந்திராத அனுபவங்களுக்கு
அவர்களை இட்டுச்சென்றாள்; நம்பிக்கையில் தோய்ந்து,
அவளைச்சேர்ந்தவர்கள் என்பதே அவர்களுக்கு ஆனந்தமானது."

இக்காண்டத்தில் நாம் முக்கியமாக கவனிக்கவேண்டியது, சாவித்ரி ஒரு விதத்தில் தனிமைப்படுத்தப்படுகிறாள் என்பதே. அவளது ஒத்த வயது ஆண்களாலும் பெண்களாலும் அவளுக்கு சரியாக உயரமுடியவில்லை.

அவர்களுக்கு ஏதுவாக அவள் வளைந்து கொடுத்தாலும், அவர்களால் அவளது தூய்மையைத் தாங்கமுடியவில்லை. இதுதான் மனிதனின் பிரச்சினை. பறவையினமும், மலரும், மரங்களும் கூட தங்களது களங்கமற்ற இதயங்கள் மூலம் சாவித்ரியுடன் இணைகின்றனவாம். ஆனால் மனிதனோ?

மிகவும் உயர்ந்த மனிதர்கள் தனிமையில் வாழவேண்டிவருகிறது என்பது அனைவருக்கும் தெரிந்த உண்மை. இப்படிப்பட்டவர்களுக்கு துணைவன், அவர்களது ஆன்ம வீரமே என்கிறார் ஸ்ரீஅரவிந்தர்.

ஒரு நாள் அசுவபதி பொழுது புலரும் வேளையில் தியானத்தில் அமர்ந்தார். அந்த தேடலுக்கான அழைப்பு (The Call to the Quest) பற்றிய காண்டம் துவங்குகிறது. அன்றாட வாழ்க்கையைப்பற்றிய சிந்தனைக்கதிர்கள் பரவுகின்றன. இயற்கை அன்னை பொலிவுடன் தோன்றுகிறாள். அச்சமயம் அவரது ஆழ்மனத்திலிருந்து ஒரு குரல் எழும்புகிறது. இவ்வழகிய உலகில் ஏனோ இவ்வேதனைகள், சாவு, நிறைவேறாத ஆசைகள், நிச்சயமற்ற எதிர்காலம்! இக்குரல் மனித குலத்திற்கு மாசுமறுவற்ற, முழுமையான ஆனந்த நிலை வாழ்வினைத் தேடுகிறது. அசுவபதியினுள் எழுந்த குரல் அவனது ஒவ்வொரு அணுவிலும் எதிரொலிக்கிறது:

"ஐயகோ கட்டாயப்படுத்தப்பட்ட விதியால் பிணைந்த மனித இனமே!
எல்லையற்ற உலகில் சிறிய சாதனைகளில் மூழ்கியுள்ள,
வாமன மானுடத்தின் கைதிகளே! இன்னும் எத்தனை காலம்
உங்களது குறுகிய மனத்தையும் சின்ன சின்ன ஆசைகளையும்
சுற்றி, நடந்த பாதையில் நடந்து கொண்டிருப்பீர்கள்?
ஆனால் மாறாத சிறுமைக்காக நீங்கள் தோன்றவில்லை.
செய்ததையே செய்வதற்காக நீங்கள் பிறக்கவில்லை.
அமுதநிலைப் பொருளால் நீங்கள் சிருஷ்டிக்கப்பட்டீர்கள்.
உங்கள் செய்கைகள் தெய்வீக விளக்கம் தந்திடும்.
தேவர்கள் உருப்பெற உங்கள் வாழ்க்கை மாற்றம் காட்டும்.
உங்களுளே இருப்பது ஒரு ரிஷி, வலிமையான சிருஷ்டிகர்த்தா."

அடடா! சின்னஞ்சிறு செய்கைகளில், வெற்றிகளில் நாம் திருப்தி அடைந்து விடுகிறோமே! பென்னம் பெரிய சாதனைகளை ஏற்க நாம் தயங்குவதேனோ? காரணம் மனம்தான். அதுவே பயப்படுகிறது,

நம்மைத்தடுக்கிறது. நம்முள்ளே மறைந்துள்ள தெய்வீகத்தை வெளிவரவிடுவதில்லை. எத்தனையோ அவதாரங்கள், ரிஷிகள், கவிஞர்கள் கூறியும் நாம் கேட்கவில்லை. அப்படியொரு மாயையில் நாம் கட்டுண்டிருக்கிறோம். உயர்ந்த சாதனைகளில் பொருந்திட ஏன் பயப்படுகிறோம்? மனம் தான். இதை சுப்பிரமணிய பாரதியார் நறுக்கென்று ஜகத் சித்திரம் எனும் குறு நாடகத்தில் விளக்கியிருக்கிறார். பறவைகள் கூட கத்துகின்றனவாம்:

"மனந்தான் சத்துரு. வேறு நமக்கு பகையே கிடையாது. மனந்தான் நமக்குள்ளேயே உட்பகையாக இருந்துகொண்டு, நம்மை வேரறுக்கிறது. அடுத்துக்கெடுக்கிறது. மனந்தான் பகை. அதைக்கொளுத்துவோம் வாருங்கள். அதைக் கிழிப்போம் வாருங்கள். அதை வேட்டையாடுவோம் வாருங்கள்." அந்நாடகத்தில் இந்திரன் சொல்வான்:

"மண்ணுல கத்து மக்களே, நீவிர்
இன்பங் கேட்பீர், எண்ணிய மறப்பீர்.
செயல்பல செய்வீர், செய்கையில் இளைப்பீர்
எண்ணள வதனால் ஏழுல கினையும்
விழுங்குதல் வேண்டுவீர், மீளவு மறப்பீர்...."

வாய்ச்சொல்லில் வீரம் இருந்து என்ன பயன்? நினைத்த காரியம் யாவினும் வெற்றி என்னும் சாதனையாளர்கள் எங்கே என்று அசுவபதி யோசிக்கும்போது, அவனுள்ளே கிளர்ந்த கேள்விக்கு தேவர்கள் அனுப்பிய விடை போன்று அருமை மகள் சாவித்ரி வருகிறாள். சொர்க்கம் வரை உயர்ந்த மரங்கள் நடுவே, அவளது ஒளிமிகு வண்ண ஆடை அசைந்தாட, பக்தன் இறைவனை நோக்கி தொழுவதற்காகக் கையில் ஏந்திய விளக்கு போல அவள் வருகிறாள். அசுவபதிக்கு ஒரு தெய்வீகக்காட்சி புலனாயிற்று. அவனுள்ளே எத்துணை அனுபவங்கள் அலைவீசுகின்றன! உலகெங்கும் பொங்கும் ஆனந்தத்தின் காட்சியாக சாவித்ரி இருக்கிறாள். தேவர்களின் தாகம் தீர்ப்பதற்காக அமுதம் பெய்யும் கோப்பையும் இதுவோ? இறைவனின் இன்பம் பகரும் உயிர் பெற்ற வேதமோ? ஒளிவட்டத்தீப்பிழம்பினால் பின்னப்பட்ட இனிமையென்னும் வலையோ? ஆற்றல்கள் அனைத்தும் அவதரணம் செய்த மானுடமோ? இதுவரை அவன் கண்ட குழந்தையிடம் அவன் அறிந்திராத ஒரு மாபெரும், சக்தியை அசுவபதி கண்டான். தன் சிறு பெண், குழந்தை சாவித்ரி

இப்பொழுது மணவயதினை அடைந்திருக்கிறாள். அவனுக்கு ஒரு மாபெரும் பொறுப்பு உள்ளது. மன்னன் சாவித்ரியிடம் கூறலானான்:

"ஓஆன்மாவே! சாச்வதத்திற்கு யாத்திரை செய்பவளே!
உனது உயர்வான குறிக்கோளைப்பற்றிக்கொண்டு
எதிர்பாராததிலும் காலத்திலும் உன் அடிகளைப்பதித்திட
அமுதப்பெருவெளியிலிருந்து இங்கு வந்திருக்கிறாய்...
இம்மாபெரும் உலகில் உனது வாழ்க்கைத் துணையைக்காண
உனது காதலும் விதியும் அழைக்கும் இடத்திற்குச் செல்வாய்.
ஆர்வம் நிறைந்த மண்மேல் எங்கோ ஓரிடத்தில்
நீ அறியாத அன்பன் உனை அறியாமல் காத்திருக்கிறான்.
உனது ஆன்மபலமே உனக்கு வழிகாட்டி.
பேருண்மை எனும் சக்தி உன்னுள்ளே ஒளிர்கிறது.
நெருங்கி வரும் உன் அடிகளின் ஓசை கேட்டு
உனது மற்றைய உயிர் உனைத்தேடி வரும்.
உன் உடல் இருக்கும் வரை உந்தனே அவர் வருவார்,
உனக்கு சமமாக நடக்கும் துணை யாத்திரீகர் அவரே."

அசுவபதியின் சொற்கள் மந்திரத்தின் ஓசைபோல் சாவித்ரியின் நெஞ்சில் புகுந்தன. இந்த இடத்தில் ஸ்ரீஅரவிந்தர் யோகத்தில் அமர்ந்திருப்போனின் மனத்தில் மந்திரோபதேசம் படியும் வகையை மிகச்சிறப்பாக வர்ணிக்கிறார். மந்திரச்சொல் யோகியின் மனத்தில் ஆழ்ந்துபோகிறது. குருட்டு மூளையினுள் சென்று அதை மெள்ள அலைக்கிறது. யோகியின் ஒவ்வொரு அணுவிலும் அதன் ஒலி ரீங்காரமிடுகிறது. கேட்பவனுக்கு முதலில் தெரிவது சொற்கோவையே. அதன் பொருளைப்பற்றிச் சிந்திக்கிறான். முடிந்தால் அதை ஆய்வு செய்கிறான். ஒரு சில ஒளிமயமான குறிப்புகளே அன்றி, அதனுள் பொதிந்து கிடந்த உண்மை முழுமையாகப் புரிவதில்லை. அந்த உண்மையை அறிந்திட, மீண்டும் மௌனத்தில் ஆழ்ந்து போகிறான். இப்பொழுது ஆன்மாவின் ஆழத்தில் கேட்பதை உணர்கிறான். மந்திரச்சொல் அவனுள்ளே ஒலிவடிவில் ரீங்காரமிடுதிறது. யோகியின் எண்ணங்கள், காட்சி, பெருவியப்பு, பெருமிதம், பேரானந்தம்! முழுமையாக மாறிப்போகிறான். தன்னுள் குடிபுகுந்துள்ள மாபெரும் ஆற்றல்களை உணர்ந்துகொள்கிறான். கடலலைகள் போல் அறிவு

அவனைச்சூழ்கிறது. அமைதியும் இன்பமும் நிறைந்த நிலையில் அவன் வாழ ஆரம்பிக்கிறான். இறைவனை நேருக்குநேர் கண்டு, ஆன்மிக செய்திகளைக்கேட்கிறான். இப்படியொரு மாற்றம் சாவித்ரியிடம் நிகழ்ந்ததாக ஸ்ரீஅரவிந்தர் குறிப்பிடுகிறார்.

வாழ்க்கைத்துணைவனைத் தேடிச்சென்ற சாவித்ரியை "தேடல்" (The Quest) காண்டத்தில் காண்கிறோம். மாத்ர தேசத்தின் அரண்மனையிலிருந்துபுறப்பட்ட சாவித்ரிபலதேசங்களுக்குச்செல்கிறாள். இயற்கையின் சிருஷ்டி மகத்துவம் என்னே! மண்ணின் வளத்திலே எத்தனை விதங்கள்! மக்களிலே எத்தனை எத்தனை வகை! எங்குமே அவளுக்கு கனிவான சகோதரத்துவம் முகமன் கூறுகிறது. இவை எல்லாம் முன்பு தான் சஞ்சரித்த இடங்களோ என்னும்படி இருக்கிறதாம். சாவித்ரியின் ரதம் செல்லுமிடமெல்லாம் முகிழ்த்த இயற்கையின் இன்பக்காட்சிகளை ஸ்ரீஅரவிந்தர் அற்புதமாக வர்ணிக்கிறார்! இது பூமி தேவிக்கு எடுக்கும் ஆலத்தி என்று கூடக் கூறலாம்.

"சாவித்ரியின் முன்பாக உலகின் பாதைகள் திறந்தன.
முதலில் வியக்கவைக்கும் புதுச்சுடரொளிக்காட்சிகள்
மனத்தை நிறைத்து, உடலுக்கு இதமாக இருந்தன.
ஆனால் மாறிமாறிக்காட்சியளிக்கும் பூதலத்தில் முன்னேற
மனம் மிக ஆழ்ந்தநிலைகளில் விழிப்புற்றது....
கனவுகளூடே நம்பிக்கை விரைவது போன்று
இப்பொன்னான மணமகளின் ரதமும் விரைந்தது."

மலைகளிலும் பள்ளத்தாக்குகளிலும் காணும் மௌனத்தில் இயற்கை அன்னை புதுவாழ்வினை சமைக்கிறாளாம். மலைகள் செறிந்த காடுகள். நடுநடுவே ஆசிரமங்கள். சாவித்ரி இந்த ஆசிரமங்களுக்குச்சென்று அங்கு ராஜரிஷிகளையும் அறிவைத்தேடும் சீடர்களையும் காண்கிறாள்.

வீரம் நிறைந்த ராஜரிஷிகள் தங்கள் கடமை முடித்து
போர் காட்டும் கவலைகளிலிருந்து விடுதலை பெற்று
இயற்கையின் அமைதியினை நாடி இக்காட்டிற்கு வந்தவர்கள்.
யுத்தம் முடிந்துவிட்டது. இனி அமைதியை அனுபவித்தனர்.
புறவைகள், பசு, பட்சிகளுடன் மகிழ்ச்சியாக இருந்தனர்.
சூரியனது ஒளி, இலைகளின் சலசலப்பு ஊடே,

இரவில் வேகமாக வீசும் காற்றின் சூழலைக்கேட்டனர்.
மௌனமான சாராகணங்களுடன் தியானித்தனர்.
பகல்வேளைகளில் நீலவானமே கூரையாக
உச்சிப்பொழுதின் மேன்மையுடன் ஒன்றிப்போயினர்."

அனைவருமே ஆன்ம அமைதியில் இருக்கிறார்கள். நான் வேறு நீ வேறு என்ற பேதங்கள் இல்லாமல் வாழ்கிறார்கள். அவர்களிடையே யோகத்தின் பல்வேறு நிலைகளையும் காணலாம். மறைச்சொல் எவ்வாறு தோன்றுகிறது? ரிஷிகள் எப்படி வேதங்களை அறிந்தனர்? எனபதற்கெல்லாம் விளக்கம் இங்குள்ள தவயோகிகள் நிலையில் காணலாம் என்பதை ஸ்ரீஅரவிந்தர் குறிப்பிடுகிறார்:

"ஒரு சிலர் எண்ணங்களின் பிடியிலிருந்து விடுபட்டு
ஒளியை நோக்கி உறங்கும் மௌன மனத்தை அடைந்தனர்.
அங்கிருந்து பேரேதுமில்லா ஆற்றலுடன் திரும்பினர்.
அவர்களது உயிரணுக்கள் மின்னலாம் மதுவினை குடித்தன.
உள்ளுணர்வின் அறிவு பேச்சாக மலர்ந்தது.
உத்சாகமுடன், மந்திரச்சொல் சுவாலையாக வீச,
சொர்க்கத்திற்கு திரையிடும் நுண்ணிய குரல் கேட்டது.
சூரியனுக்கு ஒளியேற்றும் பேரொளியை கைக்கொண்டு,
சாச்வதம் மற்றும் மரணமிலா ஆற்றல்களைப் பாடியது.
சுழலும் உலகினைக்கட்டும் செய்யுள் சந்தங்கள்:
இவை ஆன்மாவின் அகழியிலே கண் கண்ட ஒலி-அலைகள்."

பேசினாலும், மௌனமாக இருந்தாலும், அடவிகளில் தவம் செய்யும் இந்த யோகிகள், ஆரணியங்களில் ஆசிரமம் வைத்து அறிவினை சீடர்களுக்குப் பெய்யும் இந்த ரிஷிகள் ஒரு புது உலகத்தையே சிருஷ்டித்துக்கொண்டிருக்கிறார்கள். யதார்த்த வாழ்வில் ஈடுபட்டிருக்கும் மனிதகுலத்திற்கு வேண்டிய ஆறுதல் தந்து, நல்வழிகாட்டி, ஆன்மீகத்தை வளர்க்கிறார்கள். இவர்களுடன் கலந்துரையாடல் செய்து, அவர்களது வாழ்க்கை முறையில் சற்று ஒன்றியிருந்து சாவித்ரி "சாசுவதமான அமைதியுடன் உறவு" (the kinship of eternal calm) எனும் நிலையை அடைகிறாள். ஆனால் இது அவளது இலக்கு அல்ல. தனக்குத்தக்க வாழ்க்கைத்துணையை அடைந்து, அவ்வாழ்நாள் துணையுடன் புதியதோர் உலகம் செய்யவேண்டும் என்பதே அவளது இலட்சியம். ஆயினும் இந்த

அடவிகளில் காணப்படும் சாந்தம் அவளை விடுவதாயில்லை. மனம் நிறைவு பெறும்வரை இயற்கைச்சூழலில் வலம் வருகிறாள்.

நிழல் உள்ள இடத்தில் சூரியனின் கிரணம் மிதப்பது போல், தியானத்தில் ஆழ்ந்துள்ள யோகியர் வாழும் இந்த ஆசிரமங்களை சாவித்ரி தனது பொன்மய ரதத்தில் வலம் வருகிறாள். அவள் மகிழ்ச்சியுடன் அனுபவிக்கும் காட்சிகளை ஸ்ரீஅரவிந்தர் மிக அழகாக காட்டுகிறார். மாபெரும் ராஜ்யாதிபதியின் ஒரே மகள், ராஜகுமாரி இப்பொழுது காணும் காட்சியெல்லாம் எளிமையானவை, ஆயினும் இதயத்தைத்தாக்குபவை. மாலை வேளைகளில் பசுமந்தைகள் ஆசிரமங்களை நோக்கி வருகின்றன. அவற்றின் குளம்புகள் எழுப்பும் புழுதி வானைத்தொடுகிறது. அமைதியான ஆசிரம விடுதிகளில் மற்றவர்கள் போல் தியானத்திலும் பிரார்த்தனையிலும் ஈடுபடுகிறாள். சிவந்த வண்ணத்தில் வெள்ளமிட்டோடும் நதிகளின் கரைகளில் உள்ள மரங்கள் அருகே அமர்ந்து இயற்கைச்செல்வத்தை அணைக்கிறாள். இரவுகளைக்கழித்தபின் தோன்றும் அதிகாலை வேளைகளில் தனது தேடல் நினைவுக்கு வரவும், எளிமையான பாயிலிருந்து எழுந்து தன் வழி செல்கிறாள். அவள் கடந்த மலைகள் எத்தனை எத்தனையோ! சில இடங்களில் மனித நடமாட்டமே இல்லை. மலைச்சிகரங்கள் சந்திரனொளியில் மௌனமாக காவல்காரர்கள் போல் தோன்றுகின்றனவாம். காண்டத்தின் நிறைவுப் பாகத்தில் அவள் பாலைவனம்போன்ற இடங்களிலும் சஞ்சரிப்பதைக் காண்கிறோம். இவ்விடங்களில் ஏர்பூட்டி எவரும் உழுததே இல்லையென்றும், இங்கு பசுக்களேதும் மேய்ந்ததே இல்லை என்றும் தெரிகிறது. கொதிக்கும் மணல் பிராந்தியத்தில், கொடுமையான மிருகங்கள் நடமாடும் இரவு நேரங்களில் சாவித்ரி தங்கநேரிடுகிறது. ஆயினும் அவள் தனது லட்சியத்தைக் கைவிடவில்லை.

முக்கியமான அத்தேடல் இன்னும் முடிவுறவில்லை.
ஜனங்களிடையே அவள் தேடித்திரிந்த அந்த ஒரு முகம்,
அவளுக்கென தோன்றிய தோற்றத்தைக்கண்டாளில்லை.
அரசன் போன்று பகல்நேரம் கம்பீரமான மௌனம் காத்தது.
சூரியனின் ஆர்வங்களுக்கு இம்மாதங்கள் தீனி போட்டன.
இப்பொழுது அவனது உஷ்ணமான மூச்சு மண்ணைத்தாக்கியது.
மயங்கும் மண்ணின் மேல் புலிப்பாய்ச்சலாக சூடு பறந்தது.
ஒரு தொங்கும் நாக்குபோல் அனைத்தும் நக்கப்பட்டன.
இளவேனில் காற்று நிற்கவும் ஆகாயம் வெண்கலமாக ஆனது.

# 7. சாவித்ரி. சத்தியவான்

அரண்மனையில் வளர்ந்தபோது, சாவித்ரி வெளியுலகம் கண்டதில்லை. ஆயினும் அங்கு அவள் சோம்பருடன் அமர்ந்து வெட்டிப்பொழுது போக்கியதில்லை. தன் அறிவை வளர்த்துக் கொண்டாள். பாரதப்பண்பாட்டின் அருமைக்குழந்தையாக இறைவனிடம் பக்தி செலுத்தினாள். உடன் இருப்போருடன் அன்புடனும் பொறுப்புடனும் பழகினாள். அந்த தைரியத்தில்தானே அரசன் அசுவபதி தன் கணவனை வரித்துக்கொள்ளுமாறு அவளிடம் அன்புக் கட்டளையிட்டான்? தந்தை சொல் மிக்கதோர் மந்திரமில்லை என்றபடி அரசனின் கட்டளையை ஏற்று நகரங்கள், வனங்கள், கிராமங்கள் என்று தனது வாழ்க்கைத் துணையைத்தேடிய சாவித்ரிக்கு நல்ல அனுபவங்களும் ஏற்பட்டிருக்கவேண்டும். யாவும் சுபசூசகங்களாக இருந்திருக்கவேண்டும். இதோ, அவளது யாத்திரை இனிது நிறைவேறும் தருணம் வந்துவிட்டது. "தானறியாமலே தன் இலக்கின் அருகே வந்துசேர்ந்தாள்."

"தானறியாமலே" என்ற போதும், இங்கே ஸ்ரீஅரவிந்தர் ஒரு சிந்தனையை நம்முன் வைக்கிறார். இவ்வுலகில் எதுவும் திடீரென, ஒரு விபத்து போல நடப்பதில்லை. அனைத்திற்கும் ஒரு வரைபடம் இறைவன் வரைந்து வைத்திருக்கிறான் என்றே தோன்றுகிறது. பேரண்டங்களை வைத்து நடத்தும் இந்த லீலையில், சரியான தருணம் வந்ததும், முன்னேற்பாடு செய்து வைத்த இடத்தில்தான் அந்த சம்பவம் நடக்கிறது. அனைத்துமறிந்த சக்தி ஒன்று இந்நாடகத்தினை நடத்துகிறது போலும்! இளமையும், இன்பமும் விளையாடும் ஓர் இனிய இடத்திற்கு, விதி கூட்டி வைத்த இடத்திற்கு, சாவித்ரி வந்து சேர்ந்தாள்.

இங்கே கேட்பதெல்லாம் பறவை ஒலிகளே. புதுமலர்கள் நறுமணத்தை எங்கும் வீசின. வெண்மைநிறக்கொக்குகள் அசையாமல் நின்றன. தரையிலும், மரக்கிளைகளிலும் மயில்கள், கிளிகள். புறாக்கள், நீரிடை மிளிரும் மீன்கள்! காதலும் அழகும் கைகோர்த்து களிநடம் புரியும் இடம். இங்கே அன்பு ஓர் இளைஞன் உருவம் ஏற்று சாவித்ரியைச் சந்தித்ததாக ஸ்ரீ அரவிந்தர் காட்சி அமைக்கிறார்:

காலம் எனும் பாதையில் பயணிக்க வந்த புதியவன்,
விதி, மரணம் எனும் நுகத்தடியை ஏற்ற சிரஞ்சீவி,
ஆனந்தம், துயரம் என்பவற்றைத் துறந்தவனாம்,
அன்பு என்போன் அடவியிலே சாவித்ரியைச் சந்தித்தான்.

சத்தியவானைப் பற்றி வியாசர் மகாபாரதத்தில் சிறப்பாக வர்ணித்திருக்கிறார்:

"சத்தியவான் சூரியனைப்போன்ற தேஜஸுள்ளவன். புத்தியில் பிருஹஸ்பதிக்கு ஒப்பானவன்; வீரத்தில் இந்திரனுக்குச் சமானம்; பொறுமைக்குப் பூமிபோன்றவன், ..... கொடையில் ரந்திதேவன்; பிராமணர்கள் நலம் காப்பதிலும், உண்மை சொல்வதிலும் சிபிச்சக்கரவர்த்தியை அவனுக்கு ஒப்புமை கூறவேண்டும்; பெருந்தன்மையில் யயாதி; சந்திரனைப்போன்று இனிமையானவன், அசுவினீ தேவர்களைப்போன்ற அழகன். நல்ல பேச்சாளி. ஒளி மிகுந்தவன், புத்திசாலி, மனத்தைக்கட்டுப்படுத்தியவன், மென்மையான சுபாவம்உள்ளவன்.முக்கியமாகபொறாமைக்குணம்சிறிதுமில்லாதவன்". இப்படியெல்லாம் கூறும் நாரதர், "சத்தியவானிடம் அகமும் புறமும் ஒத்து இருக்கிறது, நல்ல தைரியசாலி" என்று முடிக்கிறார்.

இந்த வர்ணனையை உள்வாங்கிக்கொண்டு ஸ்ரீஅரவிந்தர் சத்தியவானை "தெய்வீக உண்மையை ஏந்தியுள்ள ஆன்மா" என்று காட்டுகிறார். அதே சமயம் இந்த உயர்ந்த ஆன்மா அறியாமையும், மரணமும் நடமாடும் உலகில் அவதரித்துள்ளதையும் சொல்கிறார். ஒரு விதத்தில்சத்தியவான்நம்மைப்போலஎன்றும்கொள்ளலாம்.மனிதப்பிறவி எடுத்துள்ளவர்களை வேதம் "அம்ருதஸ்ய புத்ரா:" என்று அழைக்கிறது. நாம் அமுதத்தின் குழந்தைகள். நம்முள்ளே விஞ்ஞானமயமான உண்மைநிலைசேர்ந்த சைதன்னியம் இருக்கிறது. ஆனால் நாம் மரணமும் அறியாமையும் நிறைந்த இந்த உலகமெனும் பொறியில் அகப்பட்டுக்கொண்டுவிட்டோம். சாவித்ரியைப் பொறுத்தவரை, முதல் சந்திப்பிலேயே "இவன் அமரன்" என்று தெரிகிறது:

சுடர்மிகு ஒளியால் செய்த ஆயுதமேபோன்று,
நெடிதுயர்ந்து, இறைவனின் ஈட்டியேபோல்,
காலை நேரத்தை முன்மொழிந்தது அவன் உருவம்.
பரந்த, அமைதியான ஆகாயம்போல், தெளிவான

பெருந்தன்மையான அவன் நெற்றியோ அறிவுப்பலகை.
அவனது அவயவங்கள் சுதந்திரத்தின் சொரூபம்.
களங்கமற்ற அவன் முகத்தில் வாழ்வின் ஆனந்தம்.

எத்துணை அழகிய வர்ணனை! வியாசர் பண்டைய தொன்மங்களிலிருந்து பிரசித்தமான கதாநாயகர்களை உவமை காட்டினால், ஸ்ரீ அரவிந்தர் இயற்கையின் தோற்றங்களிலிருந்து சத்தியவானைத் தோற்றுவித்துவிடுகிறார். சாவித்ரிக்கு முதல் பார்வையிலேயே அனைத்தும் தெரிந்துவிடுகிறது. அவள் பல நாட்களாகத் தன் ரதத்தில் பயணித்து வந்திருக்கிறாள். இன்று, இங்கே, ஓர் ஒற்றையடிப்பாதையைக் காண்கிறாள். அங்கே ரதத்தைச் செலுத்திக்கொண்டு சென்றால், அதோ! சத்தியவான் புலப்படுகிறான். அவனுக்குப்பின்புறம் பச்சைப்பசேலென்று செடி கொடிகள், மரங்கள். ஆகாயத்திலிருந்து வீசும் சூரியனின் கதிர்கள் அவன் மேல் படுவதால், அவன் பொன்னொளியுடன் திகழ்கிறான். சால்வ தேசத்து நகரத்தில் பிறந்தும், காட்டில், ரிஷிகள் நடுவே வளர்ந்திருக்கிறான். அவனுக்கு இயற்கை அன்னையே பாடம் சொல்லும் ஆசானாக இருக்கிறாள்:

எழுதாக்கிளவியாம் வேதமறிந்தவன்.
வேதத்தின் ஆழ்பொருளுக்கு விளக்கம் வேண்டி
இயற்கையின் சித்திரக்கவிதையைப் படித்தவன்.
இயற்கையின் பென்னம் பெரிய விளக்கங்கள்
தெரிந்தவன்; நதி, காடு, சூரியன், தாரகை, அக்னி,
கிளைகள் மேலுள்ள பறவையினத்தின் பாடல்,
பேசாமலேயே பாடம் கற்பிக்கும் கால்நடை
இவர்களனைவரிடமிருந்தும் கல்வி கற்றவன்.

இதனால் செடியிலும் மரத்திலும் இயற்கையாக நல்ல வளர்ச்சி ஏற்படுவதுபோல் சத்தியவான் ஓர் இலட்சியப்பெருமகனாகத் தோன்றுகிறானாம். சுதந்திர மனப்பான்மையுடன் இருக்கும் சத்தியவான் மகிழ்ச்சியுடனும், கம்பீரமான அமைதியுடனும் தென்படுகிறான். இயற்கையின் குழந்தை என்பதால் அவனுக்கு இறைவனைச்சார்ந்து வாழ்வது இயற்கையான ஒன்றாக இருக்கிறது. அனைத்துமே பராசக்தியின் செயல் என்று இருப்பவன். இன்று ஏனோ

வழக்கமில்லாதபடி இந்தப் பாதையில் வந்தான். ஒவ்வொரு கணமும் நம்மை நடத்துவது பராசக்தியின் லீலைதான். நாம் யோசித்து நடந்தாலும், யோசனையின்றிச்சென்றாலும், நாம் வைக்கும் ஒவ்வொரு அடியும் பராசக்தி செய்விப்பதே! இன்று அவளது வீச்சு அவனைக் காட்டின் மலர்கள் அடர்ந்த விளிம்பிற்கு இழுத்திருக்கிறது.

இதே இடத்திற்கு சாவித்ரியின் ரதமும் வந்தது. முதலில் இயற்கையின் அழகை ரசிக்க அவளது கண்கள் தாவின. வண்ண வண்ண மலர்களும், நிர்மலமான ஆகாயமும், மலைகளும் கண்டன. பொன்வண்ணம் காட்டும் பசுமையான புல்வெளியில், மெல்ல வீசிய பூங்காற்றில் புல்லின் இதழ்கள் சலசலத்தன. சாவித்ரியும் இறைவனின் கைவண்ணத்தின் மிகச்சிறந்த தோற்றமான மனிதனின் உருவத்தில் வந்த தெய்வக்காட்சி கண்டாள். ஒரு கணம் தீர்க்கமாக அவளது நோக்கு பாய்ந்தது. தெய்வீகக்காதலின் ரசாயனம் நிகழ்ந்தது. "அவளது கண்கள் கண்டன, கட்டுப்பட்டன, அனைத்தும் மாறிவிட்டது." இது யார்? இந்த வனத்தின் தேவனோ? இந்த உலகத்தைச் சேர்ந்தவன் இல்லை போலும்! அப்படி நினைப்பதும் சரியல்ல என்று அவளுக்குத் தோன்றியது. அவளது நெஞ்சிலிருந்து கிளர்ந்தெழும் ஆனந்தம் சாதாரணமானதல்லவே! "இந்தப்புதிய சூரியனுக்கு அவளது ஆன்மா தன் கதவுகளைத் திறந்தது." சாவித்ரி குதிரைகளின் ஜேணங்களை இழுத்து நிறுத்தும்போதே, சத்தியவான் தனது ஆன்மாவின் கதவுகளைத்திறந்து அவளை நோக்கினான். அவனுமறியாத ஏதோ ஒரு தெய்வீக உந்துதல் காரணமாக ரதத்தை நோக்கி நடந்தான்.

கண்ணொடு கண் நோக்கி, இணைந்து, உறவாடின.
எண்ணங்களின் ஒளி வட்டம் சூழ்ந்திருப்பதுபோல,
அந்த முகத்தில் ஒரு மேன்மை, கம்பீரம், அமைதி,
ஒரு ர்கசிய தோற்றம் வெளிப்படுவதேபோல்
நெற்றியெல்லாம் தியானத்தில் தோய்ந்த ஜோதி;
அவளது கடந்தகாலத்தை ஏற்றது போன்ற நெற்றி,
அவளுக்குப்பிரியாமல் என்றென்றும் துணையிருந்த,
அவளது ஆன்மாவுக்கு உரிமையான இரு கண்கள்,
அன்புடன் அவளைப் பிறவிதோறும் உடன் கண்டவை,
யாவும் அவளது அகப்பார்வைக்கு நன்கு புலப்பட்டன.
அவளது பார்வையில் அவன் தன் வருங்காலம் கண்டான்.

ஸ்ரீ அரவிந்தர் கூறுவது போல் நம் அனைவருக்குமே ஒருவரை ஒருவர் சந்திக்கும் நிகழ்ச்சிகள் யதேச்சையாக நடப்பவையல்ல. காரணமற்ற சக்தியேதும் நம்மைக்கூட்டுவதில்லை. காலம் எவ்வளவு கடந்து போனாலும், பிறவிகள் எவ்வளவு மாறினாலும், ஆன்மா தன் துணையான ஆன்மாவை நன்கு இனம் கண்டுகொள்கிறது. மகாகாவியத்தில், சாவித்ரியும் சத்தியவானும் சந்திக்கும் இந்த சந்தர்ப்பத்தில் ஸ்ரீ அரவிந்தர் தெய்வீகக்காதலின் மேன்மையைப் பரக்கப் புகழ்கிறார். அன்பு என்பது அனந்தத்தின் எல்லையிலிருந்து வரும் சக்தி. உலகத்தில் மனிதன் அன்பினை கேவலப்படுத்துகிறான். அன்பு எனும் பெயரை உபயோகித்து, அதன் ஆற்றலைத் திருடி அரக்கர் செயலைச் செய்கிறான். ஆயினும் அன்பு என்பது ஒரு சக்தி வாய்ந்த தெய்வம். அந்த தெய்வம் மூலமாக நாம் உலகினை பிருந்தாவனமாக மாற்றியமைக்கலாம்.

குழந்தை போன்ற தெய்வம் விளையாடுகிறான்.
பல இதயங்களில், மனங்களில், உயிரினங்களில்
தன்னைத்தேடுகிறான். தன்னால் புரிந்துகொள்ளும்
ஒரு சைகைக்காக அவன் தயங்கி நிற்கிறான்.
சைகை வந்தவுடன், ஒரு குரல், ஒரு பார்வை,
ஒரு தீண்டல், ஒரு முகத்தின் பொருள் என
திடீரென்று கண்மூடியவாறு அவன் எழுகிறான்.

தெய்வீகத்திடமிருந்து இவ்வுலகம் வெகு தூரத்தில் இருப்பதால், இந்த அன்பெனும் குழந்தை-தெய்வம் உண்மையைத்தேடும் போது, மண்ணில் ஏற்பட்டுள்ள ஏமாற்றும் கருவிகளிடம் மாட்டிக்கொள்கிறது. உயர்ந்த சக்திகளை அலங்கோலமாக்கிவிடும் வல்லமை படைத்த மனித சக்திகளிடம் அகப்பட்டதால், உருமாறிப்போகிறது. ஆனால் இதுதான் உண்மையா? இந்த கேவலமாக்கும் உருமாற்றத்திலிருந்து விமோசனம் கிடையாதா என்று நாம் பதைக்கும் போது ஸ்ரீ அரவிந்தரின் அருள் வாக்கு நம்மை அணைக்கிறது. ஆயிரமாயிரம் ஆண்டுகள் காத்திருந்தால், நற்காட்சி வந்தே தீரும், நாம் ஆனந்தம் பெறுவோம். அதற்காக எவ்வளவோ பொறுமையாகப் பாடுபடவேண்டியதுதான். இடைவிடாமல் ஆர்வமுடன் இறைவன் அவதாரத்திற்கு காத்திருக்கவேண்டியதே. சரியான சமயத்தில், மனித உடலில் தெய்வீகம் அவதரிக்கும் என்பதில் சந்தேகமில்லை. இதோ சாவித்ரி, சத்தியவான்

வெவ்வேறு நெறி வந்த காதலர்கள் கூடினார்கள்.
எண்ணற்ற பிறவிகளின் வழி வந்த இவ்வுடல்கள்,
விதி அழைத்த யாத்திரையில் ஒன்றாகக்கூடினவே.
கடந்த வாழ்க்கைகளின் நினைவுகள் தாமே மூடிக்கொள்ள,
வருங்கால ஆனந்தக்கனவுகளை சுமந்தவாறு
எதிர்பாராத நிகழ்காலத்தை கண்களில் கண்டன.
ஒரே ஒரு பார்வையின் தெளிவாக்கும் மகிமையிலே
ஆன்மாவின் நினைவுகள் சரீரத்தில் மலர்ந்தன.
இருவர் நடுவே இருந்த பனித்திரை விலகியது.
அவளது மனத்திரை விலக, அவன் மனமும்
அவளை நோக்கித் திரும்பியது.
விண்மீன் ஒன்றை ஒன்று கவர்வதுபோல்
ஒருவருக்கொருவர் மகிழ்ச்சியில் இணைந்தனர்.
தங்கள் பார்வையிலேயே இணக்கம் கொண்டனர்.
அனந்தத்தின் கதிர்போல ஒரு கணம் முடிந்தது.
புது யுகத்தின் ஆரம்பம், புதிய காலத்தின் தோற்றம்.

ஒருவரை ஒருவர் நோக்கியதுமே, தமக்குள் இருவரும் அன்னியரல்லர் என்பதை அவர்கள் புரிந்துகொண்டனர். முந்தைய பிறவிகளில் அறிமுகமானவர்கள்தான். எந்தப்பிறவியில்? யாருக்குத்தான் தெரியும்? அதே நேரத்தில் இருவருள் உடனே நெருக்கம் உண்டாகிவிடவில்லை. காரணம் மனிதப்பிறவி எனும் உருவம் அவர்களது ஆன்மாக்கள் நடுவே திரைபோல் கிடக்கிறது. இருவருக்கும் நெருக்கம் உண்டாவதற்கு சற்று நேரம் ஆகலாம். சாவித்ரி இயற்கையாகவே மௌனம் காப்பவள். மேலும், அவனைப்பற்றி நன்கு தெரிந்துகொள்ளவேண்டுமே! அதனால் அவள் பேசவில்லை. சத்தியவான் பேசுகிறான். அவனுக்கு சாவித்ரி தெய்வச்சிலையாகத்தெரிகிறாள். அவள் யார்? என்று கேட்கிறான்.

காலத்தின் மௌனத்திலிருந்து என்னிடம் வந்த பெண்ணே!
அறிந்திராத இன்பத்தினை உன் குரல் என் நெஞ்சில் எழுப்பியது.
தேவதையோ? மாயும் மனித உடல் பெற்றவரோ?
மானுடம் தாண்டி உமது ஆன்மா என்னிடம் பேசுகிறது.
உமது கண்கள் வீச்சு பூமியை மட்டும் சேர்ந்ததல்ல.

மக்களிடையே உமக்கென வழங்கும் பேரெதுவோ?
எனது ஆன்மாவின் நாட்களை நிறைத்து மகிழ்விக்க,
முதுவேனிலைவிட, என் மலர்களைவிட ஒளிமிகுந்து
தனிமை தோய்ந்த என் வாழ்க்கைக்குள் வந்த நீர் யாரோ?
ஆதவனொளி சமைத்த ஆடகப்பொன்பெண்ணே!

அவளது பதிலுக்காக நில்லாமல் மேன்மேலும் பேசுகிறான். முழுக்க முழுக்க இயற்கையின் மடியில் வளர்ந்த இளைஞன். பார்க்குமிடமெல்லாம் தெய்வீகம் அமர்ந்துள்ள காட்சி கண்டவன். இளங்காலையிலே, நண்பகலிலே, மஞ்சள் வெய்யில் மாலையிலே அவன் இந்த அடர்ந்த வனமெங்கும் சஞ்சரித்திருக்கிறான். அவன் கண்ட காட்சிகள் ஒன்றல்ல, இரண்டல்ல. காட்டுத்தீ முதலிய பயங்கரங்கள், திக்குத்தெரியாத இரவினில் சந்திரன் சிந்தும் இனிமை, விளிம்பற்ற ஆகாயத்தில் தங்களது ஈட்டி முனைகள் மூலம் வழி காட்டும் தாரகைகள் என இயற்கையின் வண்ணங்களும் வடிவங்களும் எத்தனை எத்தனையோ? சுப்பிரமணிய பாரதியார் தமது பாஞ்சாலி சபதம் காவியத்தில் அர்ச்சுனன் திரௌபதிக்கு அந்திமாலையின் அழகைக்காட்டுவான்.

"பா ரடியோ! வானத்திற் புதுமை யெல்லாம்
பண்மொழி! கணந் தோறு மாறி மாறி
ஓ ரடி மற்றோ ரடி யோ டொத்த லின்றி
உவகை உற நவ நவ மாத் தோன்றுங் காட்சி
யா ரடி யிங் கிவை போலப் புவி மீதே
யெண் ணறிய பொருள் கொடுத்து மியற்ற வல்லார்?
சீ ரடியாற் பழ வேத முனிவர் போற்றுஞ்
செழுஞ் சோதி வனப்பை யெலாஞ் சேரக்காண்பாய்."

சத்தியவான் பெற்றது இயற்கையின் அற்புதக் காட்சிகள் மட்டுமல்ல. அவன் குரல்களுடனும் உறவாடினான். தெய்வீகக்காட்சிகளும் கண்டான். இலைகள் வழியே உற்றுப்பார்க்கும் வனதேவதைகள், குளங்களில் நீராடும் தேவ மகளிர், சோதிமயமாகத் தோன்றும் சூரியப்புத்திரர்கள் என்று காணும் பல காட்சிகளில் இவள் ஒன்றோ? தேவதையோ? சத்தியவானைப் பொறுத்தவரை இப்பெண்

தேவதையாக இருக்கக்கூடாது, மனிதபெண்ணாக இருக்கவேண்டும் என்று விரும்பினானாம். மனித குலத்தைச் சேர்ந்தவனுடன் உறவாடும் மனித மங்கையாகவே அவள் இருக்கவேண்டும் என்று ஆர்வமுடன் ஆசைப்படுகிறான். அவனது சொற்கள் மேன்மக்களது இயல்பான தூய்மையைக் காட்டுகின்றன. சாவித்ரியை தனது குடிலுக்கு வந்து இளைப்பாறிவிட்டுச் செல்லுமாறு கேட்டுக்கொள்கிறான்.

என் தந்தையின் கொடி சூழ்ந்த குடில்,
மரங்கள் நடுவே, அருகில் உள்ளது.
வண்ண வண்ண உடைகளுடன் பறவையினம்
கூட்டாகப் பாட்டுப் பாடுவதைக் கேட்கலாம்.
அவையாவும் பல்வேறு வேதத்தின் சாகைகளை
சுரங்கள் மூலம் இசைத்துக்கொண்டிருக்கும்.
நீ வந்தால் வண்டுகள் இசைபாடி வரவேற்கும்.
ஆரணியத்தில் உள்ள எம் ராஜ்ஜியத்திற்கு வந்து
அங்குள்ள பெருமைகளைக் காண்பாய்.
காட்டில் தாபதர் வாழ்க்கை எளிமையானது.
ஆயினும் பூமியின் நவநிதியும் அங்கே உண்டு.
மரங்களை அசைத்தவாறு பேய்க்காற்று வீச,
அமைதியான நாட்களில் அங்கு சொர்க்கத்தின்
அமைதிக்காவலர்கள், செக்கர் வானத்திலிருந்து
இதெல்லாம் நோக்கியிருப்பர் என்பதும் உண்மை.

தெளிவான, வாய்மை மிகுந்த சொற்கள். அவனது அழைப்பிற்கு தகுந்த பதில் வருகிறது. "மாத்ர தேசத்து இளவரசி சாவித்ரி நான்". தன்னைப்பற்றி அவ்வளவே சொல்கிறாள். மற்றப்படி அவன் யார், அவனது பெயர் என்ன, அவன் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் யார் என்றெல்லாம் கேட்கிறாள். தடையில்லாமல் அவன் விவரங்களைக் கூறுகிறான். சால்வ ராஜ்யாதிபதி த்யுமத்ஸேனரின் மகன். விதியின் கட்டளையை யாரால் மீற முடியும்? அரசன் இரு கண்களிலும் ஒளியை இழந்தான். சத்தியவான் அப்பொழுது சிறு பிள்ளை. இதைச் சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டு வேற்றரசர்கள் சால்வ ராஜ்ஜியத்தைக் கைப்பற்றிவிட்டனர். நாடிழந்து, மனைவியுடனும், மகனுடனும் காட்டில்

தவ வாழ்க்கையை மேற்கொண்டான். தான் அரசகுமாரனாக இருப்பினும் இங்கு மனநிறைவுடனேயே வாழ்வதாக சத்தியவான் குறிப்பிடுகிறான்.

அதே நேரத்தில் புறக்காட்சிகளுக்குப் பின்னால் ஒரு பேருண்மை இருப்பதுபோல் அவனுக்குத் தோன்றியது. அதை எப்படிக்காண்பது? மனிதர்களைப் பொறுத்தவரை அவர்கள் அவரவர் கவலையிலும் மகிழ்ச்சியிலும் ஆழ்ந்திருப்பவர்கள். தாபதர்களுடன் தியானத்தில் ஆழ்ந்தபோது சிருஷ்டி அனைத்திலும் உள்ள பரப்பிரும்மத்தை அறிந்தான். இந்த அனுபவத்தில் அவனது ஆன்மா காப்பாற்றப்பட்டது. உடலோ தன்னை இழந்து அறியாமையிலும், மரணத்திலும் பிடிபட்டு நின்றது. அசேதனமே அதன் அடித்தளமாக, சூனியமே அதன் முடிவாகத்தோன்றியது. நிறைவாக சத்தியவான் கூறுவான்:

"நீ வந்துவிட்டதனால், இனி மாற்றம் வந்துவிடும்.
உன் பொன்மேனியில் ஜகன்மாதாவைக்காண்பேன்.
அவளது அறிவுக்கூற்றை உனது குரலில் கேட்பேன்.
சூனியத்தின் புதல்வன் தெய்வமாக மாறிடுவான்.
என் உடலும் அசேதனத்தினை உதறிவிடும்.
என் உடலும், என் ஆன்மா போல் சுதந்திரமாகும்.
மரணம், அறியாமையினின்றும் விடுதலை பெறும்.

சாவித்ரிக்கு அவன் பேச்சைக்கேட்பது ஆனந்தமாக இருக்கிறது. மேலும் பேசுமாறு தூண்டுகிறாள். தனது ஆன்மிகத்தேடலை சத்தியவான் இப்பொழுது விவரிக்கிறான். சிருஷ்டியில் உயர்நிலை மாற்றம் வரவேண்டும் என்று அவனுக்குத்தோன்றியதாம். சிந்தனை எனும் கைவிளக்கு ஏந்தி அவன் தேடியபோது ஆன்மாவையும் இறைவனையும் விளக்கும் ஒரு கோட்டோவியம் தயாராயிற்று. ஆனால் அதனைப்போல் வாழ்வினை அமைத்துக்கொள்ள அவனால் முடியவில்லை. அனந்தத்தின் பரப்பினை மனிதனது மனதால் கட்ட முடியுமோ? அப்படிச்செய்தால் கிடைப்பது உண்மையை விளக்க முயலும் ஓர் இயந்திரம் தான். மூளை திட்டமிட்டுக்காட்டும் ஓர் இயந்திர சக்தி. இந்த அறிவின் மூலம் பேருண்மையைத் தேடியபோது, சத்தியவானுக்கு மேலும் தேடவேண்டிய இருள் பிரதேசங்களே தெரிந்தன. அதனால் பேருண்மையை அழகியலிலும் கலையிலும்

தேடினான். இங்கும் அவனுக்கு பேருண்மையின் முழு சொரூபம் சிக்கவில்லை. கிடைத்ததெல்லாம் ஒரு சில உருவகங்களே. ஆனால் சாவித்ரியின் வருகையுடன் யாவும் மாறிவிட்டன என்கிறான். மனிதனுக்கும் இறைவனுக்கும் உள்ள பொன்இணைப்பு கிடைத்துவிட்டது.

தெய்வீக ஒலிகள் என் செவிகளில் பாய்கின்றன.
புதியதோர் உலகம் உன் கண்களிலே தோன்றி
விண்சார் தாரகைபோல் என்னை நோக்கி வருகிறது.
தெய்வீகக் கோளங்கள் செய்திடும் சப்தமுடன்
ஒளிமிகு தேவர்தம் பாடலும் உன்னுடன் வந்துள்ளது.
என் சுவாசம் சீராக, எழுச்சியுடன் மலர்ந்தது.
என் மனமும் மாற்றம் கண்டு, ரிஷியாக ஆகிவிட்டேன்.

மகிழ்ச்சி அவனது குரலில் கொப்பளிக்க, சாவித்ரியை அன்புடன் ரதத்திலிருந்து இறங்கிவந்து இங்கே வாழுமாறு அழைப்பு விடுக்கிறான். தன்னுடையவளாக ஆகவேண்டுமென்றும் கேட்கிறான்.

மிக இயல்பாக சாவித்ரியின் பதில் வருகிறது. "சத்தியவானே! உமது பேச்சினைக்கேட்டேன். தாங்களே நான் தேடிய துணை என நான் அறிந்து கொண்டேன்." என்றவாறு ரதத்திலிருந்து இறங்கி அவனிடம் வருகிறாள். இனி பேச்சென்ன? சுற்றி எங்கும் மலர்ந்துள்ள பூக்களை கையோடு பறித்து மாலை கட்டுகிறாள். அவளே புத்தம்புது மலர்களால் கட்டிய, தேனொழுகும் இந்த மணமாலையை சத்தியவானுக்கு அணிவித்து, அவன் காலடிகளில் பணிந்து தன்னை அவனுக்கு அர்ப்பணம் செய்கிறாள். அவனும் குனிந்து அவளைத் தூக்கி மார்போடணைத்துக்கொள்கிறான். தெய்வீகத்துடன் பொலியும் இந்தத் திருமணக் காட்சியினை, ஸ்ரீஅரவிந்தரின் மந்திரக்கவிதை பதிவு செய்கிறது:

வானத்தின் நடுவே நண்பகல் சூரியனது மேற்கட்டிகீழ்
புனிதமான காலையே நூலாக, விதி முடிச்சுப்போட்டது.
சூரியனே அக்னியாக, இதயங்கள் ஒன்றுபட்டு
சுபமுகூர்த்தத்திலே அவர்களது திருமணம் நடந்தது.
இறைவனும் இறைவியும் மனிதப்பிறவி எடுத்து

மீண்டும் மண்மேலே கடிமணம் கண்டார்கள்.
உலகின் புதியதொரு நாடகத்திறகாக
இணைந்த இருவரும் புது யுகத்தை துவக்கினார்கள்.

சத்தியவான் தனது பர்ணசாலைக்கு சாவித்ரியை அழைத்துச்செல்கிறான் அந்த எளிய, இனிய சூழலைப்புரிந்துகொண்டு மகிழ்ச்சியுடன் சாவித்ரி அவனிடம் விடைபெறுகிறாள். தன் தாயகம் சென்று பெற்றோருக்குத் தெரிவித்துவிட்டு விரைவில் மீண்டும் வருவதாகவும், அதுவரை அவளது மனம் இங்கேயே இருக்கும் என்றும் கூறி மாத்ர தேசத்திற்குத் திரும்பிச்செல்கிறாள். அவள் மனக் கண்ணில் காட்டில் மலர் கூட்டத்திடையே கண்ட சத்தியவானே அமர்ந்திருக்கிறான்.

# 8. விதியின் கூற்று

சாவித்ரி காவியத்தில் விதி பர்வத்திற்கு ஒரு பிரத்தியேக முக்கியத்துவம் இருக்கிறது. இந்தப் பர்வமே ஸ்ரீ அரவிந்தர் நமக்கீந்த இறுதி வார்த்தை. அவர் தமது மகாசமாதிக்கு முன்பாகக் கூறிய பல பாகங்கள் இப்பர்வத்தில் உள்ளன. இப்பர்வத்தில் உள்ள இரு காண்டங்களிலும் மிகவும் முக்கியமான தத்துவம் மற்றும் அனுபவம் சார்ந்த செய்திகள் கூறப்பட்டுள்ளன. மனிதனை எதிர்நோக்கும் மாபெரும் கேள்விக்கு பதில் தேடும் பர்வம். முன்பே நிச்சயமாகிவிட்ட விதியெனும் விலங்கினால் மனிதன் சிறைப்படுத்தப்பட்டிருக்கிறானா? மனிதன் விதியின் விளையாட்டு ஆட்டுவிக்கும் பொம்மையா? அல்லது, அவனுக்கு சுதந்திரமாக செயற்பட வழியிருக்கிறதா? சுருக்கமாகச் சொல்வதானால் அவன் கைதியா, சுதந்திரப்பறவையா?

சாவித்ரி சத்தியவானிடம் விடைபெற்றுக்கொண்டு மாத்ர தேசத்திற்குத் திரும்பிவருகிறாள். அதே சமயம் நாரத மகரிஷி அசுவபதியை சந்திப்பதற்காக சுவர்க்கத்திலிருந்து கீழே மாத்ர தேசத்திற்கு வருகிறார். அவரது இறக்கத்திற்கு ஏற்றபடி அவரது பாட்டும் அமைகிறது.

மானிட உலகின் எல்லை மோனத்தில் இணைந்திருக்க,
சாந்திமயமான, ஒளிமிகு பரப்பினைக்கடந்தவாறு
வானுலகிலிருந்து தெய்வ முனி நாரதர், நிர்மலமாக
இதம்தரு தென்றலிலே இசைபாடி வந்தார்.
வேனிற்காலத்து பொன்வண்ண பூமி அவரை ஈர்த்தது.
தேவர்களின் மேசைமேல் சாய்க்கப்பட்ட
தங்கப்பாத்திரம்போல் அவரடியில் பூமி கிடந்தது.
கண்காணா கையொன்று அதைச் சுற்றுவதுபோல
ஆதவனின் கிரணங்களுக்காக அது மெள்ளச் சுழன்றது.

இமையவர் தம் இனிய உலகிலிருந்து, விஞ்ஞானமயமான அதிமானஸ உலகங்களைக்கடந்து, விதியுடன் போராடும் நிலவுலகுக்கு அவர் வந்தார். இங்கு எல்லாமே தேடல், துக்கம், நம்பிக்கை, வாழ்வு, மரணம். அவரது பாடல் அறியாமை மற்றும் விதி பற்றியதாக அமையலாயிற்று. விஷ்ணுவின்

தோற்றமும், எளிதில் புரிந்துகொள்ளமுடியாத அமைப்பிலுள்ள இவ்வுலகும், மனிதனுள்ளே அமைந்திருக்கும் தெய்வீக ஆன்மாவும் அவர் பாடலின் பொருளாயின. இனி வரவிருக்கும் அவதாரம் பற்றி அவர் பாடக்கேட்டு அசுரரின் கண்கள் பனித்தன. தாங்கள் சுயமாகத் தேடிக்கொண்ட இந்த நரகத்திலிருந்து விடுபடலாம் என்கிற நம்பிக்கை அவர்களுள் பாய்ந்தது. தேவர்களின் பதவி அடைந்த நாரதர், தெய்வீக மனிதனாக, ஒளியின் படலத்தில் அசுவபதியின் அரண்மனைக்கு வந்தார். அறிவாளியான அரசன் அருகே அவனது மனைவி வேள்வித்தீ போல, அழகு, உத்சாகம், அறிவு நிரம்பியவளாக, ரிஷியை வணங்கினாள். இவளே சாவித்ரியின் மண்ணுலகத் தாய். மூவரும் ஒரு மணிநேரம் உயர்ந்த விஷயங்களைப்பற்றி உரையாடுகின்றனர். அவர் மீண்டும் அவர்களுக்காக ஆயிரமிதழ்த்தாமரையாக மலரும் அன்பின் இதயத்தைப்பற்றி பாடல் இசைத்தார். இந்த அன்பு யதார்த்தத்தின் பல திரைகளால் மறைக்கப்பட்டு உறங்குகிறது. காலம் கனியும் போது இறைவி இறைவனைக்கண்டு மகிழும் தெய்வீகக் குரல் கேட்டு அது விழித்துக்கொள்ளும்.

நாரத மகரிஷி பாடிக்கொண்டிருக்கும் போது, சாவித்ரியின் தேருருளைகளின் சப்தம் கேட்டது. பிறகு அவள் அரண்மனைக்குள் நடந்து வருவது தெரிந்தது. புதுப்பொலிவுடன் விளங்கும் திருமுகத்துடன் அவள் வந்து தன் தந்தையின் சிம்மாசனத்தின் அருகே நின்றவாறு, தெய்வ ரிஷியாம் நாரதரைக்கண்டாள். அமுதமயமான தன் கண் வீச்சினால் நாரதரும் சாவித்ரியைப் பார்த்தார். வரப்போவது அனைத்தையும் அவரது வாலறிவு புரிந்து கொண்டது. ஆயினும் ஏதுமறியாதவர்போல் அவர் சாவித்ரியைப்பார்த்துக் கேட்டார்:

அவரது உள்முகப்பார்வை அவளைச் சூழ்ந்தது.
தானறிந்த உண்மையை தன் உதட்டினுள் மறைத்தபடி
பேசலானார்: "யாரிந்த மணப்பெண் இங்கே வருவது?
தீச்சுவாலையில் பிறந்தவளோ? அவளது திருமுடியோ
ஒளிக்கற்றை! மங்கலத்திருமணப் பெருமைகள்
அவளைச் சூழ்ந்துளவே! எந்தப்பசுமை வெளிகளிலிருந்து
பனித்துளியின் மோனத்தில் கிறங்கும் அற்புதமாக,
நிலா பாயும் நீர்நிலையின் தடங்கள் போல
மயங்கிடும் இவ்விரு கண்களைக் கொண்டு வருகின்றன?

அற்புதமான கவிதை இங்கு புதுப்புனலாகப்பொங்குகிறது. வெளிப்படையாகச் சொல்லாமல், அதே சமயம் சாவித்ரியும் சத்தியவானும் சந்தித்து மணந்துகொள்ள நிச்சயித்ததை நேரில் பார்த்தது போலும் அவரது பேச்சு அமைகிறது. அவளது ரோஜாவண்ணக்கைகளில் கூட அவள் பெற்ற இன்பச்சிலிர்ப்பின் அடையாளம் தெரிகிறதாம்! அவளது இதயமெனும் பொற்குடத்தில் அமுதம் பொங்கி வழிவது போலத் தோன்றுகிறதாம். உள்ளூர இன்பத்தில் திளைப்பது புரிகிறதாம். இப்படியே இருந்தால் எவ்வளவு நன்று! "விதியை காலம் முழுவதும் உறங்கப்பண்ணமுடிந்தால்" என்ற வரியுடன் தமது பேச்சை நாரத மகரிஷி முடிக்கிறார்.

சாவித்ரி பற்றி ரிஷி உயர்வாகக் கூறியதெல்லாம் அவளது பெற்றோர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி அளித்திருக்கும். ஆனால் விதியைப்பற்றிய அக்கடைசி வரியில் ஓர் அதிர்ச்சி. இது என்ன கெட்ட சகுனம்! ஏதோ தடங்கல் இருப்பது அசுவபதிக்கு ஓரளவு புரிந்துவிட்டது. ஆனால் அசுவபதி யோகி, தன் கவலையை மறைத்துக்கொண்டு விடுகிறான். தன் மகள் உள்ளும் புறமும் அழகுடையவள் என்று கூறி, ரிஷி தன் மகளை ஆசீர்வதிக்கவேண்டும் என்றும் வேண்டுகிறான். இப்பொழுதுதான் தான் காண்பது அசுவபதியின் மகள் என்று புரிந்து கொண்டது போல் ரிஷி நடிக்கிறார். அப்படியா? என்ன விஷயமாக அவள் தேரேறி வெளியூர் சென்றாள்? எங்கிருந்து தன் முகத்தில் சொர்க்கத்தையே தேக்கிக்கொண்டு வந்திருக்கிறாள்? எந்த தெய்வத்தை நேருக்கு நேர் கண்டுவிட்டாள்? அவள் தேர்ந்தெடுத்துள்ள மன்னவன் யார்? சாவித்ரி அமைதியான குரலில், பதில் உரைத்தாள்:

அரசரான தந்தையே! தங்கள் விருப்பத்தின்படி செய்திருக்கிறேன்.
நான் வரித்த அவர் தூர தேசத்தில் இருக்கிறார்.
என் இதயத்தின் குரல் கேட்டு, அதன் ஆணையை ஏற்றேன்.
கனவு போன்ற அடர்ந்த கானகத்தின் விளிம்பினிலே
சால்வ தேசத்தின் காடுகள், மலைகளிடையே,
த்யுமத்சேனர் ஓலைக்குடிலில் வசிக்கிறார். அம் மன்னன்
கண்ணிழந்து, நாடிழந்து, ஒதுக்கப்பட்டவரனார்.
காட்டின் ஒதுங்கிய எல்லைப்புறத்திலே
அவரது மகன் சத்தியவானை சந்தித்தேன்.
எந்தையே! நான் வரித்துவிட்டேன். இது நடந்தது."

உடனே அசுவபதி தன் அகக்கண்ணால் ஒரு காட்சி கண்டான். சாவித்ரி கூறிய பெயரின் மேல் ஒரு கனமான நிழல் படிந்ததாகவும், அதனை ஒரு மாபெரும் ஒளி துரத்துவதாகவும் கண்டான். தன் மகளின் கண்ணுக்குள்ளே நோக்கியவாறு அசுவபதி கூறுவான்:

நன்கு செய்தனை. நீ தேர்ந்தவரை நான் ஆமோதிக்கிறேன்.
இவ்வளவுதான் என்றால் அனைத்தும் நன்மையே.
இன்னும் உண்டென்றாலும் அது நன்மையே பயக்கும்.
மனிதனுக்கு நன்மை, தீமையெனத்தோன்றிடினும்
மறைபொருள் நன்மைக்கே செயற்படும்.
நமது விதி இரட்டைப்பொருளில் எழுதப்பட்டிருக்கிறது.
இயற்கையின் எதிர்மறைகளால் இறைவனிடம் செல்கிறோம்.
இருளிலிருந்து ஒளியின்பக்கம் எப்போதும் செல்கிறோம்.
மரணமே அமரநிலைக்கு அழைத்துச்செல்லும் பாதை.

இப்படிப்பேசும்போதே நாரதர் முகத்தில் ஒரு கலக்கம் இருப்பதை கவனித்து, அவரிடம் வருங்காலம் எதுவாயினும் அது பற்றிப்பேசாமல் இருப்பதே நலம் என்றும் மெல்லக்கூறுகிறான். ஆனால் அருகே இருந்த சாவித்ரியின் அன்னைக்கு ஏதோ மங்கலாகப்புரிகிறது. ஒருவேளை சத்தியவானின் பெற்றோர் காட்டில் வாழ்வதால், தனது மகள் துயரப்படுவாள் என்று இந்த ஆண்கள் நினைக்கிறார்களோ? பெண்கள் என்ன அவ்வளவு உதவாக்கரைகளா?

இங்கு நடுங்குவதற்கு ஏதுமில்லை. துயரம்
தன் பயங்கர முகத்தால் அன்பைப் பார்க்காது.
கூட்டத்தில் ஓர் அபூர்வ ஆன்மா, சத்தியவான்.
சாவித்ரி தன் துணைவனாக வரித்த சத்தியவான்
மனிதர்களிடையே மகிழ்வாக இருப்பான்.
அவளது அரண்மனை, அரியணையைவிட்டுச்சென்று
சாவித்ரி தான் வாழுமிடத்தை விண்ணாகமாற்றுவாள்.
அக்கானகக்குடில்கள் பெரும்பேறு பெற்றன.

அசுவபதியின் ராணி பேசுவதைக்கேட்க பெருமையாக இருக்கிறது. பேசும்போதே அரசியின் மனத்தில் ஒரு நெருடல். சாவித்ரி மணம்

புரியப்போகும் சத்தியவானின் குடும்பத்திற்கு ஏதேனும் கேடு சம்பவிக்கப்போகிறதா? அசுவபதியின் குறிப்பை அறிந்து கொண்டதால் நாரதர் ஏதும் கூறவில்லை. வருங்காலத்தைத் தெரிந்துகொண்டு துயரத்தை அதிகமாக்குவதால் என்ன நன்மை என்று சொல்லிப்பார்க்கிறார். அவள் கெஞ்சுகிறாள். முடிவில் சத்தியவான் இணையற்ற பெருமகன் என்றபின் அவனுக்கு இருப்பதெல்லாம் ஒரே ஒரு குறைதான் என்கிறார்:

வானத்தின் மேன்மை மண்ணிற்கு வந்தது. ஆனால்
அதன் ஆற்றலை மண்ணால் தாங்க முடியவில்லை.
பன்னிரண்டு மாதங்களே அவனுக்கும், அவளுக்கும்:
மீண்டும் இந்த நாளில் சத்தியவான் மரணம் உறுதி.

அரசிக்கு ஒரே அதிர்ச்சி. சாவித்ரியை வேறு துணை தேடிக்கொள்ளுமாறு கூறுகிறாள். சாவித்ரியோ மறக்கமுடியாத, அமுதமொழி செப்புகிறாள்:

என் இதயம் தேர்ந்தது; மீண்டும் தேர்வு செய்யாது.
நான் கூறிய சொல்லை அழிக்கவே முடியாது.
அது கடவுளின் பதிவேட்டில் எழுதப்பட்டது........
மரணம் எங்களது உடல்களைப்பிரிக்கலாம்;
ஆன்மாவை அல்ல. அவன் இறந்தால்,எனக்கும் சாகத்தெரியும்.
விதி தன்னால் ஆனதைச் செய்யட்டும்.
நான் சாவை விட பலசாலி, விதியை விட உயர்ந்தவள்
என் காதல் உலகம் சென்ற பின்பும் இருக்கும்.
என் மன உறுதி கண்டு விதி பின்வாங்கும்.
விதியின் சாஸனம் மாறலாம், என் ஆன்ம பலம் மாறாது.

நிலையில்லாத உலகினில் இது என்ன பேச்சு என்று அரசி கேட்கிறாள். கணம் தோறும் மாறி மாறி வரும் உலகம். இங்கு நம் சௌகரியப்படி வாழ நாம் கற்கவேண்டும். மனிதன் ஏதோ அதிமானஸ உலகைச்சேர்ந்தவன் போல் பேசுவது சரியல்ல என்றெல்லாம் கூறுகிறாள். அன்னையின் நெஞ்சம் அப்படித்தான் பேசும். சாவித்ரியோ உறுதி தளரவில்லை. ஓராண்டு என்றால் அதுவே போதும். சத்தியவான் தவிர வேறு

மானிடவர்க்கென்று நான் பிறக்கவில்லை! அதே சமயம் சத்தியவான் அமரன் என்பது அறிவேன், எங்களுக்கு இப்படி ஒரு அகால மரணம் ஏற்பட வழியில்லை என்று சாவித்ரி கூறியதும் அங்கே சற்று நேரம் ஆழ்ந்த மௌனம் நிலவுகிறது.

விதியின் பர்வத்தில் ஸ்ரீ அரவிந்தர் ஓர் அன்னையின் நெஞ்சத்தை அற்புதமாகப் படம் பிடித்திருக்கிறார். வியாசரின் மகாபாரதத்தில் அசுவபதியின் ராணி ஏதும் பேசுவதாகக் காட்டப்படவில்லை. அரசரே சாவித்ரியை வேறு மணமகனைத்தேடிக் கொள்ளுமாறு கூறுகிறார். அவள் மறுத்துவிடுகிறாள். திருமணம் நடக்கிறது. ஸ்ரீ அரவிந்தரின் காவியத்தில் அசுவபதியை ஒரு மகாயோகியாகக் காண்கிறோம். அப்படிப்பட்ட யோகி, பராசக்தியுடன் சம்பாஷித்த ஞானி என்பதால் இங்கு சாவித்ரியின் அன்னை ஒரு பாத்திரமாக வருகிறாள். நம்மைப் போன்றவர்களது மனத்தில் தோன்றும் கேள்விகளை நாரதரிடம் கேட்கிறாள்.

நாரதரும் அசுவபதியும் ஆன்ம விடுதலை பெற்றவர்கள். அதனால் மௌனம் காக்கிறார்கள். அரசி நம்மைப் போன்றவள். அஞ்ஞானம் அகலாதவள். அவளுக்கு துக்கம் பொங்கி வருகிறது. ஒரே குழந்தை. மாத்ர தேசத்தின் அரச கட்டில் ஏறவேண்டியவள். அவளுக்கு இப்படி ஒரு நிலையா? சாவித்ரி என்ன தவறு செய்தாள்? தூய்மையே உருவானவர்களுக்குத்தான் விதி துயரங்களைப் பொழிந்தவாறு இருக்குமோ? அசுவபதியின் அரசி பேசுவதெல்லாம் நாம் அன்றாட வாழ்க்கையில் கேட்பவைதான். ஏன் எனக்கு இப்படி நடக்கவேண்டும்? ஏன் என் குழந்தைக்கு இப்படி நடக்கவேண்டும்? விதியின் விளையாட்டுக்கு என் இனிய குடும்பம்தான் அகப்பட்டதா? உலகமே கேட்பதான கேள்வியினை அரசி கேட்கலானாள். அசையாது அமர்ந்திருந்த முனீசுவரனை நோக்கினாள். இயற்கையின் அமைதியற்ற ஆழங்களால் அலைக்கப்பட்டு, துயரத்தால் செலுத்தப்படும் மனிதஜாதியின் பங்காளியாக, அந்த வேதனை, அறியாமையின் கூவல் அனைத்துடனும் சொர்க்கத்தை ஆவேசமுடன் தாக்கும் துயரத்தின் உருவாகப்பேசினாள்.

இந்த அற்புத அழகுடன் கூடிய உலகை யார் தோற்றுவித்தார்? இதை அழிப்பதற்கு ஒரு பிசாசும் இருந்ததா? தோற்றத்திலேயே ஒரு விஷவித்தினை விதைத்து, அதனால் என்றென்றும் நல்லதும் தீயதும் ஒருங்கிணைந்து வளர்ந்தனவோ? இந்தக்கொடுமையான

இணைப்பினால் எங்கெங்கும் துயரமே! விதி செய்யும் வஞ்சனை போதாது என்று மனிதனும் தன் தலையில் தானே மண்ணை வாரிப்போட்டுக்கொள்கிறான். தன்னுடைய ஆசைகள், பாசங்கள் காரணமாக தன் வீட்டிற்குத் தானே நெருப்பு வைக்கிறான். அனைத்தும் சர்வ நாசம்! மனிதனின் சிந்தனைகளுடன் பிழைகள் தோழமை பூண்டிருக்கின்றதை அறிகிறோம். மனிதனிடம் சிறந்ததொரு கருவூலகத்தைக் கொடுத்தால் அதன் அருமை தெரியாமல் விதியென்ற குருட்டு அங்காடியில் விற்றுவிடுகிறான். ஆசைகளும் ஆர்வங்களும் அழிந்து போகும் இவ்விதியின் பிடியில் ஆன்மா என்பதற்குப் பொருளுண்டோ?

தாரகைகளை வடித்ததுவும் ஒரு பெரிய மாயை தான்.
ஆன்மாவிற்குப் பாதுகாப்பு எங்கே?
பொய்ச்சூரியர்களைச் சுற்றுவதே அதன் சமநிலையோ?
தனது இல்லத்திலிருந்து வெளியேறி வழிதவறிய காலம்,
சந்தர்ப்பம் எனும் இருளில் நுழைந்தபின்னே
பொருளற்ற இவ்வுலகில் காண்பதற்கு ஏதுமில்லை.
நாம் ஆன்மா என்பதெல்லாம் ஒரு கனவுதான் போலும்.
சாச்வதம் என்பது கனவில் கண்ட கட்டுக்கதைபோலும்.”

அரசியின் மிக நீண்ட சொற்பொழிவு, காலம் காலமாக மனிதன் கேட்டு வந்துள்ள கேள்விகளை முன்னிலைப்படுத்துகிறது. வாழ்க்கை என்பது என்ன? எங்கிருந்து இப்படி வானவில்லின் வர்ணஜாலங்களாக வண்ண வண்ண அனுபவங்கள்! எதனால் அவிழ்க்கமுடியாத முடிச்சாக மரணம் ஏற்படுகிறது? இப்படி அரசி நம்மைப்போன்ற எளிய மக்களின் எண்ணங்களை பிரதிபலிக்கிறாள். அசுவபதியோ மனிதனது ஆன்மாவின் உருவாக, உயர்நிலைச் சைதன்னியங்களை நோக்கிப்பயணிப்பவன். நாரத மகரிஷி சற்று மவுனமாக இருந்தபின் பேச ஆரம்பிக்கிறார்:

இரவு இருப்பதால் சூரியனும் ஒரு கனவுதானோ?
இறைவன் மனிதனின் மனத்தில் உறைகின்றான்.
உனது ஆன்மாவுக்குள் அவன் மறைந்திருக்கிறான்.
அப்பேரொளியை நோய், கவலை ஏதும் அண்டாது.
உனக்கும் இறைவனுக்கும் நடுவே இருள் உள்ளது.

அந்த அற்புத விருந்தாளியை உன்னால் பார்க்கவோ,
அனுபவிக்கவோ முடியவில்லை. இப்பேரின்ப சூரியனை
நீ காண்கிறாயில்லை. அரசியே! உனது எண்ணங்கள்
அறியாமையின் வெளிப்பாடுகள். இறைவனின்
திருமுகத்தை உன்னிடமிருந்து மறைக்கும் திரை

அரைகுறையாகப்புரிந்து கொள்வதில் என்ன லாபம்? எந்தப்பிரச்சினையையும் முழுமையாக புரிந்துகொள்ள முயலவேண்டும். இந்தியாவில் இரவு நேரம் என்றால் உலகெங்கும் அப்படியா? எங்கும் ஒளிரும் சூரியன் போல இறைவனும் எங்கும் பிரகாசிக்கிறான். நாரதர் கூறுவது போல் தாயுமானவரும் சொல்லவில்லையோ?

அங்கிங் கெனாதபடிஎங்கும்பிர காசமாய்
ஆனந்த பூர்த்தியாகி
அருளொடு நிறைந்ததெது தன்னருள்வெளிக்குள்ளே
அகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது சமய கோடிகளெல்லாம்
தம் தெய்வம் எம் தெய்வமென்
றெங்குந் தொடர்ந்தெதிர் வழங்கிடவும் நின்றதெது
எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்ல ஒரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளதெது மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லையுள தெது அது
கருத்திற் கிசைந்த ததுவே
கண்டன எலாம் மோன உருவெளிய தாகவும்
கருதி அஞ்சலி செய்குவாம்.

அரைகுறை ஞானம் அஞ்ஞானமே; அதனால் மனச்சஞ்சலமும், தொய்வும் துயரமுமே ஏற்படும். பல பல கூறி அரசியின் இதயத்தை மென்மையாக சமாதானப்படுத்துகிறார். உலக வாழ்வில் துயரமும் மரணமும் உள்ளது கண்கூடு. அதை ரிஷி மறுக்கவில்லை. சிருஷ்டியின் ஒரு பக்கம் இவையாம். அதே சமயம் நமது இதய கமலத்தில் இறைவன்

ஒளிர்கிறான் என்பதும் உண்மை. துயரத்தால் நாம் வருந்தினால், அதற்கு காரணம் நாமே ஒழிய, துயரமன்று. மனிதன் மேம்பாடடைய இத்துயரம் வேண்டியிருக்கிறது. துயரமும் ஒரு விசைதான். மனோமய சைதன்னியம் வரை நாம் எழும்பிவிட்டது உண்மை. இப்படியே மேலும் பல அதிமானஸ சைதன்னியநிலைகளை எட்டுவதற்கு துயரமும் உதவுகிறது.

வாழ்க்கையில் மனிதனுக்கு துக்கமே குரு! துக்கத்திற்குப்பின் தான் ஆனந்தம் மலர முடியும். மேலே பல பரிமாணங்களை எட்டுவதற்காக துயரமெனும் உளியால் இறைவன் நம்மை மெள்ள மெள்ள மனோமய சைதன்னியத்தை அடைந்துவிடவேணுமென செதுக்குகிறான். பர சைதன்னிய நிலைகள் அனைத்தையும் அடைந்து அப்பாலும் செல்லும் தகுதியை மனிதன் அடையும் வரை இந்த உளி செதுக்கியவாறு இருக்கும். இந்த உளியின் செயற்பாட்டை நமக்குத்தெளிவாக்குவதற்காக இறைவன் அவதரிக்கிறான் என்கிறார் நாரதர். மகாபாரதத்தில் வரும் பதிவிரதா உபாக்கியானத்தைச் சொல்ல வந்த நாரதர் திடுமென நம்மை கிறிஸ்து சகாப்தத்திற்கு அழைத்துச் செல்கிறார். அரசிக்கு சிலுவையில் அறையப்பட்ட ஏசுவின் அவல நிலையை வர்ணிக்கிறார்:

நமக்குப்புரியாத, பயங்கரமான தியாகம் முடிந்தது.
உலகிற்கு அவனது தியாக உருவான உடலை ஈந்தாயிற்று.
கெத்தேயும் கால்வரியுமே அவனுக்கு இனி பங்கு.
மனிதனின் ஆன்மா அறையப்பட்டசிலுவையை அவன் சுமக்கிறான்.
கூட்டத்தின் சாபங்களே அவனுக்குத்துணையாயின.
அவனது நேர்மைக்கு அவமதிப்பும் இகழ்ச்சியுமே பரிசு.
அவன் தியாகத்தைக்கேலி செய்வதுபோல் இரு திருடர்களும்
சிலுவைகளில் அறையப்பட்டனர். காக்கும் கடவுளின் பாதையில்
குருதி பொழியும் நெற்றியுடன் நடக்கிறான்.
இறைவனுடன் அவன் ஒன்றிவிட்டதனால்
அவனது ஆன்மாவின் ஒளிக்கு உடலை தியாகம் செய்கிறான்.

ஆம், இறைவன் மனித உருவில் வந்து வாழ்ந்து காட்டுகிறான். அப்படி வாழும்போது கஷ்டங்களை சகித்துக்கொள்ளும் வழியையும் காட்டுகிறான். இறைவன் இராமனாக அவதரித்தபோது படாத துன்பங்களா? அவரை வாலி ஏசவில்லையா? இராவணன் பகைக்கவில்லையா? தெய்வீக பாதங்கள் நோக காட்டிலும் மேட்டிலும்

நடந்தது நமக்காக அல்லவா? இறைவி சீதையாக அவதரித்து சிறை இருந்ததும் நமக்காகத்தானே! பொறுமை காத்திட வழி காண்பித்தாள். அதனால் தான் பிள்ளை லோகாச்சாரியார் இராமாயணம் "சிறை இருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது" என்றார். இதுவே அவதார ரகசியம். உலகத்தைக் காப்பாற்ற வருபவன், உலகின் துயரங்களை அறிந்திருக்கவேண்டும். மனித குலத்தை மரணத்தின் பிடியிலிருந்து காப்பாற்ற, அவதாரமும் மரணத்தை அனுபவிக்கவேண்டும்! இப்படி செய்யும்போது பரிணாமத்தின் அடுத்த நிலையை எட்டுவதற்கு வழி பிறக்கிறது.

இது அவதாரத்திற்கு ஏதோ சுலபமான காரியம் என்று நாம் எண்ணிவிடக்கூடாது என்பதையும் நாரதர் கூறுகிறார். உலகைக் காப்பாற்ற வருபவனது வேலை மிகவும் கடுமையானது. உலகமே அவனை எதிர்க்கிறது! தன்னுடைய அறியாமையையே மோகிக்கும் மூர்க்கமான குணம் மனிதனுக்கு உண்டு. பொதுவாக தெய்வீக ஒளியைக்கண்டு கண்ணை மூடிக்கொள்ளும் சுபாவம் பெற்றவன். காப்பாற்ற வந்தவனை கழியால் அடித்துத்தள்ளிவிடும் கேடான மனப்பான்மை மனிதனைவிட்டு இன்னும் போகவில்லை. அவதாரம் வருவதால் ஒரு சிலர் காப்பாற்றப்படுகிறார்கள். அவர்கள் தெய்வீகத்தின் ஒளிமிகு வட்டத்திற்குள் வந்து சேருகிறார்கள். மீதமுள்ள அனைவரும் இன்னும் தங்களது அறியாமைச்சேற்றிலேயே அழுந்திக்கிடக்கிறார்கள். ஆயினும் இச்சிலரை வைத்துக்கொண்டு அவதாரம் தன் தொழிலை நடத்தும். அதிமானஸ ஒளி மனிதகுலத்தின் மேல் பாயும். அதுவரை காக்கும் அவதாரம் தானும் இருளில் போரிடும்.

நாரதர் நாசூக்காக சாவித்ரியும் இப்படியொரு அவதாரம், அவளும் இருளில், மரணத்தின பிடியில் கஷ்டப்படவேண்டியிருக்கும் என்பதைச் சொல்கிறார். அரசியும், மற்றோரும் பொறுமை காக்க வேண்டும்!

அசுவபதி இப்பொழுது நாரதரிடம் ஒரு வினா எழுப்புகிறார். அவர் சாவித்ரி மாபெரும் ஆற்றலுடன் தோன்றியவள் என்று நம்பியிருந்தார். அதெல்லாம் பகற்கனவுதானோ? அவளது ஆற்றலுக்கு விதியை எதிர்க்கும் சக்தி இருக்காதோ? நாரதர் இதற்கு வெளிப்படையாக ஏதும் சொல்லவில்லை. அசுவபதியின் மகளிடம் ஒரு மாபெரும் சக்தி இருக்கிறது. அதன் மூலம் அவளையும் அவளைச் சூழ்ந்திருப்பவர்களையும் மாற்ற முடியும். ஆனால், முதலில் துயரமெனும் பாதையில் அவள் நடந்து செல்லவேண்டியிருக்கிறது.

அவள் சொர்க்கத்தின் கோப்பையாகப் படைக்கப்பட்டவள். இந்த உலகிற்கு வந்திருப்பதால் இங்குள்ள சுகதுக்கங்களில் அவளும் பங்கேற்கவேண்டியதே.

எதிர்பாராதது என்று ஏதுமில்லை. யாவும் பராசக்தியால் நடத்தப்படுவதே. மனிதன் மகாசக்தியின் இதய ஒலித் துடிப்பைக் கேட்பதில்லை. அதனால் நடப்பதை விதி என்று கூறிவிடுகிறான். இதன் காரணமாக இதயமேதும் இல்லாத, இயந்திரமாக இயங்கும் சட்டம் என்றும் நினைத்துக்கொள்கிறான். ஆனால் அந்த அற்புதமான விந்தை வித்தகனான இறைவன் நினைத்துவிட்டால், மனிதனிடம் உயர்நிலை மாற்றம் ஏற்பட்டுவிடும். இன்று இயற்கையின் அரைகுறை வெளிச்சத்தில் நடக்கும் மனிதன் தெய்வத்தின் குரலை எதிரொலிக்கக் கற்றால், தெய்வத்தின் ஒளியால் மாற்றம் பெறுவான். விதி மாற்ற முடியாதது அல்ல. தோல்விகள் மூலம் மனிதனது ஆன்மா புதிய வெற்றிகளை நோக்கி பீடு நடை போடுகிறது. சத்தியவானை மரணம் தீண்டும் என்று ஞானியான அசுவபதி வருந்தலாகாது. மரணம் என்பது கூட ஆன்மாவின் மலர்ச்சிக்கு ஒரு நல்ல சந்தர்ப்பமாகும். இவ்வுலகத்தை சிருஷ்டித்தவன் ஒரு குருட்டு தெய்வமல்ல. சாவித்ரிக்கு சோதனை நேரம் வந்திருக்கிறது. அவள் தனிமையில் இருளுடன் போராட வேண்டிய தருணம் சமீபித்துவிட்டது. இறுதியாக நாரதர் அரசியை நோக்கிக் கூறுவார்:

அரசியே அக்காட்சியிலிருந்து நீ தொலைவில் இரு.
அவளுக்கும் அவளது விதிக்கும் நடுவே நீ செல்லாதே.
அவளது போர் தொடங்கும்போது பிறர் அங்கே செல்வது சரியல்ல.
அவளுடைய தெய்வீகக்கடமையிலிருந்து அவளைப் பறிக்காதே.
அவளது தன்னம்பிக்கையிலிருந்து அவளைப் பின்னே இழுக்காதே.
உனக்கு இப்போராட்டத்தில் இடமேதுமில்லை.
உன்னுடைய அன்பும் ஆதரவும் இங்கு செயற்படவில்லை.
அவளுடைய விதி, உலகின் விதியை இறைவனிடம் விட்டுவிடு.

அரச தம்பதிகளுக்கு பயத்தை நீக்க நல்லது நடக்கும் என்று ரிஷி கூறுகிறார். துயரத்தை எதிர்நோக்க பலம் அளிக்கும் செய்யுட்கள். இதுவே ஸ்ரீ அரவிந்தர் நமக்கு அளிக்கும் செய்தி. எங்கும் தீவிரவாதம், குழப்பம், மரணம் என்று குழம்பிப்போயிருக்கும் மனிதகுலத்திற்கு ஆறுதலும் தைரியமும் வழங்கும் பொன்மொழி.

# 9. ஆன்மாவைத் தேடி

சாவித்ரி, சத்தியவான் திருமணம், த்யுமத்சேனர் வசிக்கும் காட்டில் நடைபெறுகிறது. வியாச மகாபாரதத்தில் திருமணம் நடந்த பின்னர் அசுவபதியும் அவனைச் சேர்ந்தவர்களும் மாத்ர தேசம் திரும்பிவிடுவதாக இருக்கிறது. காட்டில், எளிய குடிலில், சத்தியவானுக்கும் அவனது பெற்றோருக்கும் தொண்டு புரிந்தவாறு சாவித்ரி வாழ்வதைக் காண்கிறோம். நாரதர் கூறியதை சாவித்ரி எவரிடமும் சொல்லவில்லை. துயரத்தைத் தன்னுள்ளே மறைத்து அவள் நல்லதோர் மருமகளாக இருக்கிறாள். ஸ்ரீஅரவிந்தரின் காப்பியத்திலும் சாவித்ரி அது போலவே தோன்றுகிறாள்.

சத்தியவானுடன் அவளது மணவாழ்க்கை இனியதாகவே இருக்கிறது. ஓரோர் சமயம் இந்த பயங்கரச்செய்தியை அவனிடம் கூறத்தோன்றிடினும், அவள் சொல்லவில்லை. எந்த ஒரு விதத்திலும் அவன் வருந்துவதில் அவளுக்கு இஷ்டமில்லை. ஆயினும் சத்தியவானுக்கு ஏதோ சந்தேகமாக இருக்கிறது. ஒரு வேளை பிறந்தக நினைப்போ? தனக்கு ஒழிந்த நேரங்களில் எல்லாம் அவளுடன் இருக்கிறான். இப்படி அன்பைப்பொழியும் கணவனுக்கு வருத்தம் தரலாமா?

இனி தான் செய்யவேண்டியது யாது என்று சிந்திக்கிறாள். பண்டைய நாட்களிலிருந்து உடன்கட்டை ஏறுவது சகஜமாகிவிட்டது! அப்படிச் செய்துவிட்டால் இனி தனக்குத் துயரம் ஏதுமிருக்காது. அப்பொழுதெல்லாம் சத்தியவானின் முதிய பெற்றோர் நினைவு வந்து விடுகிறது. தானும் போய்விட்டால் அவர்களுக்கு ஆதரவு இல்லையே!

பக்தியோகத்தின் இறுதிப்படியான நாயகநாயகி பாவத்தினை, அறவழி காமத்தினை ஸ்ரீஅரவிந்தர் நம்முன் வைக்கிறார். சீதை-ராமர், நளன்-தமயந்தி, சுகன்யை-சியவனர் போன்ற, மணவாழ்க்கையில் இணைந்த அன்புக்காதலர்களை சாவித்ரி-சத்தியவானிடம் காண்கிறோம். சீதை, தமயந்தி, சுகன்யை, சாவித்ரி போன்றவர்கள், காதலன் ஒருவனைக்கைப்பிடித்து அவன் காரியம் யாவினும் கைகொடுக்கும் பெண்மணிகள். சாவித்ரி சத்தியவான் மண வாழ்க்கையினை மிகச் சிறப்பாக ஸ்ரீ அரவிந்தர் வர்ணித்திருக்கிறார்.

"அவன் காட்டினில் திரியும்போது, அடிக்கடி
அறிவார்ந்த நிலையில் அவளது சைதன்னியம்
அவனுடன் நடந்து செல்லும்; அவனது செய்கை
அவளுக்குள் செயற்படுவது போன்று உணர்வாள்.
அவனுக்கு அவ்வளவாகப் புரியாவிட்டாலும்
வெகு தூரத்திலிருந்தே அவளுடன் சிலிர்ப்பான்."

வியாச மஹாபாரதம் சத்தியவானுக்கு விதி கெடு வைத்திருந்த நாட்களுக்கு முன், சாவித்ரி மூன்று நாட்கள் விரதமிருந்ததாகக்கூறும். உணவருந்தாமல், ப்ரார்த்தனை செய்தவாறு எப்பொழுதும் ஒரு மரம் போன்று ஆடாமல் அசையாமல் நின்றிருந்தாள். விரதத்தின் மூன்றாம் நாள் முடிந்ததும், அக்னிதேவனுக்கு ஆகுதி இட்டு, மற்ற சடங்குகளையும் செய்தாள். ஆசிரமத்தில் வாழ்ந்து வந்த பெரியோர்கள் அனைவரையும் வணங்கி ஆசி பெற்றாள். அவர்கள் அனைவரும் சாவித்ரியை தீர்க்க சுமங்கலியாக இருக்கவேணுமென ஆசீர்வதித்தனர். இந்த விரதம் முடித்த பின்பே சத்தியவானுடன் சாவித்ரி காட்டிற்குள் சென்றதாக மஹாபாரதத்தில் அறிகிறோம். இந்த மூன்று - இரவு விரதமே ஸ்ரீ அரவிந்தரின் மகாகாவியத்தில், ஏழு காண்டங்கள் அடங்கிய யோகம் எனும் பெரியதொரு பனுவலாக மலர்ந்திருக்கிறது.

ஓராண்டு கால மண வாழ்க்கை வேகமாக ஓடிவிட்டது. தூக்கமில்லாத இரவுகள். திடீரென்று ஓரிரவு சாவித்ரியின் புருவங்கள் நடுவே உள்ள ஆஞ்யா சக்கரமெனும் இடத்திலிருந்து ஒரு குரல் கேட்கிறது. "ஆன்மாவே! எழுவாய். காலத்தையும் காலனையும் அழிப்பாய்." அவள் அழப்பிறந்தவளல்ல. மனித குலத்தை துயரத்திலிருந்து விடுவிக்கப் பிறந்தவள். சாவித்ரியின் அகக்குரல் மறுக்கிறது. காலத்தை, காலனை எதிர்ப்பதில் பயனில்லை. அக்குரலுக்கு மறுப்பும் அவளுள்ளே எழுகிறது. அவள் பூவுலக வாழ்க்கையினை மாற்றியமைக்க அவதரித்திருக்கிறாள். "உன்னுள்ளே மறைந்திருக்கும் ஆன்மாவைத்தேடி, அகப்படுத்திக்கொள்!" சாவித்ரி இந்த ஆன்மிகத்தேடலை, தன் ஆன்மாவைத்தேடும் பணியை ஏற்கிறாள். அப்படியே, உறங்கும் சத்தியவான் அருகில் அமர்ந்தவாறு யோக நிலையின் ஆழ்ந்த, பொன்னான மௌனத்தினுள் சென்றுவிடுகிறாள்.

மனிதப்பிறவி என்றாலும் தன்னுள்ளே இருக்கக்கூடிய ஆற்றல்கள் பென்னம் பெரியவை என்று அவளுக்குத் தோன்றுகிறது. அவற்றைத்

தன்னால் பெற்று உபயோகித்துக்கொள்ளமுடியுமா என்ற கேள்விக்கு விடை தேடுமுன், இதுவரை வளர்ச்சியடைந்துள்ள பரிணாமங்களை எண்ணிப்பார்க்கிறாள். முடிவற்ற பெரும்பாழிலிருந்து சிருஷ்டி மெல்ல தனது முதல் உருப்பெற்றது. எப்படி இம்மாறுதல் ஏற்பட்டது என்பது இன்னும் நமக்குப்புரியவில்லைதான். பருப்பொருளுக்குள்ளே ஆன்மாவை வைத்தது. இப்பொழுது சிந்தனை மலர்ந்தது. உயிர் எனும் விதைகள் உலகெங்கும் பரவிடுவதை சாவித்ரி மனக்கண்ணால் பார்க்கிறாள். ஆ! மனிதன் தோன்றிவிட்டான்! மனிதனுள் தோன்றிய மனம் அசாத்தியமான சாதனைகள் செய்யக்கூடிய வலுப்பெற்றது. என்ன ஆச்சரியம்! இறைவனின் கனவுகளை மனிதன் பூவுலகில் நனவாக்கும் சித்து நடக்கலாயிற்று.

துரதிருஷ்டவசமாக நன்மை செய்யும் மனம் தீமை செய்வதிலும் பின்வாங்கவில்லை. அது மாத்திரமல்ல, தீமை செய்வது அவனுக்கு எளிதாக இருக்கிறது. இருளின் வாரிசாகிவிட்டான் முன் காலத்தில் செங்கிஸ்கான், ஔரங்கஜீப்பு போன்றவர்கள் கொடுமை செய்தனர்; சென்ற நூற்றாண்டில் ஹிட்லர், முசோலினி போன்றவர்கள் பாதகம் பல்லாயிரம் நடத்தினர். இப்பொழுதோ பயங்கரவாதம் உலகெங்கும் தலைவிரித்தாடுகிறதே! இறைவன் தந்த இனிய உலகம் சுடுகாடாகலாமா? தியாகராஜ சுவாமிகள் கேட்டதுபோல், ஏ மனிதா, சக்கனி ராஜ மார்கமுலுண்டக ஸந்துல தூரநேல? ராஜ பாட்டையில் கம்பீரமாக நடக்கவேண்டும் என்றால் மனிதனுக்கு இறை நம்பிக்கை வேண்டும். கடந்த காலம், நிகழ் காலம், வருங்காலம் பற்றிய தெள்ளிய பார்வை வேண்டும். நம் பெரியோர் அதற்கு வேண்டிய பத்திரங்களைக் கொடுத்துச் சென்றிருக்கிறார்கள். இந்த சிருஷ்டியின் காரணம் குருட்டுப் புத்தியல்ல, தெய்வீக அருள்!

அதே சமயம் இத்தெய்வீக வாழ்க்கையை சூ மந்திரக்காளி! என்று கூவி அழைக்கமுடியாது. மனிதன் அதற்காக தவமியற்றவேண்டும். ஒரே தியானமாக செய்யும் தவத்திற்கு இறைவனின் அருள் உண்டு. நம் உள்மனத்திற்குள் சென்று நம்மை நாம் புரிந்துகொண்டால், இனி நாம் செய்ய வேண்டியதற்கான ஒளி பெறலாம்.

"நமது உள்மனம் பெரியதொரு ஒளியில் உள்ளது.
மறைவான கதவுகள் வழியே அதன் ஒளி நோக்குகிறது.
நமது உறுப்புகள் தேசு பெறுகின்றன. மெய்யறிவு
நம் அகத்திலே விரிந்திட, நமது வெளிப்புலன்கள் வழியே

அவள் நம் அகத்தினுள் வரும்போது, நாம் நிமிர்ந்து
அவளுடைய ஆற்றல்மிகு ஆதவனைக்காண்போம்."

இவ்வாறு ஸ்ரீஅரவிந்தர் மனித குலத்திற்கு ஒளிமயமான வருங்காலம் இருப்பதைச் சுட்டிக்காட்டுகிறார். சாவித்ரிக்கும் மரணத்தைப் பற்றிய பயம் பின் வாங்குகிறது. மனமெனும் திரையால் மூடப்பட்டுள்ள தனது ஆன்மாவை அவள் முதலில் சந்திக்கவேண்டும். இனி ஆழ்மன தியானத்திற்குள் சாவித்ரி செல்வதையும் அவளுக்கு ஏற்படும் அனுபவங்களையும் காண்போம்.

"நான் யார்?" என்ற கேள்வியை நாம் நம்மிடமே கேட்டு, பதில் தெரிந்துகொள்வதே யோகத்தின் முதல் நிலை என்று ரமண மஹரிஷி கூறுவார். இக்கேள்விக்கு விடை வேதம், சாஸ்திரம் முதலியன படித்தால் தெரியாது. "நான்" எனும் எண்ணம் ஏற்படும் மையத்தை தியானத்தின் மூலம் கண்டுபிடித்தால்தான் விடை பெற முடியும். இவ்வுலகம் ஒரு வண்ணத்திரையாக மனத்தைச்சூழ்ந்து உள்ளே கனலும் தெய்வ ஒளியை மறைக்கிறது. அதனால் இவ்வுலகை நமது காட்சியிலிருந்து முழுமையாக நீக்கிவிடவேண்டும். வாஸிஷ்ட கணபதி முனி எழுதிய ஸ்ரீரமண கீதையில் இந்தத் திரைநீக்கும் செயற்பாட்டினைப் படிப்படியாக விளக்குவார். முயற்சி செய்தால் மனத்தை அலைபாய்வதிலிருந்து தடுத்து, அசையாது தியானயோகத்தில் அமரலாம்.

வியாசரின் சாவித்ரி விரதம் செய்யும் போது மரம் போல் (காஷ்டபூதேவ) அசையாமல் நின்றாள் என்பது கண்டோம். இதுவே யோகியின் தியான நிலை. வெளியுலகத்திலிருந்து மனத்தைத் திருப்புவது சுலபமல்ல. சாவித்ரியோ எளிதில் செய்துவிடுகிறாள். தியான நிலையில் நமக்கு ஏற்படும் அற்புதமான, முரணான அனுபவங்களை மறக்கமுடியாத ஒரு சில உருவகங்கள் மூலம் ஸ்ரீ அரவிந்தர் விளக்குகிறார்.

வெளியுலகத்திலிருந்து மனத்தைத் திருப்பி உள்முகப்பார்வையை ஏற்றவுடன் சாவித்ரி காண்பது ஏதுமற்ற வெளி. உள்ளம் நடுக்குறுகிறது. அப்பொழுது உள்மனத்திலிருந்து ஒரு குரல் அவளுக்கு தைரியம் கூறுகிறது. சாவித்ரி சத்தியவானை சாவிலிருந்து மீட்பதற்காக மாத்திரம் அவதரிக்கவில்லை மனிதனது வருங்காலத்தையே சீரமைப்பதற்காக அவள் தோன்றியிருக்கிறாள்.

"கடவுளின் மானுட அடிகளை மனிதன் தொடர்கிறான்.
அவனது இருளை ஏற்று, அவனை நீ ஒளிநிலத்திற்கு

அழைத்து வரவேண்டும்; அவனது துன்பத்தை ஏற்று
அவனுக்குப் பேரானந்தம் தர வேண்டும்; பருப்பொருள்
உடலிலே உனது தெய்வீக ஆன்மாவைக்காணவேண்டும்."

சாவித்ரி இச்சவாலை ஏற்கிறாள். அவளுக்கு முன்பாக ஓர் இருண்ட கதவு தெரிகிறது. காவலாளியின் குரல் "ஏ மானுடப்பூச்சி திரும்பிப்போ. இல்லையேல் கோரமாக நீ சாக நேரும்." அவள் முன்பு எண்ணற்ற பாம்புகளும் பேய்களும் சுழல்கின்றன. சாவித்ரியோ நடுக்கமின்றி மேலே நடக்கிறாள். அவளுடைய இந்த நடையைக் கண்டதும் உருவங்களெல்லாம் மறைந்துவிடுகின்றன. அவளது தந்தை அசுவபதி பயணித்ததுபோல் அக உலகில் பல இடங்களுக்குச் செல்கிறாள். இங்கு கர்மேந்திரியங்கள் கட்டுப்பாடற்று, எந்த ஒரு இலட்சியமுமின்றி கூத்தாடும் உலகம் இருக்கிறது. அமைதியற்ற இவ்வுலகினைத் தாண்டுவதற்காக நாம ஜபத்தின் துணையை சாவித்ரி நாடுகிறாள்.

காக்கும் கடவுளது நாமத்தினை நினைவில் கொண்டாள்
புற உலகம் மறைந்திடவும், அவள் விடுதலை பெற்றாள்.
காப்பாற்றப்பட்ட அந்நிலையில் பேரமைதி கண்டாள்.

புரந்தரதாசர் பாடுகிறார் அல்லவா? நின்ன நாமத பலவொன்ந்தித்தரே ஸாகோ! உன் பெயர் எனும் பலம் ஒன்றே போதும்!

அடுத்து அவள் காணுமிடம் வீரர் உலகம். கனவுப்பட்டறையில் கட்டியதுபோன்ற மாடங்கள், ஆசைகள், பாசங்கள், அன்பு, வெறுப்பு, இருள், ஒளி, மலர்ச்சி, அழுகை, பயங்கரமான ஆழ்குழிகள், மேலெழும்பும் கோபுரங்கள், ஆர்வங்கள், சொர்க்கத்தில் நம்பிக்கை, நரகச்செயல்கள் என்று இங்கு அனைத்துமே இருக்கின்றன. வீரர்கள் வாழும் இவ்வுலகம் மகாபாரத உலகத்தை ஒத்திருக்கிறது. இங்கு அறவழியினை ஏற்றவர்கள் இருக்கிறார்கள். அதர்மத்தைச் செய்வதையே வாழ்வின் இலட்சியமாகக் கொண்டவர்களும் இருக்கிறார்கள்.

பலசாலிகள் எளியோரைக்கண்டு எள்ளி நகையாடும் உலகம். தூய உண்மை எனும் விசையால் இவ்வுலகம் இயக்கப்படவில்லை என்பது நிதரிசனம். ஸ்ரீ அரவிந்தர் எழுதியிருப்பதைப் படிக்கும்போது பீஷ்மர், தருமன், அசுவத்தாமன், கீசகன் போன்றவர்கள் நம் மனத்திரையில் நிழலாடுகிறார்கள். இங்கு மனிதர் காட்டும் வீரத்தில்

ஏதோ குறையிருக்கிறது. "உண்மை தன் கண்களை மூடிக்கொண்டு செயல்படுகிறது". சாவித்ரியை இவ்வுலகத்தின் ஆடம்பரமும் பொய்களும் ஈர்க்கவில்லை. தனது ஆன்மாவைத்தேடி மேலே அவள் செல்லும்போது ஒளி வீசும் கண்களுடன் காணப்படும் சில தேவதைகளைச் சந்திக்கிறாள். "எனது ஆன்மாவின் ஆழத்தில் உள்ள தெய்வீக பவனத்தைத் தேடும் வழியை எனக்குக்காட்டுவீர்" என்று அவர்களைக் கேட்டுக் கொள்கிறாள். உன் மனத்திற்குள்ளிருந்துதான் நாங்கள் பயணிக்கிறோம் என்று ஒரு தேவதை சொல்கிறாள்.

அறியாமை, சலிப்புடன் வாழும் மனிதர்களுக்கு உதவ
மனத்திற்கப்பாலுள்ள தேவ தூதுவர்கள் வருகின்றோம்
மனிதனை அழகு, அற்புத அனுபவங்களுக்கு அழைத்து
தெய்வீகத்தினைத் தீண்ட வைக்கும் தேவர்கள்.
தீமையிலும் அழிவற்ற நன்மையின் ஒளி ஏற்றுவோம்.
அறியாமைப்பாதைகளில் ஞானதீபம் காட்டுவோம்.
நாங்களே உன்னுடைய தன்னம்பிக்கை.
மக்கள் மனதில் உள்ள தன்னம்பிக்கை நாங்களே!

மனிதனின் தன்னம்பிக்கையே அவனுக்கு வழிகாட்டி! அதன்படி சாவித்ரி தியானத்தில் பயணிக்கும்போது இதுவரை அவள் அறிந்திராத அவளது மனத்தினுள் அவளை அமைதியாக நோக்கும் பிரகாசமான உருவங்கள் இருப்பதைக்காண்கிறாள்.

சாவித்ரி தனது ஆன்மாவின் நுழைவாயிலை அடைந்துவிட்டாள். நமது ஆன்மாவில் பொதிந்து கிடக்கும் ஆற்றல்கள் ஒன்றிரண்டல்ல. அவை கணக்கற்றவை. ஸ்ரீ அரவிந்தர் மூன்று முக்கியமான சக்திகளை நமக்குத்தெளிவாக, மறக்கமுடியாத உருவகங்கள் மூலம் காட்டுகிறார். முதலில் சாவித்ரி வெளிரிய ஆடை உடுத்துள்ள ஒரு பெண்மணியைக்காண்கிறாள்.

"கடுமையான மண்திட்டே அவளுக்கு ஆசனம்.
அவள் காலடியில் கூர்மையானதொரு கல்.
உலகின் கொடுமுடியில் கருணை உருவெடுத்ததுபோல்,
அவளது உயிரை உயிர்களின் துயரம் தீண்டியதுபோல்,
உள்மனதால் புற உலகினைப் பார்க்கின்றாள்.

உறுதியற்ற இவ்வுலகின் புறத்தே பொய்த்தோற்றம்,
அறியாமையிலே கிடந்த பொருளறியா அண்டம்,
துடிக்கும் பூமி, வேலைச்சுமை, தாரகைகளின் வேகம்,
துயரத்தில் தோன்றி முடியும் வாழ்வினைப் பார்க்கின்றாள்."

இதுவே அன்னையின் நெஞ்சம். உலகினைத் தீமை சூழும்போதெல்லாம் அதை எதிர்க்க சக்தியற்று கண்ணீர் வடிக்கும் கருணை. துயரங்களின் அன்னை (The Mother of Sorrows) தானே சாவித்ரியின் ஆன்மா என்று கூறி, உலகில் கருணையும் நம்பிக்கையும் இல்லையெனில் மனிதகுலம் அழிந்திடும் என்கிறாள். பாதாளத்திலிருந்து துயர மனிதன் (the Man of Sorrows) கேவுகிறான். மனித குலத்திற்கு வருங்காலமே கிடையாது! கடவுள் தான் ரசிப்பதற்காக இத்துயரமிகு உலகினைப்படைத்துவிட்டான் என்று அழுகிறான். சாவித்ரி துயரங்களின் அன்னையிடம் மனிதனுக்குக் கட்டாயம் சிறந்த எதிர்காலம் உண்டு, மனிதனது துயரங்களுக்கு கருணாமயி அன்னை இருப்பதால்தான் அமைதி கிடைக்கிறது, அவள் தரும் நம்பிக்கையில் கஷ்டங்களை எதிர்கொண்டு புதியதோர் உலகம் படைப்பாள் என்று கூறிவிட்டு மேலே செல்கிறாள்.

இப்பொழுது சாவித்ரி காண்பது ஆற்றல்களின் அன்னை, துர்க்கை, The Mother of Might. அரியணை போல் செதுக்கப்பட்ட கல் மேல் அமர்ந்திருக்கிறாள். அவளது திருவடிகளை ஒரு சிங்கத்தின்மேல் வைத்திருக்கிறாள். அவளிருக்குமிடத்தை பொன் வண்ணமும் சிந்தூர வண்ணமும் அலங்கரிக்கின்றன. கைகளில் மூவிலை வேலும், வஜ்ராயுதமும் ஏந்தியுள்ளாள். உதடுகளில் கம்பீரமான புன்னகை, கண்களிலிருந்து சொர்க்கத்தின் செந்தீ சிரித்திட, அவள் உடல் வெல்லமுடியாத ஆற்றல்களின் நிலைக்களனாக, நரகத்தின் ராட்சத தெய்வங்களுக்கு எதிர் நின்றது. மனிதன் முன்னேறவேண்டும் என்று தான் அவனை வலிந்து செதுக்குவதாகக் கூறுகிறாள். குள்ள ராட்சதன் குரலோ ராட்சத சக்தியே வெல்லும் தெய்வ சக்திக்கு இடமில்லாது போகும் என்று கத்துகிறது. சக்தி வேண்டியதுதான். ஆனால் அது கருணையுடன் இணைந்து செயலாற்ற வேண்டும் என்றும், மேலும் பல ஆற்றல்கள் மனிதனுக்கு இருந்தால்தான் புதியதோர் உலகம் சமைக்க முடியும் என்றும் சாவித்ரி ஆற்றல்களின் அன்னையிடம் கூறி மேலே செல்கிறாள்.

இனி சாவித்ரி ஒளியின் அன்னையை (The Mother of Light) சந்திக்கிறாள். இங்கு யாவுமே இனிமை, அமைதி. இந்த அன்னையின்

வழிகாட்டுதல்மூலம் மனிதன் கனவுகள் பல காண்கிறான். இலட்சியங்களைவரிசைப்படுத்திக்கொள்கிறான். பகுத்தறிவு மனிதனோ (Mental Man) பகுத்தறிவே பிரதானம் என்கிறான். அவனிடம் உயர் இலட்சியங்களுக்கு இடமில்லை. மண்ணிலே விண்ணைக் காணலாம், இறைவன் இருக்கிறான் என்பது பித்தலாட்டம் என்று கொக்கரிக்கிறான். இது தாமசப் பிரகிருதியின் பேச்சு. இப்படியெல்லாம் பேசினால் மனிதன் முன்னேறுவது சாத்தியமில்லை. இயந்திர மனிதனால் சிருஷ்டிக்கு என்ன பெருமை? மற்ற அன்னையரிடம் கூறியது போல் ஒளியின் அன்னையிடமும் அவள் காட்டும் இக்கனவுகளும் இலட்சியங்களும் மனிதனுக்கு மிகவும் தேவைதான் என்று கூறுகிறாள்.

"நீ இருப்பதால் ஆன்மா இறைவனிடம் செல்கிறது.
வெறுப்பை மீறி அன்பு வளர்கிறது.
இரவுகளில் அறிவு உயிர்ப்புடன் பயணிக்கிறது."

இதுவே உண்மை. ஆயினும் மனிதன் இதைப் புரிந்துகொள்ளவில்லை. அனைத்து ஆற்றல்களையும் ஒருங்கிணைக்கவேண்டும் என்று அவனுக்குப் புரியவில்லை. அவனிடம் பலம் இருந்தால் கருணை இல்லை. கருணை இருந்தால் உதவும் சக்தி இல்லை. அவன் கனவு கண்டால் அதை நனவாக்க முயற்சிப்பதில்லை. இந்த ஒருங்கிணைக்கும் விசை எங்கே? இந்த விசை கைப்படும் எனும் நம்பிக்கை சாவித்ரிக்கு இருக்கிறது.

காப்பியம் எழுதும்போது ரசமான காட்சிகள், வர்ணனைகள் வேண்டும். இல்லையேல் படிப்பவர் மனம் சலித்துவிடும், சாவித்ரி காப்பியத்தில் இப்படிப்பட்ட காட்சிகளுக்கு இடமில்லை. மிகவும் முக்கியமான பொருளைப்பற்றி (மரணத்தை வெல்வது பற்றி) எழுந்த காப்பியம். அசுவபதியின் பயணங்கள் முழுக்க முழுக்க தியான யோகம். ஆங்காங்கே பொருத்தமான வர்ணனைகள், உருவகங்கள்மூலம் தியான யோகத்திற்கு ஸ்ரீஅரவிந்தர் உருவம் கொடுத்துவிடுகிறார். உலக ஏணி ஒரு தேர் போல் நம் மனத்தில் பதிந்துவிடுகிறது.

சாவித்ரியின் பயணமும் தியான யோகமே. ஆற்றல்களை அன்னையின் சக்திகளாகக்காண்பது நம் மனத்தில் தங்கிவிடுகிறது. நம் மனத்துள்ளே கருணை, பலம், அழகு போன்ற ஆற்றல்கள் இருப்பதைக் கண்டபின் சாவித்ரியுடன் அவளது ஆன்மாவின் மையத்துள் செல்கிறோம். அவள் முதலில் காண்பது தெய்வீக இருளாகத்தெரிகிறது. எங்கே இருக்கிறாள்?

அவள் யார்? அவளது ஆன்மா எங்கே? அவள் சாவித்ரி எனும் பெண்ணா அல்லது இந்த தெய்வீகப்பெருவெளியில் அவள் இல்லவே இல்லையா? தன்னம்பிக்கையைத் துணைகொண்டு, மௌனமாக இந்த இருளை சாவித்ரி கடக்கிறாள். ஆ! எங்கிருந்தோ தென்றல் வீசுகிறது. இருள் மறைந்து விட்டது! அவளது ஆன்மா எனும் குகையைக்காண்கிறாள். அதன் வாயில் தோரணத்தில் இரு பொன்வண்ண நாகங்கள். குகையைக்காப்பதுபோல அதன் மேல் வெற்றிச்சிறகுகள் ஒளிரும் கருடன். மாடங்களில் புறாக்கள். குகையினுள் எண்ணற்ற இறை சிற்பங்கள். அனைத்திலும் சாவித்ரி தெய்வீக நிலையைக்காண்கிறாள். பார்த்தவற்றுடன் ஒன்றிப்போகிறாள். தான் யார் என்று புரிந்து விட்டது. அனாதி காலமாக சேர்ந்து வாழ்ந்திடும் பரமனின் தேவி அவளே. அழகிற்கும், ஆனந்தத்திற்கும் அன்னை. என்றும் ஒருங்கிணைந்து வரும் கண்ணனின் ராதை. பராசக்தி அவளுள்ளே இருக்கிறாள்!

சாவித்ரியின் முன்புறம் ஒரு சுரங்கம் தெரிகிறது. அதன் வழியே சென்று ஒரு மனிதனின் கட்டைவிரலளவு உள்ள அவளுடைய ஆன்மாவை சந்திக்கிறாள். நமது மறைகள் இந்த உருவகத்தை காண்பித்துள்ளன: "நீல தோயத மத்யஸ்தா வித்யுத்லேகேவ பாஸ்வா" நீல வண்ண மின்னல் போன்றது. இது அழிவற்றது. இச்சந்தர்ப்பத்தில் ஸ்ரீ அரவிந்தர் யோகியின் உடலில் குண்டலினி சக்தி மேலெழும்பும் காட்சியினை அதி அற்புதமாக வர்ணித்திருக்கிறார்.

சுருண்டு கிடந்த ஒரு நாகம் எழும்புவது போல் குண்டலினி சக்தி சாவித்ரியின் உடலில் உள்ள சக்கரங்களைத்தாண்டி, உச்சியிலுள்ள ஸகஸ்ராரத்தில் பராசக்தியுடன் இணைகிறது.

"உச்சியிலுள்ள மலரிலும், பருப்பொருள் மலரிலும்,
இயற்கையின் முடிச்சுகளில், தெய்வீகக்கோட்டைகளில்
காண இயலாத உச்சிகளை, புலப்படாத ஆழங்களை
இணைக்கும் ஆன்மிக ஓடையினை, அது பற்றியது".

சாவித்ரியின் உச்சியிலிருந்து உடலெங்கும் இந்த சக்தி பாய்ந்திடவும், தான் அழிவற்ற ஆன்மா என்பதை அவள் உணர்ந்தாள். அகத்தினுள் கனலும் இந்த நெருப்பு காலனை அழிக்கும்! தலை உச்சியிலுள்ள ஆயிரமிதழ்த்தாமரையிலிருந்து அமுதம் பாய்ந்து பரவும். சாவித்ரி புத்தொளியுடன் விளங்குகிறாள். ஆனால் இது போதாது.

ஆன்மாவினைப் போல் உடலும் மாறவேண்டும். அந்த நாளும் வரும்.

ஆசிரமத்தில் முன்போலவே சாவித்ரி இருக்கிறாள். ஆயினும் தெய்வீக மாறுதல் பெற்றுவிட்டதை ஸ்ரீ அரவிந்தர் காட்டுகிறார். அகத்தின் அழகு முகத்தில் தெரியும் என்பதுபோல் சாவித்ரியின் அகம் அடைந்துவிட்ட தெய்வீக மாறுதல் அவளுடைய செய்கைகளில் தெரிகின்றனவாம். அவள் செய்யும்போது, மிகச்சிறிய செய்கையும் ஏதோ தெய்வீக வழிபாடு போல் இருக்கிறதாம். இறைவனுக்கு அர்ப்பணமாகச் செய்கிறாள் அல்லவா?

திடீரென ஒருநாள் அவளை வெறுமை வாட்டுகிறது. நானே மரணம், மரணத்தின் தாய் எனும் குரல் அவளது மனத்தில் எழும்புகிறது. இதென்ன? மரணத்திற்கு மாற்றே இல்லையா? நல்ல வேளையாக அவளுள்ளே இருக்கும் ஒளியின் காவலர்கள் அவளை உசுப்புகிறார்கள். சத்தியவானின் மரணம் மாத்திரம் அல்ல, மனித குலத்தின் வருங்காலத்தையே மாற்றியமைக்கும் மாபெரும் பொறுப்பை சுமக்கும் அவள், தனது தனிப்பட்ட துக்கத்தை நினைத்து சோர்வடையலாகாது. உடனே சாவித்ரி தன் மனத்தை முழுமையான மௌனத்தில் ஆழ்த்துகிறாள். மனத்துக்குள் வந்து பலவீனப்படுத்தும் எண்ணங்களை வெளியே தள்ளுகிறாள். மானுட மனத்தை மாற்றியமைத்து தெய்வத்தின் சன்னிதானமாக செய்வதற்காக பேரமைதியை வேண்டுகிறாள். இந்த அமைதி மரணத்தை ஏற்கும் அமைதியல்ல. இது சிருஷ்டியின் ஆனந்தம் தரும் அமைதி. எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா என்று மகிழும் அமைதி. பாரதியார் பாடியது போல கேட்கும் ஒலியிலெல்லாம் கண்ணன் குழல் கீதம் கேட்கும் அமைதி.

சாவித்ரி அதிகம் பேசவில்லைதான். பேசினாலோ, அங்கே அறிவும் பொருளும் நிரம்பியிருக்கும். காட்டில் இருந்த ரிஷிகள் இதற்காக அவளை மதித்ததாகத் தெரிகிறது. சாவித்ரியின் மனம் தியானத்தில் ஆழ்ந்திருந்ததால் அவளுக்கு பல அக அனுபவங்கள். ஒரு சமயம் மனத்தில் ஒரு குரல் இவ்வுலகம் மாயை அல்ல, அனித்தியம் அல்ல என்று அவளுக்கு உணர்த்துகிறது. அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் பரமாத்மா அவளுள்ளும் நிறைந்திருக்கிறான். எங்குமே அன்பு மலர்ந்திருக்கிறது என்று ஓர் அனுபவம். இறைவன் நமக்கு தந்திருக்கும் வாழ்வினை பொருளற்றதாக நாம் தள்ளக்கூடாது. மஹாசக்தி இவ்வுடலை நல்லதோர் வீணையாக செய்துள்ளாள். அதை நலம் கெட புழுதியில் எறிவது சரியல்ல. மரணத்தை நினைத்து அழுவதும் தவறு. மரணம் சாசுவதமல்ல. இந்த சிருஷ்டி அனைத்தும் முழுமையானது. ஆனந்தத்திற்காக ஏற்பட்டது. நாம் மற்றவர்களிடமிருந்து வேறானவர்கள் அல்ல எனும் ஒருமைப்படுத்தும்

உணர்வினை வளர்த்துக்கொள்ளவேண்டும். வாஸுதேவ: சர்வம் என்றால், அந்த கண்ணனில்தானே நாமும் இருக்கிறோம்! சாவித்ரியிடம் எப்படி இந்த உணர்வு தங்கிவிட்டது என்பதை மிகச்சிறப்பாக ஸ்ரீ அரவிந்தர் காட்டுகிறார்:

"தானே முழுமையின் சின்னம் என்று உணர்ந்தாள்.
மரத்தின், மலரின் உயிர்தரும் ரசம் அவளே.
வஸந்தகாலத்தில் வெளிவரும் மொட்டுக்களின் உயிர்.
அவள் ரோஜாவின் அற்புத ஆர்வமாக ஒளிர்ந்தாள்.
பாண்டவ-கௌரவ மலரின்[1] சிவந்த இதயம் அவள்;
குளத்தில் மலர்ந்திட்ட தாமரையின் வெண்மை."

சாவித்ரி மனிதன் தெய்வத்தை அடைவதற்கான பொன் ஏணியாக அவதரித்திருக்கிறாள். அகண்டத்தை அரவணைக்கும் இந்நிலையில் சாவித்ரி தேவிமஹாத்மியத்தில் சும்ப நிசும்பர்களை அழிப்பதற்காக எழுந்த மகாசரஸ்வதி போல் தோன்றுகிறாள்.

"காலமும் தேசமும் இல்லாத உலகினை அவள் சேர்ந்தாள்
பரம சைதன்னியம் அவளுக்கு வழக்கமானதொன்றாக ஆயிற்று.
அவளது நடை வான் வெளியின் இயற்கையை ஏற்றது.
அழிவற்ற வாழ்வு அவள்மூலம் காலத்தை நோக்கியது."

சாவித்ரி எனும் தெய்வீக யோகினி மனித குலத்திற்கு வழிகாட்டி. வியாசர் சாவித்ரி மூன்று இரவுகள் விரதம் காத்ததாகக் கூறுகிறார். அது எப்படிப்பட்ட விரதம் என்று ஸ்ரீ அரவிந்தர் சிந்தித்திருக்கிறார். மரணத்தின் மனத்தை மாற்றக்கூடிய விரதம் ஒரு மாபெரும் யோகமாக இருக்கவேண்டும். வியாசர் சாவித்ரிக்கு, தியான யோக பராயணா என்ற அடை மொழி கொடுத்திருக்கிறார். இச்சொல் ஸ்ரீ அரவிந்தரை வெகுவாகத் தாக்கியிருக்கவேண்டும். மஹாயோகி அல்லவா? சாவித்ரி தியானத்தை முன் வைத்து தன்னுடைய பூரண யோகத்தை வெற்றிகரமாக ஏற்றிருக்கிறாள் என்பது தெளிவடையவும், ஸ்ரீ அரவிந்தரின் ஆன்மிகக் கவிதை பிரவாகமாக பாய்ந்தது. அதனால் நாம் பெற்ற செல்வமே யோகம் எனும் பனுவல் (The Book of Yoga).

---

[1] Passion Flower

# 10. முடிவற்ற இரவு

இதுவரை சாவித்ரியின் சரித்திரம் வரிசையாக முன்னேறி வந்திருக்கிறது. காவியத்தின் முதலிரண்டு காண்டங்களில் சத்தியவானுக்கு மரணம் சம்பவிக்கும் நாளின் அதிகாலைப்பொழுதைக் கண்டோம். சாவித்ரி வரப்போகும் பயங்கரமான சவாலை எதிர்கொள்ளத் தயாராகி எழுந்திருக்கிறாள். அந்த நேரத்தில் எட்டாவது பர்வம் தொடர்வதாக ஸ்ரீ அரவிந்தர் நினைத்திருந்தார் போலும். ஆனால் இப்பர்வத்தின் முதலிரண்டு காண்டங்கள் எழுதப்படவில்லை. மூன்றாவது காண்டத்திற்கே நேராகச் சென்றுவிடுகிறோம். ஆயினும், வியாசரின் கதையிலிருந்து ஸ்ரீ அரவிந்தர் எந்த ஒரு முக்கியமான விஷயத்தையும் எழுதாமல் விடவில்லை.

பொன்காலை நேரத்தில், தன்னருகில் தூங்கிக்கொண்டிருந்த கணவனை ஆதுரத்துடன் சாவித்ரி சற்று பார்த்துக்கொண்டிருந்தாள் என்று ஸ்ரீ அரவிந்தர் துவங்குகிறார். சத்தியவானுடன் கழித்த இனிமையான நாட்கள் அவளது நினைவில் நிழலாடுகின்றன. பாரத மண்ணில் பிறந்த பெண் அனாதி காலத்திலிருந்து செய்து வருவது போல - சாவித்ரியும் துயிலெழுந்த உடன் முதலில் ஜகன்மாதாவை வணங்குகிறாள். இன்று அவள் ஒரு மாபெரும் போரில் வெற்றி பெறவேண்டும். அதனால் அவள் துர்க்கையை வணங்குவதாக ஸ்ரீ அரவிந்தர் எழுதுகிறார்.

"மௌனமாக எழுந்த அவள் தன் கடமைகளைச்செய்தாள்.
சத்தியவான் கல்லில் செதுக்கி வைத்திருந்த
மகாதேவியின் சிலை முன் வணங்கி நின்றாள்.
அவள் என்ன துதி கூறினாளோ, நாமறியோம்.
அவளுக்கும் துர்க்கைக்குமே அது தெரியும்.
அந்த மாபெரும் இருள் கவிந்த வனத்தில் ஜகன்மாதா
தன் குழந்தையைக் காப்பாற்றுவது அறிந்தனள் போலும்.
மௌனமாக ஒரு குரல் அவளிடை ஒரு சொல் கூறியதோ?"

போரில் வெற்றிபெற துர்க்கையை வணங்குதல் இந்திய மரபு. குருக்ஷேத்திரப்போர் தொடங்குவதற்கு முன்பாக, கண்ணன் கீதையை அறிவுறுத்தும் முன்பே அர்ஜுனனிடம் துர்க்கையை துதிக்குமாறு சொல்கிறான். மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தின் ஆரம்பத்தில் இக்காட்சியைக்காண்கிறோம். கண்ணன் கூறியவுடன் அர்ஜுனன் தேரிலிருந்து இறங்கி நின்று, இரு கைகளையும் கூப்பியவாறு ஒரு அற்புதமான துர்காஸ்தோத்திரத்தை இசைக்கிறான்.

நமஸ்தே ஸித்தஸேனானி, ஆர்யே மந்தரவாஸினி
குமாரி காளி காபாலி கபிலே கிருஷ்ணபிங்களே

ஸ்ரீ அரவிந்தருக்கு ஆபத்துக்காலங்களில் துர்க்கையை வழிபடுவதில் நம்பிக்கை இருந்திருக்கிறது. அவர் மஹாபாரதத்தில் ஆழ்ந்தவர். விராட பர்வத்தில் வரும் துர்க்கையின் துதி அவரைக் கவர்ந்திருக்கிறது. தங்களது மாறுவேடம் வெளிப்படாமல், ஓராண்டு மறைவான வாசம் நல்லபடியாக முடியவேணுமென பாண்டவர்கள் துர்க்கையைத் துதிக்கிறார்கள்.

வாஸுதேவஸ்ய பகினீம் திவ்யமால்யானிபூஷிதாம்
திவ்யாம்பரதராம் தேவீம் கட்ககேடகதாரிணீம்த........
வ்யாதிம் ம்ருத்யும் பயம் சைவ பூஜிதா நாசயிஷ்யஸி
ஸோஹம் ராஜ்யாத் பரிப்ரஷ்ட: சரணம் த்வாம் ப்ரபன்னவான்

ஸ்ரீ அரவிந்தரே வங்காள மொழியில் ஓர் அற்புதமான துர்காஸ்தோத்திரம் இயற்றியிருக்கிறார். மரணதேவனிடமிருந்து தன் பக்தர்களைக் காப்பாற்றுவதற்கு ஆயுதங்களை ஏந்தியிருக்கும் துர்க்கையை வணங்கி சாவித்ரி தனது மாமியாரிடம் வனத்திற்கு கணவனுடன் செல்ல அனுமதி கேட்கிறாள். மாமியார் மனம் பயத்தால் மருண்டுவிடக்கூடாது என்று தன் துயரத்தை வெளிக்காட்டாமல் சாவித்ரி அமைதியாகப் பேசுவதாக ஸ்ரீ அரவிந்தர் குறிப்பிட்டிருக்கிறார்.

"பசுமையான இப்பெரும் காட்டிலே, நீல வான் கீழே,
கொடுமுடிகள் சூழ்ந்த இந்த இடத்திலே ஓராண்டு
நான் சத்தியவானுடன் வாழ்ந்து வந்திருக்கிறேன்.

பென்னம்பெரிய இந்த அடவியின் மௌன நிலைகளில்
நான் சஞ்சரித்ததேயில்லை. அவை என் மனத்தில்
ஏதேதோ ஆச்சரியமான எண்ணங்களை எழுப்புகின்றன.
இச்சிறு குடிலே என் இல்லம். வெளியே பரந்துள்ள
பசேலென்று காணும் சித்துக்களை காண விழைகிறேன்.
சத்தியவானுடன் கை கோத்தவாறு, அவன் வளர்ந்த இடத்தை
காணவேண்டும்; அவன் நடந்த இடத்தில் போகவேண்டும்.
வனத்திலுள்ள புஷ்பங்களைப்பார்த்து, நிம்மதியாக
பறவைகள் கானத்தை ரசிக்கவேண்டும். அங்கு துள்ளும்
உயிரினங்களைக் கண்டு களிக்கவேண்டும். கிளைகள்
உரசுவது கேட்டு, அதில் அடவியின் ஆன்மிகப்பேச்சினை
கேட்கவேண்டும். எனக்கு விடை தாருங்கள். அம்மா!
என் மனம் ஒய்வு பெற வேண்டும்."

பெரிய சுமங்கலியான சைப்யை சாவித்ரியையும் சத்தியவானையும் ஆசீர்வதிக்கிறாள். இருவரும் மகிழ்ச்சியுடன் கைகோர்த்துக்கொண்டு காட்டினுள் செல்கிறார்களாம். சத்தியவானுக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கிறது. முதன் முறையாக தன்னுடன் வருகிறாள் அல்லவா? அவனுக்குப்பழகிய, அவனை வளர்த்த இடம். காட்டில் உள்ள அனைத்து செல்வங்களையும் அவளுக்குக்காட்டி மகிழ்கிறான். அப்பப்பா! எத்தனை வகைமலர்கள்!எத்தனைவண்ணங்கள் !எத்தனைவடிவங்கள்!எத்துணை நறுமணங்கள்! சிகப்பும் பச்சையுமாக மரங்கள் செடிகள்: அவற்றின் மேல் படர்ந்து விரியும் கொடிகள். பறவைகள் பலப்பல விதங்களாக, வண்ண வண்ண இறக்கைகளுடன் பறந்து கொண்டிருக்கின்றன. கிளைகளிலிருந்து கிளம்பும் ஒவ்வொரு ஒலிக்கும் தூரத்திலிருக்கும் கிளைகளிலிருந்து விடையாக ஒலிகள், இனிமையாக, பாடகனின் பெயரே போல் ஒலிக்கும் விந்தை அனுபவங்கள்! அனைத்தையும் சாவித்ரிக்கு ஒவ்வொன்றாகச் சுட்டிக்காட்டி மகிழ்கிறான்.

ஒவ்வொரு கணமும் இதுவே அவனது இறுதியான சொல்லோ என்று உள்ளூற சாவித்ரி தவிக்கிறாள். ஒரு மரத்தைக் கோடாரியால் வெட்டும்போது, சத்தியவானுக்கு மிகவும் களைப்பு ஏற்படுகிறது. மனைவியிடம் தனக்கு தலை மிகவும் வலிப்பதாகவும், சற்று நேரம் ஒய்வெடுக்கப்போவதாகவும் சொல்கிறான். சாவித்ரி தரையில் உட்கார்ந்து

சத்தியவான் சவுகரியமாக தூங்கவேணுமென அவனது தலையைத் தன் மடிமேல் வைத்துக்கொள்கிறாள். வலி தாளாமல் அவள் பெயரைக்கூறி அரற்றுகிறான். அவனைச் சமாதானப்படுத்த குனிந்து அவனை முத்தமிடும்போதே அவன் தளர்ந்துபோகிறான். தனது இதழ்களால் அவனது உதடுகளை அணைத்து அவன் உயிரைக்காப்பாற்ற அவள் முனையும்போதே, தங்கள் அருகில் நடு வெயில் நேரத்தை இருள் மண்டியதாகச்செய்யும் ஓர் உருவம் இருப்பதை உணர்ந்துவிடுகிறாள்.

எங்கும் உயிரற்ற மௌனம் கவிகிறது. பிராணிகளும் பறவைகளும் கூட மவுனமாகிவிட்டனவே! உலகத்தையே ஒரு திகில் பற்றிக்கொண்டிருப்பதுபோல் தோன்றுகிறது. என்ன நடக்கப்போகிறது? என்ன நடந்து கொண்டிருக்கிறது? மேல் நோக்கி உயர்ந்து வந்த இயற்கையின் பரிணாம வளர்ச்சி நின்றுவிட்டதா? இத்தனை நாட்கள் வாழ்ந்ததெல்லாம் பொய்யா? கண்ட காட்சிகள், பெற்ற அனுபவங்கள், அடைந்த ஆனந்தம் யாவுமே மாயைதானா? இரண்டே வரிகளில் மரணத்தின் அசைக்கமுடியாத நிலையை ஸ்ரீ அரவிந்தர் காட்டுகிறார்:

மரணத்தின் உருவம் அருகில் நிற்பதையும், தன் பிடியிலிருந்து
சத்தியவான் நழுவிச்சென்றுவிட்டதையும் அறிந்துகொண்டாள்.

ஸ்ரீ அரவிந்தர் வேத வியாசரின் மகாபாரதத்தில் உள்ள கதையையே கூறிவந்தாலும், யமதர்மராஜனுடைய பாத்திரத்தைச் சித்தரிப்பதில் மாறுதல் ஏற்படுத்தியிருக்கிறார். வியாசர் யமனைக் காட்சியில், பேச்சில் மேன்மையான தேவனாக, தர்மதேவதையாகவே காட்டுகிறார். பார்க்க அச்சமூட்டுவதன் காரணம் யமன் ஆதவன் போல் ஒளிர்வதால் (ஆதித்யஸம தேஜஸம்) எனலாம். சாவித்ரி-யமதர்மன் உரையாடல் உன்னதமாக இருக்கிறது. சாவித்ரி உயர்ந்த எண்ணங்களை முன் வைக்கும்போது தர்மதேவன் மகிழ்ந்து, தானாகவே வரங்களைத் தருகிறான். ஓர் எடுத்துக்காட்டு. சாவித்ரி சொல்வது:

"என் மனத்தில் தோன்றியதும், என்னால் சொல்லப்படுகின்றதுமான இந்த வார்த்தையை நீர் போய்க்கொண்டே கேட்பீராக. பிரதாபமுள்ள நீர் விவஸ்வானுடைய (ஸூர்யனுடைய) புத்ரர். அதனாலன்றோ கற்றறிந்தவர்களால் வைவஸ்வதரென்று சொல்லப்படுகிறீர்? ஈச்வரரே! அந்தப்பிரஜைகள் (பகை நட்பு என்னும் வேறுபாடில்லாத) ஸமமான

உமது ஆட்சியினால் வசப்பட்டு நடக்கின்றன. அதனால், உமக்கு இந்த உலகத்தில் தர்மராஜரென்னப்படுதல் ஸித்தித்திருக்கிறது. ஸாதுக்களிடம் உண்டாகிறதுபோன்ற நம்பிக்கை தன்னிடத்திலும் உண்டாகிறதில்லை. ஆகையால், எல்லாரும் ஸாதுக்களிடம் ஸ்னேகத்தை விசேஷமாக விரும்புகிறார்கள். அன்பிருப்பதனால் எல்லாப் பிராணிகளுக்கும் நம்பிக்கையென்பது உண்டாகிறது. ஆகையால், ஜனங்கள் ஸாதுக்களிடம் விசேஷமாக நம்பிக்கை வைக்கின்றார்கள்."

முடிவில் மகிழ்வுடன் சத்தியவானின் உயிரைத் திருப்பிக்கொடுக்கும்போது, யமதர்மன் இருவரையும் ஆசீர்வதிக்கிறான்.

"கல்யாணி! குலத்தை மகிழ்விப்பவளே! இதோ உன்னுடைய பர்த்தா........ என்னால் அவிழ்த்துவிடப்பட்டான். பதிவ்ரதையே! நான் உன்னால் தர்மங்களோடும் நல்ல அர்த்தங்களோடும் கூடின வாக்கியங்களால் ஸந்தோஷத்தை அடையும்படி செய்யப்பட்டேன். இந்த சத்தியவான், ரோகமில்லாதவனாக அழைத்துச் செல்லத்தக்கவன்; புருஷார்த்தங்கள் நிறைவேறினவனாவான்; உன்னோடு கூடி நானூறு வர்ஷங்கள் வாழ்நாளை அடைவான்."**

பாரதத்திற்குப் பிற்காலத்தில் தோன்றிய புராணங்களும் இப்படியே யமதர்மனைப்பற்றிச் சொல்கின்றன. மகாபாரதத்திலேயே யமனுடைய மகனாக விதுரன் தோன்றி நீதிநெறிகளைப் பற்றிக் கூறுவதைக் காண்கிறோம்.

ஆனால் ஸ்ரீ அரவிந்தர் யமதர்மனது பாத்திரத்தில் ஒரு பெரிய மாறுதலைச் செய்திருக்கிறார். இறைவனே மரணம் - அஞ்ஞானம் மற்றும் வாழ்க்கை —— ஞானம் என்னும் இரண்டு முரண்பட்ட தத்துவங்களுக்கு மூலாதாரம். இந்த ஆச்சரியமான ஒருமைப்பாடு நமக்கு எளிதில் புரிவதில்லை. அதனால்தான் போலும், ஸ்ரீ அரவிந்தர் யமன் என்னும் சொல்லை உபயோகிக்கவில்லை. முதலில் இறைவனை மரணம்-அஞ்ஞானம் எனும் உருவமாகக் காண்கிறோம். இந்த உருவமே சத்தியவானின் உயிரை உடலிலிருந்து பிரித்துவிடுகிறது. பின்னர் சாவித்ரியுடன் வாதாடுகிறது. உலகத்தின் ஆன்மாவான சத்தியவானின் உயிரை விடமாட்டேன் என்கிறது. இப்படலத்தில் சாவித்ரி மரணதேவனைப் பின்பற்றிச் செல்வதைக்காணலாம்.

சத்தியவானின் உடலை சாவித்ரி அணைத்துக்கொள்ளும்போது, நெற்றியில் அவளது ஆக்ஞா சக்ரம் திறக்கிறது.

திரை கிழிந்தது. மனத்தை மீறிய நிலை.
காண்பது ஆன்மாவே, அது அனைத்தும் அறிகிறது.
புருவங்கள் மேலே அமர்ந்துள்ள அமைதியான சக்தி
தெரிகிறது; நம் எண்ணங்களும் செய்கைகளும்
அதைக்கட்டுப்படுத்துவதில்லை. உலகின் குரல்களை
அதன் அமைதி ஏற்றுக்கொள்கிறது. ஒரு சக்தி
ஒளிக்கற்றைகள் பின்தொடர உலகில் இறங்கியது.
காலத்தின் கணங்களை அமரத்தன்மையுடன் இணைத்தது.
உலகையும் அவளையும் கூட்டி வைத்தது.
அந்த ஆற்றல் உட்புக, அவள் மாற்றம் கண்டாள்."

சாவித்ரி சத்தியவானின் உடலைத் தரைமேல் வைத்துவிட்டு எழுந்திருக்கிறாள். புயல் காற்றடித்தபின் ஒரு பெரிய மரம் தன்னை சுதாகரித்துக்கொள்ளுவதுபோல்,வரப்போகும்போருக்குஆயத்தமானாள். அவள் கண்ட மரண தேவனின் உருவம் வர்ணனைக்கு அப்பாற்பட்டது.

அங்கு உலகில் காணமுடியாததோர் உருவம்.
கம்பீரமான, புன்னகையற்ற, பயங்கரமான,
அற்புதமான உருவம். அதன் தீக்கண்களிலே
அழிக்கும் தேவர்களின் கருணை இருந்தது.
அதன் பயங்கர உதடுகள் கேலியாக சுழித்தன.
விதியை நிர்ணயிப்பவை அல்லவா? முடிவற்ற இரவு
அங்கே அழிவற்ற முகத்துடன், பச்சாத்தாபத்துடன்
எழுந்தது........ "

காப்பதற்காக வந்த பெண்ணும் மரணதேவனும் ஒருவரை ஒருவர், நடுக்கமின்றி நோக்கியவாறு நின்றனர். காலம் காலமாக வந்த அனுபவங்களின் குரல்கள் இறந்த மனிதனை விட்டு வந்து விடுமாறு கூறின. மனித வாழ்க்கை நீர்க்குமிழிதானே!

ஆனால் சாவித்ரி ஏற்கவில்லை. நாள்தோறும் அதிகாலையில் எழுந்து வேலைக்குச்செல்வதுபோல, நடுக்கமின்றி எழுந்திருக்கிறாள். இன்றும் ஒரு வேலை அவளுக்காகக் காத்திருக்கிறது. காலனுடன் அவள் போராடி சத்தியவானை மீட்கவேண்டும்.

அவள் நிமிர்ந்த பார்வையுடன் நிற்கும்போதே, மரணதேவன் குனிந்து சத்தியவானின் உயிரைப்பறிக்கிறான். பரு உடலிலிருந்து "ஒளி உடலுடன்" சத்தியவான் வெளியே வந்து நடந்து செல்ல, மரணதேவன் அவனைப் பின்பற்றுகிறான். சாவித்ரி மரணதேவனைப் பின்பற்றுகிறாள். இவை யாவும் மௌனமாக நடைபெறுகின்றன. அழுகை, அதட்டல், கேவல் என்று ஏதுமே இல்லை. இவ்வுலகத்தில் தரை மேல் நடப்பவர்கள் போல் தோன்றுகின்றனர். மெள்ள உயிர் உலகினைத்தாண்டி வரும் சமயம். சத்தியவானும் மரணதேவனும் மறைந்துவிடுவார்களோ என்று சாவித்ரிக்கு அச்சம். அதனால் அவளது ஆன்மா பொன்வண்ண நெருப்பு கோளம்போல் எழும்பி சத்தியவானுடன் செல்கிறது. அவள் உடல் தரையில் இருக்கிறது. இப்பொழுது அவள் மானுட சாவித்ரி அல்ல. சுய-ஆற்றலின் ஓர் உருவகமாக இருக்கிறாள்.

அவர்கள் செல்லுமிடம் ஒரே குளிர் பிரதேசம். செடிகொடி ஏதும் இல்லை. சத்தியவான் திரும்பி தன்னுடைய தெய்வீகக்கண்களால் சாவித்ரியைப்பார்க்கிறான். மரணதேவனோ கடுமையாகப்பேசுகிறான்:

"மனிதப்பெண்ணே! மறையும் மனிதச்சாதியிடம் திரும்பு.
மரணதேவனின் இல்லத்திற்கு செல்ல முனையாதே!
காலம் இல்லாத இடத்தில் உனக்கு மூச்சு கிடையாது."

தேவர்களுக்கு மனிதர்களாது சுக துக்கங்கள் பற்றிக்கவலை கிடையாது என்று கூறி, அவள் பயங்கரமான இடங்களில் சஞ்சரிக்காமல் இருப்பது மேல் என்கிறான். சாவித்ரி பதில் சொல்லவில்லை. மௌனமாக சத்தியவான் வழியில் செல்கிறாள். பார்த்தால் ஒரு நெருப்புத்தூண் போல் அல்லவா இருக்கிறாள்.

இந்த பயங்கரமான பயணம் இரவின் விளிம்பிற்கு வந்து தொடர்கிறது. இங்கு சுவர்க்கம் கூட பயங்கரமான தோற்றம் கொள்கிறது. அப்படிப்பட்ட கும்மிருட்டு. மரணதேவன் சத்தியவானின் உயிரை இழுத்துச்செல்கிறான். சாவித்ரியால் மரணதேவனுக்கு ஈடு கொடுக்கமுடியுமா? ஏதுமற்ற இவ்வுலகினுள் அவளால் புகுந்துவிட முடியுமா என்ன? அப்படி அவள் செய்தால் அவளை யார் காப்பாற்றுவார்கள்? ஏன், அவள் மனம் கூட செயலிழந்து போகும் பூமியல்லவா இந்த முடிவற்ற இரவு? இந்த இடத்தில் ஸ்ரீ அரவிந்தர் மிகப்பொருத்தமான உவமையைக் கையாள்கிறார்:

நெஞ்சை நடுங்கவைக்கும் ஒரு திரைச்சீலைபோல்
அவளது பஞ்சேந்திரியங்களை இருள் சூழ்ந்தது.
காட்டில் வேடர்களால் கட்டப்பட்ட எருதினைச்சுற்றி
மரங்களின் பூதாகாரமான நிழல்கள் ஆட,
துணை கூறும் இறுதி ஒளியும் மறைந்துபோக
தோன்றும் நிலைமையே இது."

சாவித்ரி விடுவதாக இல்லை. அவளது சுய நம்பிக்கை, மனத்தில் மலர்கிறது. அவளது ஆன்மா வலியையும் மீறி ஒரு மகிழ்ச்சியினைப் பெறுகிறது. அவளது சைதன்னியத்தில் சத்தியவான் நடக்கும் சப்தம் கேட்கிறது.

மரணதேவனுக்கு இது ஒரு புதிய அனுபவம்தான். தனது எல்லைக்குள் அவள் நுழைவது கூடாது என்று எச்சரிக்கிறான். ஆயினும் அந்த எச்சரிக்கையிலும் ஒரு பணிவு. குழந்தையை சமாதானப்படுத்துவதுபோல் செய்ய முனைகிறான். உலக வாழ்க்கை முழுவதும் துயரமாக இருக்கும்போது, அவள் ஏன் சத்தியவானை அந்த வாழ்க்கைக்கு அழைக்கவேண்டும்? அனித்தியம், அஸுகம் லோகம்! மரணம் என்பது நிச்சயம் என்று தெரிந்த பின்னர் வாழ்வதும் ஒரு வாழ்வா? போகிறது. அவள் வெறுங்கையுடன் திரும்ப வேண்டாம். சத்தியவானிடம் அவள் காட்டும் இனிய அன்பு போற்றப்படவேண்டியதே. அதனால் மரணதேவன் அவளுக்கு ஏதேனும் பரிசு தர விரும்புகிறானாம்!

சாவித்ரியை அப்படி எளிதாக நினைத்த மரணதேவனுக்கு ஒரு அதிர்ச்சி. மரணம் என்பதுதான் முடிவு என்பதை அவள் ஏற்கவில்லை என்றுவிடுகிறாள். மரணம் என்பது ஓர் "இருண்ட பொய்". அவள் சத்தியவானின் உயிரை மீட்காமல் திரும்பப்போவதில்லை! மரணதேவனுக்கு வேண்டுமானால் சத்தியவான் வாழ்க்கையில் விரும்பிய பொருளை அவனுக்குக் கொடுக்கட்டும்! சத்தியவான் வாழ்க்கையில் மிகவும் ஆசைப்பட்டது த்யுமத்ஸேனருக்குக் கண்பார்வை மீள வேண்டும் என்பதுதான். நாடிழந்து, வீடிழந்து காட்டில் வசித்துவரும் தன் தந்தைக்கு, வனத்தின் அழகுகளைக்காணாமல் விதி செய்துவிட்டதே என்று அவன் வருந்திய நாட்கள் எத்தனை எத்தனையோ! மரணதேவன் இதை உணர்ந்து, த்யுமத்ஸேன மகாராஜவிற்கு கண் பார்வையும், அவரது ராஜ்ஜியமும் மீண்டும் கிடைக்கும் என்று வரம் தருகிறான்.

பயணம் தொடர்கிறது. சாவித்ரி சத்தியவானைப்பின்பற்றுகிறாள். மரணதேவன் என்ன சொல்லியும் அவள் கேட்கவில்லை. "என் தீர்மானமே எனக்கு நியாயமான வழி. என் ஆற்றலே என் இறைவன். மானுடப்பிறவி ஆயினும் நான் அமரத்தன்மை பெற்றவள்" என்று பதில் சொல்லிவிடுகிறாள். அந்தகாரத்தில் அவர்கள் செல்லும்போது மரணதேவன் சாவினைப்பற்றி விவரிக்கிறான். உலகின் இறைவன் யார்? மரணதேவன்தான்! அவனுக்குமேல் அப்பீல் கிடையாது. மரணம் எனும் எல்லையைக்கடந்த பின் சாவித்ரி, சத்தியவான் என்றெல்லாம் சொல்வதில் பொருளே இல்லை. அவளால் இனி செய்யக்கூடியது ஏதுமில்லை. அவன் திரும்பிச்செல்லவேண்டியதே! சென்றபின் உலகில் அவளுக்கு எஞ்சியுள்ள நாட்களைக் கழிக்கும்போது மரணம், மரணமில்லாப் பெருவாழ்வு என்று யோசனைகள் வேண்டுமானால் செய்து மகிழலாம். சாவித்ரியின் பதில் தைரியத்திற்கு உருவகம். பாரதி கூறிய எவர்க்கும் அஞ்சாத நெறிகளை அவளது வாக்கில் இப்பொழுது காண்கிறோம்:

"வாதிடும் மரண தேவனே! நான் வாதிட வரவில்லை.
பகுத்தறிவு அக்கக்காக பிய்த்தெறியும், அவ்வளவே.
அதற்கு கட்டமைக்கத்தெரியாது. கட்டினாலும்
சரிப்படாது, அதற்கு சுய நம்பிக்கை இல்லாததால்.
நான் இருக்கிறேன், அன்பு கொண்டேன், காண்கிறேன்,
செய்கிறேன், செய்யத் தீர்மானிக்கிறேன்."

மரணதேவன் விடுவதாக இல்லை. சாவித்ரியின் அறிவு முழுமையானதாக இல்லை என்று பரிகசிக்கிறான். அன்பு சாசுவதமல்ல என்பதைப் புரிந்துகொள்வதே அறிவுஜீவிகளின் இலக்கணம். சாவித்ரி இதை மறுக்கிறாள். அன்பில்லாமல் அறிவு இருந்து என்ன பிரயோஜனம்? அறிவு என்பது வைக்கோல்போர்! அன்புதான் நெஞ்சில் வாழும் இறைவனை அடையாளம் கண்டுகொள்கிறது. அன்பே இறைவனை அடைய பாதை அமைக்கிறது. அறிவு என்பது பென்னம்பெரியதுதான் என்றாலும், அன்பினால் ஒரு கணத்தில் அறிவின் பரப்புகளை புரிந்துகொண்டுவிடமுடியும். அவளைப்பொறுத்தவரை அன்பின் மூலமே அவள் வாழ்வியலைக் கற்றுக்கொண்டிருக்கிறாள். சத்தியவானுடன் வாழ்வதன் மூலம் அவள் பூரணத்துவம் பெற்றிருக்கிறாள். ஏன், அவள் உலகில் பிறப்பதற்குக் காரணமே அன்பு என்று கண்டுகொண்டாள்.

"என்னுள்ளே கனலும் அன்பு முகமூடிகளைத்தாண்டி
உள்ளே கனலும் உண்மையை அறிகிறது. அறிவென்பது
மகாப்பெரிய அணைப்பு: வாழும் உயிர்களெல்லாம்
நானே என்பதறிவேன். அனைவரது உள்ளங்களிலும்
அந்த ஒருவன் அமர்ந்துள்ளான். மனவாசகம் கடந்த
பேரமைதி உலகத்தைத் தாங்குவதை நானறிவேன்.
அதுவே கண்ணுக்கெட்டாத, மவுன தேவன்.
அவனது ரகசிய செயல்களை அனுபவிக்கிறேன்.
பேருலகக்குரலின் ஓசையை நான் கேட்கிறேன்.
என் வருகை இறைவனிடமிருந்து தோன்றிய அலை."

மனித குலத்தில் பிறந்த ஒரு ஜீவனுக்கு இப்படியொரு தைரியமா? மரணத்தைக்கண்டு அஞ்சா நெஞ்சமா? அதிர்ச்சியுடன் சற்று நேரம் பேசாமல் மரணதேவன் நடக்கிறான். சாவித்ரியின் சொற்கள் ஆலயமணியென ஒலிக்கின்றன. மனிதனது உடல்தானே அழிகிறது! ஆன்மாவிற்கு அழிவில்லையே! ஆன்மா உடலையும் அமரத்துவம் அடையச்செய்யுமே! ஆன்மாவை அம்பினால் துளைக்கமுடியாது, நெருப்பினால் சுட முடியாது! அவள் மேலும் சொல்கிறாள் அனைவர் மனங்களிலும் அமர்ந்து, அனைவரிடமும் அன்பு மூலம் பிணைப்பு ஏற்படுத்தும் இறைவன்தான் இப்பொழுது இங்கே மரணம் எனும் முகத்திரையுடன் வந்திருக்கிறான். மனிதன் மரணமெனும் திரையால் மூடப்பட்டிருக்கிறான். மரணம் அவனை வெற்றிகொள்ளவில்லை. இறைவன் மனிதனுக்கு அறிவு, அன்பு எனும் இரு ஆற்றல்களைக்கொடுத்திருக்கிறான். அவற்றின் மூலம் மரணத்தையும் மனிதன் வென்றுவிடுவான். மனிதனுக்கு மனமும், இதயமும் இருக்கும்வரை அழிவில்லை.

மரணத்தின் கோட்டையை வீழ்த்தமுடியுமா என்ன என்று மரணதேவன் கர்வமாக இருக்கிறான். சாவித்ரியின் பேச்சு ஒரு குழந்தையின் மழலை, வேறென்ன? இந்த இடத்தில் மரணதேவனை இறைவனின் ருத்ராம்சமாக ஸ்ரீ அரவிந்தர் வர்ணிக்கிறார்:

"இருளால் மூடிய மௌன உருவமாக, நிழலாக,
அசைவற்று, தனது ரகசிய வாளின் பயங்கரங்களால்
அலங்கரிக்கப்பட்டு மரணதேவன் நின்றான்.
மேகங்களூடே தெளிவற்ற, சிந்தனைதோய்ந்த முகம்.

மாலைப்பொழுதின் வண்ணமே அவனது ஜடாமுடி.
அவன் நெற்றியிலே சிதையின் சாம்பற்பூச்சு.”

சாவித்ரிக்கு பயமேதும் தெரியவில்லை. முடிவற்றதுபோல் தோன்றும் அந்த இரவின் பயணியாக, நம்பிக்கை நசித்துவிட்ட அப்பாதையில், அவள் முன்னே சென்றாள். உயிரற்ற அந்த இரு கொடுமையான கண்களால் அவளை நிறுத்தமுடியவில்லை. அவளைச்சுற்றி துக்கம் எனும் பாலைவனம் பரந்து கிடந்தது. அவளது எண்ணங்களையும், உயிரையும், அன்பையும் முழுங்கிவிடும் மரணம் போல் அங்கு காலியாக, மகிழ்ச்சியற்ற நிலை இருந்தது.

அந்த நீண்ட இருளில், அவளால் உந்தப்பட்டு,
கண்டும் காணாத உருவாய் அம்மூவரும்
மனிதருலகைத்தாண்டிய உலகின் வழியில் சென்றனர்.

## 11. இரட்டை சந்த்யை

இதுவரை கண்ட நடப்புகளால் மரணதேவன் என்பவன் அஞ்ஞானமே உருவானவன், மாயாவி, அழிக்கும் சக்தி என்று புரிந்துகொண்டோம். ஸ்ரீ அரவிந்தரின் சாவித்ரியோ மனிதப்பிறவி. ஆயினும் மன வாசகம் கடந்த இறைவனின் நிலையை முயன்று தவமியற்றி அடைந்திருக்கிறாள். மரணதேவனுக்கும் சாவித்ரிக்கும் ஏற்பட்டுள்ள மோதலில், முதல் சுற்றில் இருவருமே முன்னேறவில்லை. மரணதேவனால், சாவித்ரியை பயமுறுத்த முடியவில்லை.

இரவு சந்தியாகாலத்திற்கு வழிகோலுகிறது என்பது வேதத்தில் கூறப்பட்டிருக்கிறது. வேதம் பகல், இரவு, காலை சந்த்யை, மாலை சந்த்யை என்ற பிரிவுகளை விரித்திருக்கிறது. இதுபற்றி விளக்கும்போது ஸ்ரீ அரவிந்தர் கூறுவார்: "அறியாமை எனும் இருளை உண்மை வென்று அதன்மூலம் அமரத்துவம் அடையலாம் என்பதே வேதங்களின் ஆதார சுருதி". ஆனால் இவ்வெற்றியை அடைவது சுலபமல்ல. நீண்ட காலம் வேண்டியிருக்கிறது. இயற்கை மெள்ளவே முன்னேறுகிறது. இந்த இயற்கையின் செயற்பாட்டினை வலிந்து மாற்றியமைக்க முனைந்தால், தீய சக்திகளுக்கு உதவியாகிவிடும். இதனால்தானே சீதா தேவியும் அனுமனுடன் இலங்கையை விட்டுச்செல்ல ஒப்பவில்லை? மின்னலடிக்கும் நேரத்தில் சென்றுவிட்டால் ராமனுக்கு வெற்றியுமில்லை, தீய ராவணனும் அழியமாட்டான் அல்லவா? ஒரு தவறை சரிசெய்யாமல் குறுக்கு வழியில் வெற்றிகாண முயல்வது நல்லதல்ல. இரவினை, அறியாமையினைப் புரிந்துகொள்வது மிகவும் கடினம். அதனால் தான் பொறுமையாக முடிவற்றதுபோல் விளங்கும் இருளில் சாவித்ரி நடந்து, பின் இந்த இரட்டை ஸந்த்யையிலும் பயணிக்கிறாள்.

இரவின் கருமையில், ஏதுமற்ற ஒரு நிலைக்களனில் சாவித்ரி, மரணதேவன், சத்தியவானின் ஆன்மா செல்வது காண்கிறோம். ஸ்ரீ அரவிந்தரின் ஆங்கிலம் இருளிலிருந்து பேரிருளை மிக சுலபமாகத்தோற்றுவிக்கிறது:

பயனற்ற வெறுமையிலே ஒரு கருமையான கனவாக,
சூனியத்தில் நடந்திடும் இலக்கற்ற பயணமாக,
குறிக்கோளின்றி அவர்கள் சென்றுகொண்டிருந்தனர்.
துயரம் மேன்மேலும் இருள், ஆழத்தின் கீழ் பாழாக,
ஐயமற்ற இல்லாமையின் பயனற்ற பரப்பினிலே,
ஊமையான, அறியவொண்ணாத பிரதேசமாக விரிந்தது.

இது என்ன நம்மை மயக்கும் வெற்று மாயை தானோ? அல்லது, இதுதான் எங்கும் நிறைந்த பிரம்மத்தை மூடியிருக்கும் திரையாம் விஷ்ணு மாயையோ? ஆம், இது விஷ்ணு மாயையாக, பேருண்மையை திரையிட்டிருக்கும் உண்மையாக இருக்கவேண்டும். அந்த அகண்டமான பேருண்மை இப்படித்தான் மோனத்துயிலில் ஆழ்ந்திருக்கும் போலும். அப்படியென்றால், மரணம் ஒரு முடிவல்ல. இது தடுக்கி விழுந்து மீண்டும் எழுந்திருக்கும் காட்சி. ஒரு பிறப்பிலிருந்து மறு பிறப்பிற்கு மாறும் அவசியமான வாயில். சாவித்ரியின் அசைக்கமுடியாத நம்பிக்கை பொன்வண்ண நெருப்பாக இருளையும் சூனியத்தையும் விலக்கிட, அவளைச்சுற்றியுள்ள கருமை பின்வாங்குகிறது. அறிவெனும் இரவின் உதயத்தை எதிர்க்கும் சக்திகள் களத்தைவிட்டு ஓடுகின்றன. இந்த ஸந்த்யையின் வர்ணனை மிகச்சிறப்பாக காவியத்தில் அமைந்திருக்கிறது:

தேவர்களுக்கென ஒரு புலர்காலைப்பொழுதுண்டு.
நித்திரையிலிருந்து அவரது வியத்தகு உருவங்கள் எழும்;
நீண்ட தெய்வீக இரவுகள் இளங்காலையைக்காணும்.
ஆவேசமும் பேரொளியுமாக புதிய பிறப்பு தோன்றும்.
கண்ணினுள் மாபெரும் காட்சிகள் விரியும்.
ஆகாசத்தின் மயங்கிய கண்களை தேவதூதர்களது
திருப்பள்ளியெழுச்சி கானம் விழித்திடச்செய்யும்.

இது மிக, மிக வரவேற்கவேண்டிய மாற்றம். கருங்கும்மெனும் இருட்டினிலே, வழிதெரியாமல், தன்னம்பிக்கையே துணையாகச்செல்லும் சாவித்ரிக்கு இது ஒரு வரப்பிரசாதம். இம்மாறுதல் காரணமாக என்னவென்று புரியாத ஒரு ஆனந்தத்தில் அவள் சிலிர்க்கிறாள். இப்புதிய நேரத்தில் தன்னையுமறியாமல் அவளது உடல் செல்வதை

அவள் தடுக்கவில்லை. வேதங்களில் நமக்கு நம்பிக்கை ஒளியைத்தரும் வர்ணனைகள் உண்டு. ஸ்ரீ அரவிந்தரின் வர்ணனை அவற்றை ஒத்திருக்கிறது.

தொலைவில், ஆகாயத்தில் மினுமினுக்கும் இறகுகள்;
வெளிரிய கற்பனைகள் போல் பறவைகள் சிறகடித்தன.
ஆசையை ஒலிக்கும் மெல்லிய குரல்களுடன்
கேட்போர் விழையும் அரைகுறை செய்திகளாக
பறவைகள் வெளிரிய கற்பனைகள் போல் பறந்தன.
சூரியதேவனின் ஒளிவீசும் பசுக்கள் கூட்டம்
பனிப்படலத்தில் மறைந்து ஆதவனை நோக்கிச்சென்றன.

சாவித்ரி முன்னேறும்போது மெல்ல மெல்ல சுற்றுச்சூழல் தெளிவாக ஆரம்பித்தது. ஓர் ஆச்சரியமான விஷயம். மரணதேவன் கூட இருப்பதே ஒரு விதத்தில் சவுகரியமாக இருக்கிறது. அவனது கருமையான உருவம் இருப்பதால், அவளைச்சுற்றியுள்ள ஒளி பளிச்சென்று இருக்கிறது. நம்பிக்கை முழுமலர்ச்சி பெறுவது எளிதாக இருக்கிறது.

மனத்திற்கு உருவம் கொடுத்ததுபோன்ற இந்த அழகின்
வியத்தகு கிரணங்கள் சத்தியவானுக்கு உடையானது.
அந்த அழகின் கவர்ச்சிக்கு மையம் அவன் எனும்படி
அவளது ஆர்வமிகு கனவுகளின் அழகின்பமாக,
ஆன்மாவின் கற்பனைகளது தலைவனாகத் தோன்றினான்.
மரணதேவனின் அஞ்சத்தக்க கம்பீரமான முகம்,
அதன் மங்கலான துயரச்சாயைகூட அவ்வானின்
புரிபடாத ஒளியினை தொடவோ, அழிக்கவோ முடியவில்லை.

தியாகராஜ சுவாமிகள் இதையே கபடமௌ மாடலெல்ல கம்மனைனதி என்று பாடுவார். கபடமான, இழிவான சொற்கள் கூட அவர் காதிற்கு இனிமையாகிவிட்டன, ஏனென்றால் ஹரியைத்தவிர அவரது மனம் எதையும் நினைப்பதில்லையே. நாம் நம்பிக்கையுடன் இசைக்கும் இறைவனின் நாமம் துயரத்தையும் மகிழ்ச்சியாக மாற்றும் குணமுடைத்து அல்லவோ? இனிமையான இந்த அனுபவத்திலும் அவளது ஆன்மா விழிப்புடன் இருக்கிறது. சுகானுபவத்தில் உறங்கிவிடவில்லை. இந்த

அனுபவத்தையும் தாண்டி அவளது ஆன்மா தான் ஏற்ற இலக்கையே நோக்கி, மாற்றமடையாத தாரகை போல் ஒளிர்கிறது.

சாவித்ரி மரணதேவன் பின்னே சென்று சத்தியவானை மீட்க முயலும் இச்சமயத்தில், மரணதேவனும் விடுவதாக இல்லை. அவளது மனத்தில் சந்தேகத்தின் விதைகளைத் தூவுவதற்கு முனைகிறான். ஏனம்மா, இந்த இடத்தைப்பார்த்தால் உலக வாழ்க்கை போல இருக்கிறதே! கனவுலகமே வாழ்க்கை! கல்யாண சமையல் சாதம், காய்கறிகளும் பிரமாதம் என்று சொப்பன வாழ்க்கை! இலட்சியம், அன்பு, மரணமில்லா பெருவாழ்வு என்பதெல்லாம் வெறும் பேச்சு!

நீ அன்பெனக்கூறும் உன் உடலில் இருக்கும் இத்தேவதை
உன் எண்ணங்களால் வண்ணமிகு இறகுகள் செப்பமிட்டு
உனது உடலெனும் குழப்பத்தில் தோன்றியது.
அதை வைத்திருந்த உடலுடன் அதுவும் மாயும்.
அது உனது உடலில் தோன்றும் காமம்,
உடலுடன் உடல் உறவாட அழைக்கும் ஆசை.
உன் மனம் தான் கேள்விக்கு பதில் தேடுகிறது.
தனக்குத்துணைவன் கிடைத்தான் என்று கனவு காண்கிறது.
வாழ்வில் தனிமையைத் தவிர்க்க, மற்றொரு உயிர்மூலம்
தனது பசியைத்தணிக்க, உன் உயிர் தான்
மனித உருவில் துணை வேண்டுகிறது.

இப்படி மரணதேவன் விதவிதமாக வாதம் புரிகிறான். நாம் நமது வாழ்க்கையில் காணும் காட்சிதான். திடீரென்று ஒரு மரணம் சம்பவிக்கும்போது, அதை எதிர்கொள்ளத் திறனின்றி, நம்மை நாமே கேட்டுக்கொள்ளும் கேள்விகளும் சமாதானங்களும் இப்படித்தான் இருக்கின்றன. எல்லாமே பொருளற்ற, பகல்கனவாகத் தோன்றுவதில் வியப்பில்லைதானே! வெறும் பேச்சு! இறைவனின் பெயரைச்சொல்லி என்ன பயன்? இறைவன் என்று ஒருவன் இருக்கிறானா என்ன? மாறி மாறி வரும் காலம் எனும் பாசத்தால் கட்டப்பட்டு உழலும் மனிதனிடம் இறைவனுக்கு ஒதுக்குவதற்காக இடம் எங்கே? இறைவன் புவியில் அவதரிக்கிறான் என்று சொல்வதெல்லாம் கட்டுக்கதையே ஒழிய வேறில்லை. சரி அப்படி வந்திருந்தால், அவர்களால் ஏதேனும் சாதிக்க முடிந்ததோ? இல்லையே! அவர்களுக்காக நிலையான

ஓர் இடம் கூட அமையவில்லையே! ஏன்? மனிதன் அவர்களை விரட்டிவிட்டான் !

அவதாரங்கள் வந்து மடிந்ததும் வீண்.
ரிஷியின் ஞானம், பேரறிவாளன் குரல்,
சொர்க்கம் நோக்கும் நெறி, யாவும் வீண்.
சுழலும் சூரியன் கீழ் புவி மாறவில்லை.
அவளது வீழ்ச்சியையே அவள் விரும்புகிறாள்!
ஒரு சக்தியும் மானுட நலிவுகளை மாற்றமுடியாது.
மனிதனது கோணல் அறியாமையை மாற்றி
சொர்க்கத்தின் நேர்வழியினை செதுக்கமுடியாது.
மரண-உலகில் தெய்வங்களை குடியேற்றமுடியாது.

மனிதன் மாறமாட்டான். அவனிடம் மாறவேண்டும் எனும் துடிப்பு இல்லை. அது சரி, சாவித்ரி சத்தியவானிடம் கொண்டுள்ள அன்பு என்ன அமரத்துவம் பெற்றதா? உடல்களது ஈர்ப்பினை அன்பு என்றும் தெய்வீகக் காதல் என்றும் அவள் நினைத்துவிட்டாள் போலும்! இந்த உடல்களது பிணைப்பு இளமையில்தான் இனிமை போல தோன்றும். முதுமையில் இதுபோலவே சாவித்ரிக்கு சத்தியவானிடம் உண்டான அன்பு நிலைத்திருக்குமா? ஏன், அவள் கூட தளர்ந்து, ஆர்வங்கள் பொசுங்கிப்போன நிலையில் இருப்பாள். இதுவே காலம் செய்யும் கோலம். மரணதேவன் மிகவும் நிச்சயமாக சத்தியவானின் சாவும் சாவித்ரிக்கு நல்லதே என்று கூறுகிறான்! முதுமையடைந்த சத்தியவானை அவள் பார்த்து வருந்த வேண்டியதில்லையே! அதனால் சத்தியவானின் மரணத்திற்காக புலம்ப வேண்டியதில்லை. ஏதோ சில நாட்கள் வருந்திய பின், புதிய காதல், புதிய ஆர்வம் தோன்றும். இதுவே வாழ்க்கையின் நெறி. சத்தியவானுடன் நீண்ட நாள் பிணைப்பு என்பது துயரம் நிறைந்ததாக இருக்கலாம். காலம் அன்பைக் கொன்றுவிடுகிறதல்லவா?

"ஆன்மீக பூமிபோன்றதோர் இடத்தில்
தெய்வீக சக்திகள், மக்கள் ஒன்று கூடும்
சேர்த்திக்கான விதைகளை விதைத்ததால்
இருவர் சேர்ந்து இனிமை இன்றி உழல்கின்றனர்.
ஒரு முடிச்சில் இரண்டு அகங்காரங்கள்!

எண்ணங்களால் வேறுபட்ட இரு உள்ளங்கள் !
என்றும் வேறுபட்ட, இரண்டு வேற்று ஆன்மாக்கள்.
மனிதஉலகத்தின் பொய்மை இலட்சியம் இது.
சிறிய காரணமோ, பெரிதோ, ஏமாற்றமே மிச்சம்.
வாழ்க்கையின் கொடுமையான உண்மை
ஆன்மாவை நோக்குகிறது.”

அதனால் சத்தியவானின் உயிரைவாங்கி, மரணதேவன் அந்த இளம் தம்பதியருக்கு நன்மை அல்லவா செய்திருக்கிறான்! ஆகா! எப்படிப்பட்ட குணவான் இந்த மரணதேவன் ! மூச்சுவிடாமல் பேசிக்கொண்டு போன மரணதேவனை சாவித்ரியின் குரல் நிறுத்துகிறது.

உனது குரலால் என் ஆன்மாவை அழிக்க முயலவேண்டாம்.
எனது அன்பு இதயத்தின் தாகம் அல்ல;
எனது காதல் உடல் உறவுக்காக ஆசைப்படவில்லை.
அது இறைவனிடமிருந்து வந்தது; இறைவனிடமே மீளும்.

சாவித்ரி ரத்தினச்சுருக்கமாகச் சொல்லவேண்டியதை சொல்லிவிட்டாள். புவியில் இலட்சியக் காதல் இருக்கமுடியாது என்பது வெறும் பேத்தல். பிருந்தாவனத்தின் கோபிகைகளைப்பற்றிக் கேள்விப்படவில்லையா? கண்ணன் மீண்டும் மீண்டும் இவ்வுலகில் அவதரித்தவாறு இருக்கிறான். சாவித்ரியைப் பொருத்தவரை, கண்ணனே சத்தியவானாக இப்பொழுது அவதரித்திருக்கிறான்.

மரணதேவனுக்கு கோபம் வருகிறது. எல்லாம் மனம் செய்யும் வித்தை! தன்னைத்தானே ஏமாற்றிக்கொள்ளும் விளையாட்டு! உலகில் பிறந்தவர்கள் மீண்டும் மண்ணாகவேண்டியவர்களே! நான் மரணதேவன்! அளப்பறிய அகங்காரத்தின் உருவமாக சாவு எனும் அவ்வுருவம் சொல்கிறது;

"ஏன், நீயும், உன் செய்கையும் கனவுதானே?
உன் மனமும் வாழ்வும் பருப்பொருளின் வித்தைகளே!”

மரணதேவன் சொல்லிவிட்டான்! இனி மேலே பேச என்ன இருக்கிறது? பருப்பொருளைப்பற்றிப்பேசிய மரணதேவன் அதை அடுத்த

பொருள்களை விளக்கவில்லையே! சாவித்ரி அவனுக்கு ஒரு பாடம் சொல்லிக் கொடுக்கத் தொடங்குகிறாள். வாழ்க்கை என்பது அழிவது தான், மாறுவதுதான். சாவதும் இயற்கையின் நிச்சயமான நிகழ்வுதான். அதே சமயம், பருப்பொருளிலிருந்து வாழ்க்கை மேல் நோக்கிப் புதிய பரிணாமங்கள் அடைவதை மறுக்கமுடியாதே! இது உலகெங்கும் சுழலும் சைதன்னியம் ஏற்றுள்ள பயணம். ஏதுமற்ற இடத்திலே, ஓர் ஆன்மா வந்து, பல்லாயிரமாக புஷ்பித்தது. சித்தினை அசித்துடன் இணைத்துள்ள இந்த சிருஷ்டியைப்பார்க்கும்போது, இல்லாமை என்பதிலிருந்து இது தோன்றியதாக நம்பமுடியுமா? இல்லாமையில் இருந்த பொருள் என்ன? அப்பொருளே சிருஷ்டிக்கும் விசை என்றால், அது மேன்மேலும் உயர்ந்த பரிணாமங்களைத் தோற்றுவிக்கும் என்று நாம் ஆசைப்படலாமே! சாவித்ரி அற்புதமாகப்பேசுகிறாள்:

மனிதனது ஆன்மாவை மறைக்கும் திரை ஊடே
தெய்வீகமனிதன் மனப்பலகணி வழியே நோக்குகிறான்.
அறியவொண்ணாததை அவன் கண்டுவிட்டான்.
முகத்திரை இல்லாத உண்மையினைப்பார்த்துவிட்டான்.
அழிவற்ற சூரியகிரணம் அவனைத்தீண்டிவிட்டது.
அசைவற்று, ஆழங்களில் ஓசையின்றி
தெய்வீக இயற்கையின் வெளிச்சத்தில் விழித்தவாறு
மேன்மையான இறக்கைகள் எழுவதைக்கண்ணுற்றான்.
இறைவனின் உயர்ந்த ஆற்றல்கள் இழிவதைக்கண்டான்.

சிருஷ்டி இப்படித் தெளிவாக இருக்கும்போது, மரணதேவன் ஏன் இப்படிப் பேசவேண்டும்? அதற்கும் காரணம் இருக்கிறது. இன்னும் முழுமை பெறாத சிருஷ்டியைத்தான் அவன் கண்டிருக்கிறான். சிருஷ்டி இன்னும் முடிவடையவில்லை. அது மேல் நோக்கி, உயர்ந்த பரிணாமங்களைப் பெறவேண்டியுள்ளது. ஆலத்தின் சிறு பழத்தொருவிதைதான் ஆலமரமாக வளர்வது அவன் அறியானோ? வளர்ச்சி அடைவது ஒரு கணத்தில் நிகழ்வதல்ல. ஒரு பொட்டு வீரியம் மாவீரன் அலெக்ஸாண்டராகவோ, மஹரிஷியான வியாசராகவோ உருப்பெறுவதைக் காண்கிறோம். பிரகிருதியெனப்படும் இயற்கை இருக்கும்வரை இறைவனான புருஷன் இருப்பான்.

"பொன் வண்ண ஒளிர் திங்கள் அவன் காட்டும் மேன்மை;
சிவந்த வானத்தின் மேன்மையும் அவன் காணும் கனவு.
சுழலும் தாரகைகள் அவன் மேன்மையின் அணிவகுப்பு.
பசுமையான மரங்களிலவனது அழகின் சிரிப்பு.
மலர்களில் அவனது அழகின் மணித்துளிகள் காண்போம்.
நீலக்கடல் பாடும் பண், ஓடைகளில் சிலிர்க்கும் குரலோசை
அனைத்தும் இறைவனது வீணையின் ரீங்காரம்.
இவ்வுலகமே இறைவனது புறத்தோற்றம்."

ஸ்ரீ அரவிந்தரின் இவ்வரிகளைப் படிக்கும்போது உலகின் பெரும் கவிகளது பாடல்கள் நினைவுக்கு வராமல் போகாது. பாரதியார் பாடுகிறார் கேட்போம்:

"போற்றி உலகொரு மூன்றையும் புணர்ப்பாய் !
மாற்றுவாய், துடைப்பாய், வளர்ப்பாய், காப்பாய் !
கனியிலே சுவையும், காற்றிலே இயக்கமும்
கலந்தாற்போல் நீ அனைத்திலும் கலந்தாய்,
உலகெலாந் தானாய் ஒளிர்வாய், போற்றி!"

இந்த அற்புதமான சிருஷ்டியில் சில களங்கங்கள் இருப்பதை சாவித்ரி மறுக்கவில்லை. ஒளியை வெளிப்பட விடாமல் தடுக்கும் தீய சக்திகள் உள்ளன. நன்மைக்கும் தீமைக்கும் நடுவே போர் நடந்தபடி இருக்கிறது. அன்புடன் வெறுப்பும், வாழ்க்கையுடன் மரணமும் போர் நடத்துகின்றன. ஏதேனும் நல்லது நடக்கவிருந்தால், உடனே அதைக் கெட்ட சக்திகள் தடுக்கின்றன. இறைவனை அன்பின் வடிவாகக்காண்பது ஒரு வழக்கம். இறைவனை அடைய தந்திர யோகம் காட்டும் அற்புதமான அதே காதல், காமமாக மாறி, இறை நம்பிக்கையையே தகர்த்துவிடுகிறது. ஆயினும் மனிதனின் சைதன்னியம் மேல்நோக்கி, உயர் நிலைகளைத் தேடிச் செல்வதும் நிற்கவில்லை.

நமது ஆன்மாக்கள் நீலமணி சொர்க்கம் போன்ற
ரகசியமானதொரு தூய காற்றுமண்டலத்தை சுவாசிக்கின்றன.
நமது இதயங்கள், உடல்கள் அதன் மௌன அழைப்பை
உணர்கின்றன; நமது புலன்கள் அதைத்தீண்டிட

சுற்றியும் தடவிப்பார்க்கின்றன. இது பின்வாங்கினால்
இவ்வுலகம் சூனியத்தில் முழுகிவிடும்.
இது இல்லையேல் யாவும் சலனமற்று, செத்து விடும்.
அனைத்திலும் ஒரு பேரானந்தம் ஒளிந்திருக்கிறது."

ஆனந்தமே இந்த உந்துதலுக்குக் காரணம். ஆனந்தமே இறைவனின் இயற்கை. ஆனந்தமே சிருஷ்டிக்கிறது. சிறந்த உஷத்காலத்தை எதிர்பார்க்கிறது, மண்ணில் விண்ணினைக்காண விழைகிறது. சிருஷ்டியினுள்ளே மறைந்துள்ள இந்த ஆனந்தம் காரணமாக மரணத்திற்கு வெற்றி கிட்டுவதில்லை. மரணமே! உனக்கு கர்வம் வேண்டாம்! சாவித்ரியும் சத்தியவானும் அன்பு மூலம் மண்ணை விண்ணாக்க வந்த இணையர் என்பதறிவாய்! என்றெல்லாம் காவியத்தலைவி கூறுகிறாள்:

அன்பே மண்ணையும் விண்ணையும் இணைக்கும் கண்ணி
அன்பே அறியவொண்ணாதது இங்கு அனுப்பிய தேவதை
அன்பே மனிதனுக்கு இறைவனிடம் உள்ள பற்றுரிமை.

சாவித்ரியின் நீண்ட பொழிவில் ஒவ்வொரு வரியும் சாதகர்கள் படித்து, சிந்தித்து, தியானித்துப் பயன் பெறவேண்டிய மாணிக்கப் பரல்கள். மரண தேவன் இன்னும் சோர்வடையவில்லை. வருங்கால சொர்க்கம் எல்லாம் கற்பனைதான் என்கிறான். இதெல்லாம் ஆன்மிகப்பித்து! மனிதன் மனிதன் தான், மண்ணாக வேண்டியதுதான். சாவித்ரிக்கும் அந்த கதிதான். சாவித்ரி அதை மறுக்கவில்லை. மின்னல் வீச்சாக அவளது பதில் வருகிறது:

"ஆம், நான் மானுட சாதி. ஆனால் மானுடத்தில்
தெய்வம் இருப்பதால், என் மூலம் மனிதன்
உன்னைக்கீழே தள்ளி, மிதித்து, உயர்நிலைகளை
எய்துவான்; துயரம், நோவு, விதி சாவு அனைத்திலிருந்தும்
விடுதலை பெறுவான்."

மனிதன் பருப்பொருளால் ஆனவன், அழிவான் என்று மரணதேவன் கூவுகிறான். மனிதனும் தெய்வமும் என்றுமே ஜோடி சேராது! சாவித்ரி தனது இதயம் மரணத்தைவிட வலியது என்று பதிலளிக்கிறாள்.

அப்படியானால் உன் சக்தியைக் காட்டு என்று மரணதேவன் அதட்டுகிறான். ஆனால் இப்பெண் சாதாரணமானவளல்ல என்று அவனுக்குத் தெரிகிறது. இந்த ஸந்த்யையில் சாவித்ரியே பயணத்தில் முன்னிலை வகிப்பதை உணர்கிறான்.

அனைவரும் ஈர்ப்பினால் உந்தப்பட்டுச்சென்றனர்.
ஆனால் அங்கே ஒரு மாறுதலும் வந்தது.
மானுடத்தின் தலைமையை தேவனும் ஆன்மாவும்
ஏற்றனர். பின் வந்த அவளே தலைவி.
முன்செல்வோர் அவளது ஆணைவழி போயினர்.

நாம் தினந்தோறும் சாவுகளைப் பார்த்தவாறு இருக்கிறோம். அதுவும் தொலைக்காட்சிப்பெட்டியைத் திறந்தால் இங்கே பூகம்பம், அங்கே விபத்து, வேறெங்கோ தீவிரவாதிகள் தாக்கு என்று கொத்துக் கொத்தாக மரணங்கள் நிகழ்வதைப் பார்த்துக்கொண்டே இருப்பதால் மரணதேவன் கூறுவதெல்லாம் நமக்கு நன்றாகவே புரிகிறது. அதைவிட நம்மைக் கவர்வது சாவித்ரியின் தூய, ஒளிபாய்ச்சும் தன்னம்பிக்கைதான். நமது கற்பனையின் விரிப்பான மாயைதான் இந்த சிருஷ்டி என்று மரணதேவன் கூறுவதெல்லாம் சாவித்ரியை சிறிதுகூட அசைக்கவில்லை என்பது நமக்கு தைரியம் தருகிறது.

இந்த உலக வாழ்வு கற்பனையின் வளம் தவிர வேறில்லை எனும் வாதத்தை சாவித்ரி ஏற்கவில்லை. நாம் உண்மை என நினைக்கும் வாழ்க்கை வெறும் மாயை என்று மரணதேவன் வேறு தொனியில் பேச ஆரம்பிக்கிறான். நம்பிக்கையின்மையே உருவம் கொண்டதுபோன்ற பிரதேசத்தில் அவர்கள் இப்பொழுது பயணிக்கின்றனர். எவ்வளவோ மனித குலம் செய்கிறது. முடிவில் அனைத்துமே அழிந்துதானே போகிறது! இதைக்காரணம் காட்டுவது அக்கொடிய தேவனுக்கு எளிதாகிவிடுகிறது:

அன்பை மறந்து, சத்தியவானை மறந்து,
அவனது அசைவற்ற அமைதியில் ஆழ்ந்துவிடு.
ஓ ஆன்மாவே, அவனது அசைவற்ற பேரின்பத்தில் மூழ்கு.
இறைவனுக்கு சமமாகவேண்டுமெனில், நீ சாகவேண்டும்.
மரணதேவன் நானே அமரத்துவத்தின் தோரணவாயில்."

சாவித்ரி சொல்கிறாள். கடவுளால் படைக்கப்பட்ட இந்த உலகம் தவறாக உச்சரிக்கப்படும் மொழியாக இருப்பினும், அதைப்பொய்யான சிருஷ்டி என்று தள்ளிவிடமுடியாது. இவ்வுலகம் மாயை அல்ல. மரணதேவனுக்குக்கூட புரியும்படி எளிய வழியில் பரிணாம சிருஷ்டியை விளக்குகிறாள். இவ்வளவு தூரம் வளர்ந்த மானுடம் மேலும் வளர்ந்து உயரும் என்பதில் சந்தேகமென்ன?

பொருளற்ற சூனியத்திலிருந்து படைப்பு எழுமானால்,
ஓர் உடலற்ற சக்தியிலிருந்து பருப்பொருள் தோன்றுமானால்,
உணர்வற்ற மரத்தில் உயிர் மேலெழும்பி,
மரகத இலைகளாக பசுமையான மகிழ்ச்சி விரிந்து
அழகின் சிரிப்பு அதனுடைய மலரில் சிதறுமானால்,
நரம்புகளிலும் உயிரணுக்களிலும் புலன்கள் விழிப்புற்றால்,
மூளையிலுள்ள பருப்பொருளை சிந்தனை ஏற்குமானால்,
சதை வழியே ஆன்மா எட்டிப்பார்க்குமானால்,
அற்புத பேரொளி ஏன் மனிதன் மேல் தாவாது?
இயற்கையின் தூக்கத்திலிருந்து
ஆச்சரியமான ஆற்றல்கள் விழிப்புறாது?

ஒரு கணம் திணறிய மரணதேவன் சுதாகரித்துக்கொண்டு மேலும் சொல்வான். சாவித்ரி தன்னைத் தியாகம் செய்துகொள்ளுமளவு இன்றைய மனிதன் உயர்ந்தவனல்ல. இறைவன் மனிதனுக்காக ஏற்படுத்தியுள்ள கட்டினை அவள் ஏன் முறிக்க வேண்டும்? இப்படியொரு புரட்சி அனைவருக்கும் தீங்காக முடியக்கூடும்.

உன் ஆற்றல்களை அசுரர் போல் உபயோகிக்காதே.
வகுக்கப்பட்ட கோடுகளை, சட்டங்களைத் தீண்டாதே.
நிறுவப்பட்ட மேலான விஷயங்களுக்கு மரியாதை செய்.

இப்படி எதிர்ப்பு என்பது இல்லாமல் இருந்தால் பரிணாம வளர்ச்சியே இருக்காது என்று சாவித்ரி பதில் கூறுகிறாள். பருப்பொருளைப்போல் ஜடமாக மனிதன் கட்டுப்பட்டு இருக்கக்கூடாது. மரணதேவன் இறுதியாக ஒரு நிலை ஏற்கிறான். மனிதனுக்கு உயர்நிலைகளை எட்டும் ஆர்வம் இருந்து என்ன பயன்? அவன் மிருகமாகத்தானே இருக்கிறான்!

பேருண்மைக்கு உயிர்ப்புடன் கூடிய உருவம் இருக்கிறதா என்ன? ஒரு வேளை சாவித்ரியே அவ்வுருவமோ என்று சிறிது எகத்தாளமாகக் கேட்கிறான்.

"அந்த மெய்யுணர்வு உனது இதயத்தில் இருந்தால்
மெய்யான அந்த உண்மையின் உடலை எனக்குக்காட்டு.
அல்லது அவளது முகத்தினை படமாக வரைந்துவிடு.
அவளுக்கு நானும் கீழ்ப்படிந்து வழிபடுவேன்.
உனக்கு சத்தியவானைக்கொடுத்துவிடுகிறேன்.
ஆனால் இங்கு இருப்பதெல்லாம் ஒரே உண்மை.
அது ஓர் இரும்புச்சட்டம். எனக்குதெரிந்த உண்மை
சத்தியவான் செத்துவிட்டான் என்பதே.
உனது இனிமை ஏதும் அவனை மீட்காது."

இதற்கு சாவித்ரியின் பதில் காட்டமாக வருகிறது. முதலைக்கும் மூர்க்கனுக்கும் அறிவு வழி தெரியுமா? மரணதேவனும் இறைவனின் ஒளிக்கு மறுபக்கம் என்பது தனக்குத் தெரியும் என்கிறாள். இறை நம்பிக்கையின் அவசியத்தை இங்கு ஸ்ரீ அரவிந்தர் விவரமாகச் சொல்லி இருக்கிறார். மண்ணை விண்ணாக மாற்றியமைக்க நம்பிக்கை வேண்டும். மரணம் கூட இறைவனின் ஒரு பங்குதான். மரணமதை வெல்ல இந்த அறிவே போதும். மரணதேவன் கோபமாகப்பேசுகிறான். சாவித்ரி மானுடப்பெண். ஆயினும் மனிதனிடம் புதிய உலகம் படைக்கும் ஆற்றல்கள் இருப்பதாகக்கூறுவது அபத்தம் அன்றோ? இதெல்லாம் வெற்றுப் பேச்சு தானே! அல்லது மனிதனிடம் மேலான ஆற்றல்கள் இருப்பதாக அவளால் காட்டமுடியுமோ? "காலத்தையும் மரணத்தையும் வெற்றிகொள்ளும் உன் சக்தி எங்கே?"

இனி பேச்செதற்கு? செய்கைக்கான முகூர்த்தம் வந்துவிட்டது. ஸ்ரீ அரவிந்தர் சாவித்ரியை பேருண்மையின் பேருருவாக, ஒளிப்பிழம்பாக, இறைவனின் உலகங்களைக்கடந்து செல்லும் திரிவிக்கிரமாவதாரமாக காட்டுகிறார். அரசிளங்குமரி, சத்தியவானின் இளம் மனைவி. அகண்டத்தின் சிறியதொரு உருவாக இருந்த சாவித்ரி இப்பொழுது அவதாரமாக ஒளிர்கிறாள்.

அவளது நெற்றி அனைத்துணர்வின் பார்வையாக,
அவளது இரு கண்கள் அண்டத்தைக் காணும் தாரகைகளாயின.
அவளது சிரஸில் இருந்து ஆண்ட ஆற்றல்
தாமரை போன்ற மறைவில் இருந்த ஆளுமை,
கீழிறங்கி, அவளது புருவங்கள் நடுவே அமர்ந்தது.
மனத்தின் தலைவனது கண்காணிப்பு இடம் இதுவே.
இங்கு அவன் இயற்கையாக தியானத்தில் கூடி
மனிதனின் மூன்றாவது தெய்வீகக்கண்ணைத்திறக்கிறான்."

இப்பேரொளிப்பிழம்பிலிருந்து மரணதேவன் தன்னைக் காப்பாற்றிக்-கொள்ளும் முன்பாகவே ஒளி அவனை விழுங்கிவிடுகிறது. தோல்வியடைந்த அவன் சூனியத்திற்குள் ஓடி மறைகிறான். "சத்தியவானும் சாவித்ரியும் தனிமையில் இருந்தனர்."

# 12. தேயாத பகல்

என்ன சுகானுபவம்! சாவித்ரியின் விரதம், தவம், தூய வாழ்க்கை என எதுவுமே வீண்போகாமல் சத்தியவான் உயிர்பெற்றான். நமக்கினி பயமேது? ஆனால்ஸ்ரீ அரவிந்தரின் காவியம் காட்டுவது இந்த இனிய முடிவு மட்டுமல்ல. மனிதனது அனுபவத்தைத் தாண்டியதான மரணதேவனின் இருண்ட உருவம், இருள் மண்டிய பிரதேசம் முதலியவற்றை நேருக்குநேர் சந்தித்தோம். சாவித்ரிக்கு நம்பிக்கை ஊட்டிய ஒளிமிகு பிரதேசங்களை நாம் காணவேண்டாவோ? சத்தியவானிடம் கொண்டுள்ள அன்பு மாத்திரமல்ல, மனித சமுதாயத்தினிடம் சாவித்ரி கொண்டுள்ள தாயன்பு பற்றி நாம் புரிந்துகொள்ள ஸ்ரீ அரவிந்தர் நம்மை இறைவனின் அதிமானஸ உலகங்களுக்கு அழைத்துச்செல்கிறார். இந்த அற்புத உலகில் சாவித்ரி நடந்துகொள்வது நமக்கு ஆச்சரியமாக இருக்கிறது. மரணதேவனிடம் உனது சாவோலை வேண்டாம் என்று மறுத்த சாவித்ரி, இறைவனிடம் உமது அமரநிலையும் வேண்டாம் என்கிறாள். ஏன்? காரணம் அவளது தாயன்பு. தன் குழந்தைகள் முன்னுக்கு வருவதற்காகப் பாடுபடும் தாய் அவர்களைக் கைவிடுவாளா? தான் மாத்திரம் சுகமாக எங்கோ வாழ்வதை ஏற்பாளா?

மரணதேவன் தோற்றோடிப்போனான்:

"உலகினுக்கு இடர்செய்யும் கருநிழல் மறைந்தது.
தான் தோன்றிய சூனியத்திலேயே வீழ்ந்தழிந்தது.
தான் செய்யவந்தது பயனடையாததுபோல்
ஸந்த்யை அவர்களது ஆன்மாக்களிலிருந்து மறைந்தது.
சத்தியவானும் சாவித்ரியும் தனிமையில் இருந்தனர்.
இருவரும் அசையவில்லை. அவர்கள் இருவர் நடுவே
மெல்லியதொரு, கண்ணாடிபோன்ற சுவர் எழும்பியது.
வெறுமையாக நீண்ட அந்த கணத்திலே ஒன்றும் அசையவில்லை.
அறியவொண்ணாததின் எண்ணத்திற்காக காத்திருந்தனர்."

காவியத்தின் பதினொன்றாவது பர்வத்தின் முதல் வரி, தேயாத பகல் தேசத்தினை நமக்கு அறிவிக்கிறது. "அற்புதமான ஆதவன் ஆனந்தத்தின் ஆகாயத்திலிருந்து கீழே நோக்கினான்." நமது மனங்களில் இதுவரை தேங்கிய துக்கம், வருத்தம், வலி, நோய், சாவு அனைத்துமே மறைகின்றன. ஆயினும் சாவித்ரிக்கும் சத்தியவானுக்கும் இடையே, அவர்களைப் பிரிக்கும் கண்ணாடியாக ஒரு திரை இருக்கிறது. மரணதேவன் சென்றுவிட்டான், சத்தியவான் சடாரென்று எழுந்து விட்டான் என்று நாடகத்தனமாக ஏதும் நடக்கவில்லை. சாவித்ரியுடன் நமது பயணம் இன்னும் இருக்கிறது.

தேயாத பகல் எனும் பர்வத்தில் தான் சாவித்ரிக்கு வெகு முக்கியமாக, கடுமையான சவால் காத்திருக்கிறது. வாழ்க்கையில் சவால்கள் பல விதங்களாக நம்மைத் தாக்குவது உண்டு. கடுமையான பரீட்சைகள், தண்டனைகள், தோல்விகள், எதிர்ப்புகள் போன்றவற்றைக்கூட சமாளித்துவிடலாம். ஆனால் கவர்ச்சி, ஆசை மூலம் தூண்டப்படும்போது சமாளிப்பது எளிதல்ல. நாம் எதிர்பாராத சமயத்தில் ஓர் ஆசையினால் உந்தப்பட்டு நம்மை இழக்கும் சந்தர்ப்பங்கள் அனேகம் உண்டு. அது போன்ற தூண்டுதல்களை சாவித்ரி சமாளித்து, தனது இலட்சியத்திலேயே குறியாக இருந்து சத்தியவானுடன் உலகினுக்கு மீண்டு வரும் காட்சியை அதி அற்புதமாக ஸ்ரீஅரவிந்தர் காவியத்தில் தந்திருக்கிறார். இறைவன் செங்கோலோச்சும் பரமபதத்தை அவரது வர்ணனையில் படிக்கும்போது நாம் மெய்மறந்து போகிறோம். தேயாத பகல் நமக்கு நம்பிக்கை தந்து, நமது கையைப்பிடித்து அன்புடன் உயர்ந்ததொரு வருங்காலத்திற்கு இட்டுச்செல்லுகிறது.

மரணதேவன் மறைந்துபோன நிலையில் சாவித்ரி ஓர் ஒளிமயமான பிரதேசத்தில் இருப்பதை உணர்கிறாள். இங்கு அனைத்துமே சுகானுபவமாக இருக்கிறது. தெய்வீகம் எங்கும் ஒளிர்கிறது. உடலும் ஆவியும் முற்றிலும் ஒருங்கிணைந்து தோற்றுவிக்கும் இன்பமயமான உலகைக்காண்கிறோம்.

"மூன்றுவகை தெய்வீக சொர்க்கத்தின்கீழ்
ஏழு மரணமிலா உலகங்கள் ஒளிர்ந்தன.
துஞ்சல், தூக்கம் என்பதிலிருந்து விடுபெற்ற
பாக்கியசாலிகள் உலகமிது; இங்கு துக்கம்,
நோவு ஏதுமில்லை. தன்னை மறந்த நிலையில்

நாம் தேடும் உலகங்களிலிருந்து வந்தவர்கள்.
சொர்க்கத்தின் மாறுதலற்ற அமைதியை,
என்றுமுள மௌனத்தை, அதன் மாறாத
ஆனந்த நிலையை மாற்றுபவர்கள்.”

இங்கே இறைவனின் யோக நித்திரைபோல் மவுனத்தில் பரந்து கிடந்த எண்ணங்களின் இறக்கைகள் சொர்க்கத்தை நோக்கி எழும்பி அமரத்துவத்தின் நீலவண்ணத்துடன் கலந்துபோவதுபோல இருக்கிறது. சிருஷ்டி அனைத்துமே தெய்வீகம் தீண்டி, சிலிர்ப்பதுபோல இருக்கிறது. இவ்வுலகங்களின் மிகக்கீழே, அடியில் உள்ள உலகம்கூட சொர்க்கம் மாதிரி இருக்கிறது. இயற்கை முழுவதுமே தேவ கீதம் இசைப்பது போலத் தோன்றுகிறது.

இயற்கையின் ஒவ்வொரு இயக்கமும் சுருதியுடன் அசைகிறது. பசுமையான கிளைகள் மேல் வானவில் வண்ணங்களில் இறக்கைகள் விரித்து அமர்ந்திருந்த பறவைகள் கற்பனையை விஞ்சிய அழகுடன் மிளிர்கின்றன. காற்றினில் வரும் கீதம் எதிர்பாராத கண்டுபிடிப்புகளை மகிழ்ச்சியுடன் ஒலிக்கிறது. மனிதனின் சைதன்னியம் இரவும் பகலுமாக, பல்லாயிரமாண்டுகளாகத் தேடும் ஆன்மிக இன்பங்களை கண்முன் காட்டுவது போல சாவித்ரிக்குத் தோன்றியது. அட, அலையெறியும் கடலின் ஓசையும், அருகிலிருக்கும் பாறாங்கல்லின் உருவமும் கூட தாளமிடுவதுபோல இருக்கிறது

அன்றாட வாழ்வில் நமது சிந்தனைகள் ஓரளவே விரிய முடியும். கற்பனைகளுக்கு ஒரு முடிவுண்டு. இறைவனை எந்த ஓர் உருவில் கண்டாலும் அருகே சென்று அணைக்கமுடியாதபடி நமது குருட்டு மனம் தடுப்பதுண்டு. அப்படிப்பட்ட தடுப்பு ஏதும் இங்கு இல்லை. இங்கு விரிந்த சுதந்திர உலகில் கட்டுப்பாடுகள் ஏதுமில்லை. அவற்றிற்கு அவசியமும் இல்லை. இயற்கை அனைத்துமே கள்ளமற்ற தூய்மையுடன் பொலிகிறது. அனந்தத்தின் ஒளியால் ஏற்றியதுபோல இவ்வுலகில் உள்ளவர்களது இதயம் விளங்கியதில் ஆச்சரியமில்லையே!

சற்று மேலே உள்ள உலகங்களை எப்படி வர்ணிப்பது! மேலுலகங்களை சாவித்ரி பார்க்கும்போது, அனைத்திற்கும் கிரீடம் போன்றதொரு உலகு தெரிகிறது. இது அழியக்கூடியதும் அழிவற்றதும் கூடும் இடம். அங்கே தெய்வீக ஆனந்தத்திற்காக வாழ்ந்து, செங்கோலோச்சும் தேவர்களின் அரியாசனங்கள் அவளுக்கு தென்பட்டன.

தேயாத ஒளியின் நடு உலகங்கள் இவை.
அழிவற்ற வரிசையில் அமர்ந்துள்ள தேவர்களது
தோற்றமில்லா கண்கள் அவளை நோக்கி
பளிங்குத்தீ வழியே பார்த்திடக் குனிந்தன.
மகிழ்ச்சியால் செய்யப்பட்ட அழகு உருவங்கள்.
ஆனந்தம் சொட்டும் இனிமையான உடல்கள்,
மனமெனும் பளிங்கினில் ஒளிர்ந்திடும் பாதங்கள்.
இவர்கள் இறைவனின் தொண்டர்கள்,
சாசுவதத்தின் மதுவைக் கோப்பைகளில் தருபவர்கள்.

இனிமையும் ஆனந்தமும் நிறைந்த ஒரு கடலில் மூழ்குவது போல உணரும் சாவித்ரிக்கு இக்கடவுளரின் தோற்றத்தின் மூலகாரணம் இப்பொழுது தெரிகிறது. இது யார்? நமது வாழ்க்கை எனும் திக்குத் தெரியாத காட்டில் நம்மை தன் வலையில் அகப்படுத்தும் மாயாவி இவனே என்று சாவித்ரிக்கு விளங்குகிறது. இந்த உலகத்தையே தனது சிறைச்சாலையாக வைத்திருக்கிறான்! மனிதன் ஆர்வமுடன் தோற்றுவிக்கும் புதிய காட்சிகளை, உலகங்களை மரணம் எனும் கருவி மூலம் அழித்துப்போடும் கருணையற்றவன் இவனல்லவோ? மனிதனது உழைப்பிற்கும் இவன் தரும் சம்பளம் துக்கமும் துயரமுமே! ஆகா! முடிவற்ற இரவாகவும் மரணதேவனாகவும் அவள் நேருக்குநேர் கண்ட தெய்வம் இதோ இனிமையே உடலாக, கோடி சூரியகாந்தியுடன் அவளது இதயத்தைத் தாக்குகிறான்! இந்த உலகில் காண்பதெல்லாம் தெய்வீகமாக இருப்பதில் மரணதேவன் கூட இப்பொழுது ஒரு இரகசிய ஜோதியாகக் காணப்படுகிறான்! அவள் முன்பு கண்ட சூனியத்தை இப்பொழுது ஒரு மாபெருஞ்ஜோதியாகக் காண்கிறாள். இயற்கை மரணமெனும் முகமூடியை எடுத்தெறிந்துவிட்டதுபோன்ற தோற்றம். இத்தெய்வத்தின் மெல்லிய சிரிப்பு அவளைத்தீண்டியது. அழகு, அற்புதம், தெய்வீகம் அனைத்துமே இவ்வுருவமோ? இது ஒரு விசுவரூபமோ! நாம் வணங்கும் கண்கள் யாவுமே இவ்வுருவத்தில் ஒளிர்கின்றனவே! இவ்வுருவத்தின் உடலெங்கும் அனைத்து தேவர்களும் காணப்படுகிறார்கள். ஆ! கடல்போன்ற ஆன்மாவும் இதுவோ?

இந்த ஜோதியிலும் நான்கு தேவசொரூபங்கள். பருப்பொருளையே தனது சொல்லாகக்கொண்டு சிருஷ்டி செய்யும் தேவதச்சனாக

சொரூபம் ஒன்று. குருதியிலே ஆன்மாவை மிதக்கவிட்டு மனிதனைப்படைக்கும் தெய்வீகப் படைப்பாளி. ராஜாதிராஜனாக விளங்கும் பிராணமய புருஷனான, விராட் புருஷனது சொரூபத்தை சாவித்ரி காண்கிறாள். இப்புருஷனுள்ளே தெரிவது ஹிரண்யகர்ப்பர். அனந்தத்தில் தோன்றும் மனோமய புருஷன். மனிதனது செவிகள் கேட்காததைக்கேட்கும், மனிதனது கண்கள் காணாததைக்காணும் தேவன். பேருண்மைகளின் பிறப்பிடம். நமது அகவாழ்வின் பாதைகளில் நம்மை நடத்திச்செல்பவன். ரகசியமாக புது உலகங்களை சிந்தனை மூலம் சிருஷ்டிப்பவன்.

பொன்போன்ற பேச்சு, வைரம் போன்ற கண்கள்,
காட்சிகள் காண்பவன், வருங்காலம் உரைப்போன்;
அருவத்திற்கு உருவம் தருபவன், பயணி,
அறிந்திராத பாதைகளைச் செதுக்குபவன்,
ரகசிய அக்கினியை ஏந்தி வருபவன்,
அற்புதத்திற்கு குரல் கொடுப்பவன்,
மறைந்திருந்து ஒளியைத் தொடர்பவன்,
புரியாத பெருமகிழ்ச்சியின் தேவதூதன்
ஆன்மாவின் ராஜ்யங்களை வெற்றிகொள்பவன்.

பின்னணியில் இவர்களது தோற்றத்தின் காரணமான ஒரு அதிமானஸ சைதன்னியம் திவ்விய ஒளியால் மூடப்பட்டிருந்தது. அனைத்தையும் அறிந்த நிலையில் யோக நித்திரையில் ஆழ்ந்திருக்கும் இப்பெருமான் விஞ்ஞானமய புருஷன். அசையாமல் வளர்ந்திடும் மரம்போன்ற சித்து செய்பவன். அவனே நாம் தோன்றிய விதை. அவனே நமக்கு ஆதி, அந்தம். அவனது மூடிய கண்களிலிருந்து வரும் ஒரு வீச்சே நாம் பெற்றுள்ள இந்த ஒளி.

அவனது மோனம் தெய்வீகச்சொற்களைக் கொண்டுவரும்.
அணுவிலும் விண்மீனிலும் கண்வளர்பவன்; மனிதனில்,
தெய்வத்தில், விலங்கினத்தில், கல்லிலும் தூங்குகிறான்.
அவன் இருப்பதால் அசேதனம் தன்தொழிலைச்செய்கிறது.
அவன் இருப்பதால் உலகங்கள் அழிவதில்லை.
இறைவனது வட்டத்தின் மையம் அவனே.

பிரகிருதியின் விளிம்பும் அவனே.
அவனது அரிதுயில் பொருட்களின் சர்வவல்லமை.
கண்விழித்தபோது அவன் அழிவற்ற, உலகநாயகன்.

அனைத்திற்கும் மேலே ஆனந்தமே உருப்பெற்ற ஆனந்தமய புருஷன். அன்பும், இனிமையும் இங்கே பின்னப்பட்டிருகின்றன. ஆகாயத்தின் பரப்பாக, துயரம் நீங்கிய உலகின் ஆர்வமாக, உலகினை நிறைத்த ஒரு சூரியனது சுவாலையாகத் தோன்றினான். ஆன்மா ஆன்மாவைப்பார்க்கும் சந்திப்பு இங்கே, இப்பொழுது நடந்தது.

சாவித்ரிக்கு ஒரு குரல் கேட்கிறது. அவளது போராட்டம் முடிந்துவிட்டதே! இங்கே இளைப்பாறிக்கொண்டு இனி சுகமாக வாழலாமே! மாற்றமில்லாத தெய்வமாக அமர்ந்துவிடலாமே! அவள் மரணமில்லா சொல் கண்ட மனித உருவாக மாறிவிட்டாள். "புஷ்பராக சுவரின் ஊடே தெய்வீக கபாடத்தின் இரு கதவுகளைக்கண்டு, விழிப்புள்ள தூக்கத்திலிருந்து தெய்வங்களை எழுப்பிவிட்டாய்" என்றெல்லாம் அக்குரல் சொல்கிறது. தேவர்கள் தேடும் ஆதிநாதன் தானே என்று கூறி, சாவித்ரியின் அகக்கண் திறந்துவிட்டதால் அவளுக்கு இந்த உலகத்தைப்பார்த்து அனுபவிக்க முடிகிறது. இனி அவள் இங்கேயே இருந்துவிடலாமே!

ஓ ஆன்மாவே! சொர்க்கமான உனது வீட்டிற்குள் வருவாயாக.
நித்தியமான தெய்வக்குழந்தை விளையாடும் அரங்கமிது.
தேவர்கள் நடமாடும் திவ்விய பூமி. உனது மணவாளனுடன்
தேயாத சூரியன் உள்ள ஆன்மிக ஆகாயத்தின் கீழே
நீ மகிழ்ச்சியுடன் சஞ்சரிப்பாயாக. உலகை கவனியாது,
இயற்கையின் சுழற்சியில் உழைத்திடாமல்
தேவர்கள் வாழ்வதுபோல் நீயும் வாழலாம்.

இந்த அறிவுரையை சாவித்ரி ஏற்கவில்லை. அவள் அனந்தமான இரவினைத்தள்ளி வெற்றிபெற்றவள். தேயாத பகல் உள்ள சொர்க்கத்தையும் அவள் வேண்டாம் என்று விடுகிறாள். சொர்க்கத்தில் தெய்வமாக இருந்து என்ன பயன்? அங்கு ஆர்வமுடன் செய்கையில் ஈடுபடுவதற்கு இலக்கு ஏதும் இல்லையே! மேலும் தரணியில் உள்ள மக்கள்

அனைவரும் அவளது குழந்தைகள் அல்லவோ? அவர்களைவிட்டு, தான் மாத்திரம் சொர்க்க இன்பம் அனுபவிக்கமுடியுமோ?

உயர்ந்த ஆன்மாக்கள் தேர்ந்த இடம் உலகமே.
பூமியே ஆன்ம வீரர்களின் போர்க்களம்.
பிரும்மா தன் படைப்புத்திறனைச் செலுத்துமிடம்.
விண்ணில் சுதந்திரமாக மேன்மைகள் அனுபவிப்பதைவிட
மண்ணில் கைங்கரியம் செய்வதே சிறந்தது.

முன்பு இரவாக, மரணமாக இருந்த இறைவன் இப்பொழுது பகலாக, உயிராக இருக்கிறான். சாவித்ரி சொல்வதில் அவனுக்கு மகிழ்ச்சியே. அவளை சுகமும் சௌகரியமும் மயக்கவில்லை. மண்ணை விண்ணாக மாற்றும் மிகக்கடினமான பணியையே விரும்புகிறாள். இவள் ஆன்ம வீராங்கனை என்பதில் இறைவனுக்கு ஆனந்தம். மீண்டும் ஆன்மிக நிலைகளை நன்கு கண்டு புரிந்துகொள்ளுமாறு கூறுகிறான். நான்கு முறை மீண்டும் மீண்டும் சாவித்ரியை சோதிக்கிறான். இப்படைப்பு வேலையற்று தோன்றவில்லைதான். இறைவன் ஏதோ ஓர் இலக்கை நோக்கிச்செல்வதற்காக உலகை சிருஷ்டித்திருக்கிறான். இன்று மனிதன் பூரண தெய்வீகம் அடையவில்லை. ஆனால் மெள்ள மெள்ள முன்னேறுவான்! முன்னேறட்டும். அவர்களைப் பொறுத்தவரையில், சோர்வற்ற, அனந்தமான நிலையில் சாவித்ரியும் சத்தியவானும் ஒருவரை ஒருவர் ஏற்று சொர்க்கத்தில் வாழலாமே! அவள் ஏற்கப்போவது அற்புதமான, சுதந்திரமான, ஆனந்தமான சொர்க்கமா, இல்லை துயரக்காடான உலகமா?

அவளோ மீண்டும் மீண்டும் உலக வாழ்க்கையையே விரும்புகிறாள். தேயாத பகல் காயும் சொர்க்கத்தைவிட இருள் நிறைந்த உலகமே அவளது புண்ணிய க்ஷேத்திரம். அவள் கேட்பதெல்லாம் ஒரு சில வரங்களே. அவற்றைப்பெற்றால் அவளால் மண்ணுலகில் தெய்வீக மாற்றம் கொண்டுவரும் முயற்சி எளிதில் நிறைவுபெறும். அவள் வேண்டுவது தெய்வீக அமைதி, ஒற்றுமை, உற்சாகசக்தி, ஆனந்தம்.

இறைவன் சாவித்ரியை ஆசீர்வதித்து அவள் கேட்ட வரங்களைத் தருகிறான். அவளது தீர்மானமான சொல்லைக்கேட்டு, மகிழ்ந்து, தெய்வத்தின் உதவி அவளுக்கு எப்பொழுதும் இருக்கும் என்று வாக்களிக்கிறான்.

உன் மனம் விரும்பும் இவனுடன் உலகினுள் சென்றிடு.
ஓ சத்தியவான்! ஓ ஒளிசிந்தும் சாவித்ரி!
முன்னைப் பழங்காலத்திற்கும் முன்பே உங்களை
இறைவனின் இரட்டைச்சக்தியாக அறியாமை நிறைந்த
உலகினுக்கு அனுப்பினேன். அனந்தத்திலிருந்து பிரிந்து,
அறியாமையில் சிறைப்பட்டு, அசேதனமாகிவிட்ட உலகினுள்
தெய்வீகத்தைப்பாய்ச்சிடவும், மனிதனை அழிவற்ற நிலைக்கு
ஏற்றம் செய்யவும் உங்களைத்தேர்ந்தேன்."

உலகினிற்கு நல்லதொரு விதி செய்திட தெய்வீக ஆற்றலுடன் செயற்படவேண்டும். அதற்கான ஆற்றல் சாவித்ரியிடம் இருக்கும். இருளிலிருந்து காலமற்ற தெய்வீக ஒளியை நோக்கிப்பயணிக்கும் மனிதனின் ஆன்மாவே சத்தியவான். இந்த அற்புத மாற்றம் நடப்பதற்கு இப்போதே விதை விதைக்க வேண்டும். அப்படியானால்தான் இத்தெய்வீகப்பயணம் சரிவரத் தொடரும். மனிதனின் வளர்ச்சிப் பரிணாமம் மனத்தைத் தாண்டிய நிலையை அடையும் நாள் உதயமாகும். மரணமும் அறியாமையும் முழுமையாக மாய்ந்துவிடும். இப்புது வாழ்விலே தெய்வீகம் அன்றாட வாழ்க்கையில் சகஜமாகக் கலந்திருக்கும்.

பருப்பொருளின் உள்ளிருந்து ஆன்மா வெளியே நோக்க,
உடலும் ஆன்மாவின் வதனத்தை வெளிக்காட்டும்.
மனிதனும் மாமனிதனும் ஒன்றிவிடுவார்கள்.
உலகம் முழுவதும் ஒற்றுமையில் இணைந்துபோகும்.

மண்ணுலக வாழ்வு தெய்வீக வாழ்வாகிவிடும் எனும் ஆசிகளுடன் இறைவனின் குரல் நிறைவு செய்கிறது. சாவித்ரியின் ஆன்மா சொர்க்கத்திலிருந்து உலகை நோக்கி இறங்கிவிடுகிறது. உடன், சத்தியவானின் ஆன்மாவையும் வசந்தகாலத்தின் இதயத்தில் மறைந்திருக்கும் மலரைப்போல அணைத்து உலகிற்குக் கொண்டுவருகிறது. இந்த இணைப்பு யோக நிலையில் நிகழ்கிறது. அவள் சத்தியவானின் ஆன்மாவுடன் உலகை நோக்கி வரும்போது உடன் துணை வரும் ஓர் உருவத்தையும் காண்கிறாள்:

ஒரு சிறுவனின் இனிமை சொட்டும் வதனம்.
கண்கள் இதுவரை கண்டிராத அழகு முகம்.
அற்புத வண்ணவீச்சுடன் மயிற்பீலி. நீலவண்ணம்
தெறிக்க, இதயத்தை அள்ளும் புன்னகை
தணியாத ஆனந்தக்கவர்ச்சியை வீசி
அவளது ஆன்மாவை அணைத்துக்கொண்டது.
அப்படியே அதன் உருவம் மாறினும், ஆளுமை
மாறவில்லை. கருமைநிறமும் பேரழகும்
இப்பெண்ணுருவமாகத் தோன்றியது.

காக்கும் கடவுளராக கண்ணனும் காளியுமன்றோ சாவித்ரியுடன் துணை வருகின்றனர்! அவள் மண்ணுலகில் கண் விழித்தபோது பூமித்தாயின் மார்பில் இருப்பதை உணர்ந்தாள்.

ஒரு சக்தி கீழே வந்தது; ஆனந்தம் அதன் வீட்டை
அடைந்தது. பரந்த உலகெங்கும்
அனந்தமான ஆனந்தம் தவழ்ந்தது.

சாவித்ரி தன் அகத்தினுள் ஏற்ற நீண்ட பயணம் முடிவடைந்தது. "காட்டினில் மரணம்" எனும் காண்டத்தின் இறுதியில் சத்தியவானும் சாவித்ரியும் இருந்த இடத்திலேயே இன்னும் இருக்கிறார்கள். சத்தியவான் இன்னும் உறங்குகிறான். சாவித்ரி தனது மிக நீண்ட, தன்னை விஞ்சிய யோகநிலையிலிருந்து கண் விழித்துப்பார்க்கிறாள்.

பூமித்தாயின் அசேதனமான, அமைதியான மார்பின்மேலிருந்தவாறு
மேலே பசுமை போர்த்த கிளைகள் தனது மயக்கும் நிலை மூலம்
அவளது தூக்கத்தை காப்பாற்றி வந்திருப்பது கண்டாள்.
இன்னும் மேலிடத்தில் நீல வண்ணப்பறவை ஒன்று
கிளைக்கு கிளை தாவி, சிறகடித்துக் கூவிற்று.
மரங்களடர்ந்த இக்காட்டின் மாய ரகசியத்தினுள்,
மரகதப்பச்சை பலகணி வழியே உற்றுப்பார்த்தபடி
மந்தமான ஆகாயத்தில் தேய்ந்துவரும் பகல்
மாலையின் அமைதிக்கு மெல்லத் திரும்பியது.

மாலைப்பொழுது வந்துவிட்டது. அவள் சத்தியவானைத் தீண்டும்போது போராட்டம் முடிந்து விட்டது, வெற்றி கிடைத்துவிட்டது என்பதை உணர்கிறாள். ஒரு சில மணித்துளிகள் அந்த அமைதியை அனுபவித்தவாறு அமர்ந்திருக்கிறாள். பிறகு சத்தியவானை அன்புடன் அணைத்துக்கொள்கிறாள். அவனது கண்கள் திறந்து சாவித்ரியின் கண்களை நோக்குகின்றன. பிரிந்தவர்கள் கூடியிருக்கும் தெய்வீக வேளையிது. இரு ஆன்மாக்கள் உடலாலும், உயிராலும் யோகநிலையில் ஒன்றியிருக்கும் காட்சி. ஸ்ரீ வேதாந்த தேசிகர் தமது கோதாஸ்துதியில் அரங்கன் எனும் ஹரிசந்தன மரமும் ஆண்டாள் எனும் கற்பகக்கொடியும் ஒன்றுசோர்ந்திருப்பதை "யோகத்ருச்யாம்" என்று வர்ணிப்பதை இங்கு நினைவு கூரவேண்டும்.

இந்த முழுமையான சேர்த்தியில் எல்லாமே இன்பமயம்! சத்தியவான் சாவித்ரியிடம் ஒரு பெருமைப்படக்கூடிய உயர்ந்த மாற்றத்தைக் காண்கிறான். இவள் தனது அருமை மனைவி சாவித்ரிதானா? அவனுக்கு மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. இந்த தெய்வீகப் பெண்மணியின் ஆன்மிகப் போராட்டத்தையும் வெற்றியையும் அவன் ஒரு சில வார்த்தைகளிலேயே வெளிப்படுத்திவிடுகிறான்:

எங்கிருந்து அன்புத்தளையால் என்னைப்பிணைத்து உன்னிடம்
மீட்டு வந்தாய்? சூரியனது சுவர்போன்ற ஒளியுள்ளவளே!
ஓ தமனிய கிரணமே, சாவித்ரி என் இன்பப் பெட்டகமே!
தெய்வமே! பெண்ணே! என் ஆன்மாவின் நிலவே!
உன்னுடன் ஓர் ஆவியைத் தொடர்ந்து
அபூர்வமான உலகுகளில் நிச்சயம் சஞ்சரித்தேன்.
இரவின் கபாடங்களை வெறுத்தொதுக்கி வந்தோம்.
நான் வானவர் ஆனந்தத்தை வேண்டாது திரும்பிவிட்டேன்.
நீ இல்லாத சொர்க்கம் நான் வேண்டேன்.

பயங்கரமான இரவின் சொரூபத்தை அவன் நேருக்கு நேர் கண்டுவிட்டான். மரணத்திற்கு எதிர்ப்பே இல்லை என்றவாறு இந்த இரவு அவர்கள் இருவரையும் விழுங்கமுயன்றது. சூனியமே உண்மை என்று கொக்கரித்தது. இதெல்லாம் நிஜமாக இருக்குமா? வெற்றுக் கனவுதானோ? சாவித்ரியிடமிருந்து சுருக்கமாக சமாதானம் வருகிறது: "சத்தியவானே! நாம் பிரிந்ததுதான் கனவு

இப்பொழுது சேர்ந்து இருக்கிறோம் உயிருடன் இருக்கிறோம்!" சந்தோஷமாக, ஒருவரை ஒருவர் சார்ந்து இருப்பதால் அமைதிகொண்டு, கைகோர்த்துக்கொண்டு ஆசிரமத்திற்குத் திரும்ப முனைகின்றனர். ஆனால் சத்தியவானுக்கு நடந்தது அனைத்தும் கனவுதான் என்று தோன்றவில்லை. அவனது பிரியமான மனைவி எப்பொழுதும்போல் இருந்தாலும், அவளிடம் ஒரு மாறுதலும் தெரிகிறது. அவள் தெய்வமாக மாறிவிட்டது போல் இருக்கிறது. "மனிதன் பூஜை செய்வதற்கு மிகவும் மேன்மையான தெய்வமாகத்" தெரிகிறாள். இந்த மாற்றம் அற்புதமானது. வரவேற்கத்தக்கதுதான் என்றாலும், அவனுக்கு அவனுடைய சாவித்ரி மனைவியாக இருப்பதே விருப்பம். அவன் மன நிலையைப் புரிந்துகொண்ட சாவித்ரி அவனை வணங்கி எழுகிறாள். நான் என்றுமே இந்த சத்தியவானின் சாவித்ரிதான் என்று சொல்கிறாள்.

"வானத்து அரசி அவனது விருப்பத்தை அறிந்து
அவன் திருவடிகளைப்பற்றி தன் தலைமுடியான
அன்பெனும் பட்டினால் அவற்றை அணைத்தாள்.
யாழின் இனிய நாதம்போல் பதில் கூறினாள்.
இப்பொழுது அனைத்தும் மாறியது, ஆயினும்
முன்போலவே இருக்கிறது. நாமிருவரும்
தெய்வத்தின் திருமுகம் கண்டுவிட்டோம்.
தெய்விகமாக நமது வாழ்க்கையும் தொடங்குகிறது.

அவர்கள் வாழ்க்கையில் மனிதன் அனுபவிக்கும் இன்பங்கள் அனைத்தும் இருக்கும். அதே சமயம் தெய்வத்தின் கட்டளைகளை அவர்கள் நிறைவேற்றுவார்கள். இருவரும் ஒருங்கிணைந்து மனித குலத்தை உண்மையையும் தெய்வீகத்தையும் அடையும் வழியில் செல்லத் தலைமை ஏற்று நடத்துவார்கள்.

அவர்கள் இருண்ட அந்த இரவில் நடந்து செல்லும்போது, எதிரே ஒரு பெருங்கூட்டம் வருகிறது. உயர்ந்த ஆடைகள் தரித்த மக்கள், போர்வீரர்கள், ரிஷிகள், பெண்கள் என்று பெரிய கூட்டம் பலவிதமாக சப்தமிட்டவாறு வருகிறது. அவர்கள் அனைவரும் சாவித்ரியையும் சத்தியவானையும் தேடிக்கொண்டு வருகிறார்கள். இவ்விருவரும் சத்தியவானின் அன்னையின் கண்களுக்கே முதலில் தெரிகிறார்கள்.

த்யுமத்ஸேன மகாராஜாவிற்கு கண்ணொளி திரும்பியிருக்கிறது. மீண்டும் சால்வ ராஜ்யாதிபதி ஆகிவிட்டான்! அந்த இளம் ஜோடியைப்பார்த்து கூவுகிறான்: ஓ சத்தியவான்!

இருண்ட காட்டில் என்ன காரணமாக தாமதித்தாய்?
நீயின்றி கண்ணால் எனக்கு உபயோகமில்லை என்பதை
என்ன காரணமாக மறந்து விட்டாய்?
உனக்காகவே என் பார்வை திரும்பியதற்கு மகிழ்கிறேன்.
நீ இன்றி அவற்றால் எனக்கு என்ன பயன்?
உன் கணவனை எங்களிடம் அழைத்து வராமல்
இப்படி நீ இருந்ததில்லையே, சாவித்ரியம்மா!
அவன் அருகில் இருந்தால்தான் எனக்கு உணவில் சுவை.
நான் அவனது தீண்டுதலுக்காகவே உயிருடன் இருந்து
என் வாழ்நாளின் மிகுதியைக் கழித்துக் கொண்டிருக்கிறேன்.

சத்தியவான் நகைக்கிறான். ஆமாம், தாமதமாக வந்ததற்கு சாவித்ரிதான் காரணம். அனைவருக்கும் விந்தையாக இருக்கிறது. உடன் வந்துள்ள ரிஷிகள்அவளைக் கேட்கிறார்கள். அவள் தெளிவாக, சுருக்கமாக "அன்பு, ஒற்றுமை இரண்டுமே வாழ்க்கையின் பொருள்" என்பதை உணர்ந்து கொண்டதாகச் சொல்கிறாள். இதற்கு மேல் என்ன விளக்கம் வேண்டும்? முடிவற்ற இரவில் மரணதேவனிடமும் தேயாத பகலில் இறைவனிடமும் அற்புதமாக, விளக்கமாக வாதம் செய்த சாவித்ரி இப்பொழுது மௌனமாக இருக்கிறாள். இதுதான் அவளைச்சுற்றி இருப்பவர்கள் கண்ட அவளது இயற்கை. ஸ்ரீ அரவிந்தர் தமது காவியத்தை இளங்காலை நேர வர்ணனையுடன் தொடங்கியிருந்தார். இப்பொழுது இன்னுமொரு தெய்வீக விடியலைப்பற்றிக் கூறி காவியத்தை நிறைவு செய்கிறார்.

முழு நிலவு ஆகாயத்தில் வெண்மையான அமைதியில்
கனவு காண, இரவுதேவி தன் ஒளிமிகு அரசாட்சியை
நடத்தினாள். ஒளியின் ஆன்மிக ஆழங்களில்
தனது எண்ணமொன்றை வைத்து, தியானித்து,
மகோன்னத வைகறையைப் பேணியிருந்தாள்."

தேவர்கள் விழிப்புறும் வைகறையில் தொடங்கி, தெய்வீக மனிதர்களுக்கான மகோன்னத வைகறையை எதிர்நோக்கும் காட்சியுடன் சாவித்ரி மகாகாவியம் நிறைவுறுகிறது. தொடக்கத்திலேயே இக்காவியம் கதையை உருவகமாகக்கொண்ட காவியம் (a legend and a symbol) என்று கூறப்பட்டது.

உருவகம் ஏன் என்று கேள்வி எழலாம். இதற்கு விடை காண நம் ஆன்மிக இலக்கியத்தின் தொடக்கத்திற்கு செல்லவேண்டும். யோகத்தின் முக்கியமான அனுபவங்களை அப்படியே சொல்வது சரியல்ல என்று நம் முன்னோர் நினைத்தனர். ஆனால் இந்த அனுபவங்களைப் பதிவு செய்தால்தான் வரும் தலைமுறைகளுக்குப் பயன்படும். அதனால் அவர்கள் ஒரு புதுவிதமான மொழியைக் கையாண்டனர். இதைத் தமிழ் சித்தர் வாக்கில் காண்கிறோம். இம்மொழியை இரட்டைபாஷை என்பதுண்டு.

சித்தர் இலக்கியத்தில் பெரிய அளவில் ஆராய்ச்சி செய்த மீ.ப. சோமசுந்தரம் இப்படிப்பட்ட பாடல்களை ஞானப்பேச்சு என்று எழுதுகிறார்.

"மேலாகப்பார்த்தால் சொற்களின் பொருள் ஒரு வகையாக இருக்கும்; ஆனால் அவற்றின் நுண்பொருள் வேறு ஒரு வகையாக இருக்கும். சில பாடல்கள் வேடிக்கையாகவும் முரண்பாடு நிரம்பியனவாகவும் தோற்றம் தரும். அவற்றின் கருவுக்குள்ளே ஆழ்ந்த ஞானப்பொருள் இருக்கும்........ இப்பாடல்களின் களஞ்சியமாகிய சித்தர் இலக்கியத்தைப் படிப்பவர்களின் உள்ளத்தில், அம்புபோல் பாய்ந்து சென்று தைக்கும் முறையிலே இந்த உருவகக் கதைகள் கருத்திலும் வடிவத்திலும் கூர்மையும் வேகமும் கொண்டு சித்தர்களுடைய ஞான உள்ளமாகிய வில்லிலிருந்து எவ்வி வருகின்றன. இந்த உருவகங்களிலே கருத்தாழம், கற்பனைச்செறிவு, மொழிவன்மை, கவியாற்றல் ஆகிய அனைத்தும் ஒருங்கு கூடியிருப்பதால், கருத்து முழுவதையும் புரிந்து கொள்ள முடியாத வாசகர்களையும், இந்தப் பாடல்களுக்குள்ளே ஈர்ப்பாற்றல் இயங்கி உள்ளத்தைக் கவர்கிறது. இப்பண்பினால்தான் சித்தர் இலக்கியத்திலுள்ள உருவகப் பாடல்கள், பல நூற்றாண்டுகளாக எல்லா நிலையிலுள்ள மக்களாலும் மீண்டும் மீண்டும் பாடப்பெற்றுச் செம்மை இலக்கியமாகவும் நாடோடி இலக்கியமாகவும் நன்கு பாதுகாக்கப்பெற்று வருவதை நாம் காண்கிறோம்."

(சித்தர் இலக்கியம் முதல் பகுதி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1988. பக்கம். 211, 211)

இது ஸ்ரீ அரவிந்தரின் சாவித்ரி காவியத்திற்கும் முற்றும் பொருந்துகிறது.

வேத ரிஷிகளின் கவிதையிலும் இப்படியொரு இரட்டைபாஷை கையாளப்பட்டிருக்கிறது. ரிக் வேதத்திலுள்ள அக்னி ஸூக்தங்களை மொழிபெயர்த்த ஸ்ரீ அரவிந்தர் தமது முன்னுரையில் இந்த இரட்டைபாஷைபற்றிக் கூறியிருக்கிறார். ரிஷிகள் அற்புதமான ஆன்மிகக்காட்சிகளைக் கண்டவர்கள். ஆசானாக சீடனுக்கு பேருண்மைகளை எடுத்துக்கூறும்போது காட்சிகளைச்சிறிது மறைத்து விளக்க வேண்டியதாக இருந்தது. சம்ஸ்கிருத மொழி இப்படி இரட்டை பொருளில் உபயோகிக்க சௌகரியமானது.

"தாங்கள் சொல்ல வந்ததை ரகசியம் காப்பாற்றப்பட வேண்டியிருந்ததால் - உருவகங்கள் மூலம் மறைத்தனர். சம்ஸ்கிருத மொழியில் ஒரே சொல்லுக்கு பல பொருள் கூற முடியும் என்பதால் இது எளிதாயிற்று. ஆனால் அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பது எளிதல்ல. பசு என்பதற்கு கோ என்பர். ஆனால் கோ என்பது ஒளி அல்லது ஒளிக்கீற்றையும் சுட்டுகிறது. கோதம ரிஷி என்றால் ஒளிமிகுந்தவர் என்று பொருள். கவிஸ்திரா என்றால் ஒளியில் பொருந்தியிருப்பவர் என்று பொருள்."

ஸ்ரீ அரவிந்தரும் தமது யோக சாதனையில் அற்புதக் காட்சிகளைக்கண்டவர். அவற்றைப்பதிவு செய்ய இரட்டை பாஷையை செவ்வையாகக் எடுத்தாண்டார். மேம்போக்காகப்பார்த்தால் இக்காவியம் சாவித்ரி-சத்தியவான் சரித்திரம். வரிகளைப்படித்து அவை பற்றித் தியானித்தால் நமது ஆன்மிகப்பயணம் முன்னேறும். இப்பயணம் பயனுற நமக்கு வேண்டியதெல்லாம் பொறுமைதான். சாவித்ரி காவியத்தை மீண்டும் மீண்டும் படிக்கும்போது, காவியத்தில் வரும் வரிகளைச் சிந்திக்கும்போது உள்ளொளி பெருகும். உலப்பிலா ஆனந்தம் கைகூடும். அன்றாட வாழ்க்கையில் நம்மைத் தாக்கும் பயம், ஏமாற்றம், சஞ்சலம், பேராசை, கோபம் முதலியன நீங்கும். நம்மையறியாமல் இரட்டை பாஷையின் முழுமையான பொருள் விளங்கும். இதுவே பூர்ண யோகத்தின் முதல் படியுமாகும். அதனால்தான் ஸ்ரீ அன்னை சாவித்ரி காவியத்தைப் படிப்பதே யோகம் என்றார்.

சாவித்ரி சாதனா சாஸ்திரம். அன்றாட வாழ்க்கைக்கும் ஆன்மிக வாழ்க்கைக்கும் நன்னெறி காட்டும் கையேடு. இக்காவியத்தை நமக்கு அருளிய ஸ்ரீ அரவிந்தர் நாமம் வாழ்க.

தமிழ் கூறும் நல்லுலக மக்களுக்கு டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்களின் சாவித்ரி பற்றிய கட்டுரைத் தொகுப்பை வழங்க ஒரு வாய்ப்பு கிடைத்ததில் சாவித்ரி பவன் மகிழ்ச்சி அடைகிறது. டாக்டர் பிரேமா நந்தகுமார் அவர்களின் சாவித்ரி பற்றிய எழுத்தும் பேச்சும் அனைவராலும் விரும்பப்படுபவை. தன்னுடைய பரந்த இலக்கியப் புலமை, அதே சமயம் எளிமையாக அணுகுதல் என தனக்கே உரிய பாணியில் அதை இணைத்துத் தருவதில் வல்லவர்.

இப்புத்தகம் ஸ்ரீஅரவிந்தரின் மந்திர காவியமான "சாவித்ரி"யிலுள்ள 12 நூல்களையும் விவரிக்கும் விதமாக பன்னிரெண்டு தொடர்கட்டுரைகளையும் ஆசிரியரின் அறிமுகவுரையையும் கொண்டது. இப்புத்தகம் சாவித்ரி ஆர்வலர்களுக்கு ஓர் வரப்பிரசாதமாக அமையும் என நம்புகிறோம்.

ISBN: 978-81-903346-5-5




Rs. 150/-